



# தளதளக்கும் ஈனோ வயிற்றுக் கோளாறுகளிலிருந்து எட்டே விநாடிகளில் நிவாரணமளிக்கிறது!

***அஜீர்ணம், நெஞ்செரிச்சல், அல்லது வாயுப் பொருமல் இவைகளில் எதையும் ஈனோ நிவர்த்திக்கிறது!***

ஒரு கிளாஸ் தளதளக்கும் ஈனோ ப்ரூட் ஸால்ட் சாப்பிட்டால் எட்டே விநாடிகளில் வயிற்றுக் கோளாறுகள் சீராகின்றன. மிதமாக பேதி ஏற்படவிரும்பினால் வெறும் வயிற்றில் சிறிது பெரிய 'டோஸ்' ஈனோ அருந்தினால் போதும். எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் ஈனோ வைத்திருங்கள்.




இப்பொழுது மோசடியைத் தடுக்கும் புதிய பாட்டிலில் விற்கப் படுகிறது
(3 அளவுகளில் கிடைக்கும்)

## ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

***அமித அமிலங்களை அடக்கும் தள தளக்கும் பானம்***

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்
குரூப் லாபரட்டரீஸ் (இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17 | இதழ் 29

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

ஹேவிளம்பி | மாசி 5௳

# புதிய சட்டமும், பயிர்த் தொழிலும்

**பா**ரதம் விவசாயத்தை முக்கிய தொழிலாகக் கொண்ட நாடு. விவசாயத்தையே நம்பி வாழும் கோடிக்கணக்கான மக்களுக்கு வாழ்க்கையில் சந்தோஷமும் உற்சாகமும் அளிக்கும் வகையிலும் உணவு உற்பத்தியைப் பெருக்கும் வகையிலும் திட்டம் வகுத்து விட்டு, பின்னர்தான் மற்றத் தொழில் திட்டங்களைப்பற்றி எண்ண வேண்டும். விவசாயத்தைச் சீர்ப்படுத்தாமல் எந்தத் திட்டம் போட்டாலும் முகத்துக்கு அழகு செய்துகொண்டு உடலைக் கவனிக்காமற் போனால் என்ன பயன் விளையுமோ, அந்தப் பயன்தான் விளையும்.

முதல் ஐந்து வருடத் திட்டத்தில் நிலச் சீர்திருத்தங்கள் பிரமாதமாகச் செய்து விட்டதாகப் பேசிக் கொண்டார்கள். நாட்டில் உணவுப் பஞ்சத்தை வெற்றி கொண்டு விட்டதாக மார்தட்டிக் கொண்டார்கள். ஆனால் உண்மையில் நிகழ்ந்தது என்ன? விவசாயத்தில் கணிசமான முன்னேற்றம் ஏற்படவில்லை. புதிய நிலச் சட்டங்களால் நிலத்தை உடைமையாகக் கொண்டவர்களுக்கும், நிலத்தைப் பண்படுத்தி உழுபவர்களுக்கும் ஒருசேர நிலத்தில் ஊக்கமோ உற்சாகமோ இல்லாமற் போய்விட்டது. அதன் விளைவாக உற்பத்தி கணிசமாகக் குறைந்து நாட்டில் உணவுப் பற்றாக்குறையும் ஏற்பட்டு விட்டது. பழையபடி வெளிநாட்டிலிருந்து உணவுப் பொருள்கள் இறக்குமதி செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது!

இந்த நிலையைப் பார்த்த பிறகாவது நமது விவசாயச் சட்டங்கள் எதிர்பார்த்த பலனை அளிக்காததினால் தவறானவை; நமது நாட்டுச் சூழ்நிலைக்குப் பொருந்தாதவை என்பதை சர்க்கார் உணர்ந்திருக்க வேண்டும்.

ஆனால் நமது நாட்டு அரசியல் தலைவர்களோ இளிப் பிள்ளைகளைப்போல் என்றைக்கோ படித்த பாடத்தை இன்றைக்கும் திரும்பத் திரும்ப ஓதி வருகிறார்களே தவிர சிந்தனையை உபயோகிப்பதாகவோ, நேரடி நிலைமையை உணர்வதாகவோ தெரியவில்லை. கௌஹாட்டி காங்கிரஸில் காங்கிரஸ் தலைவர் தேபர் 'உணவுப் பிரச்னை தீர விவசாய சம்பந்தமான சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். நில உடைமைக்கு வரம்பு கட்ட வேண்டும்' என்று பழைய பாடத்தையே திருப்பிப் படித்தார். இதைப் பார்த்துத் தமிழ்ப் பெருமக்கள் உள்ளூற நகைத்துக் கொண்டார்கள். காங்கிரஸில் நேர்முகமாக நிலைமையைப் பார்த்து முடிவு கட்டும் வழக்கமும், நாட்டுக்குப் புதுமுறையில் வழிகாட்டும் தலைமைப் பண்பும் போய்விட்டன என்றுதான் ஏக்கமுற்றார்கள்!

இந்த ஏக்கம் தீர்ந்தபாடில்லை. அதற்குள் 'கௌஹாட்டியில் செய்த காங்கிரஸ் தீர்மானத்தை அப்படியே பின்பற்ற நாங்கள் தயாராக இருக்கிறோம்' என்று சென்னை சர்க்கார் சொல்வதைப் பார்த்து நமக்குச் சிரிப்புத்தான் வருகிறது!

சென்னை கவர்னர் திரு விஷ்ணுராம் மேதி அவர்கள், சென்ற வாரம் சனிக்கிழமை சட்டசபையில் ஓர் சுருக்கமான பிரசங்கம் செய்தார்.

அந்தச் சுருக்கமான பேருரையில் சாரமான வரிகள் இவைதான்:—

"தாற்காலிகமாக நில உடைமைக்கு உச்சவரம்பு கட்டி, அந்த வரம்புக்கு மேற்பட்டு, நிலத்தைச் சொந்தமாக்குவதைத் தடை செய்யும் வகையில் ஓர் இடைக்காலச் சட்டத்தைக் கொண்டுவர அரசாங்கம் எண்ணியுள்ளது!"

இன்று தமிழ்நாட்டில் நிலம் படைத்தவர்கள் யாரும் நிலத்தை அதிகமாக வாங்கித் தங்கள் நிலச் சொத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்ற உற்சாகம் கொண்டவர்களாக இல்லை. கொஞ்ச நஞ்சம் நிலத்தைப் பெற்றிருப்பவர்களும் நிலத்தை விற்றுவிட்டுத் தங்கள் கையைக் கழுவிக் கொள்ள வேண்டும் என்றுதான் பார்க்கிறார்கள்! எத்தனையோ நிலச்சுவான்கள் தங்கள் நிலங்களை யாரும் வாங்க மறுக்கிறார்களே என்றுதான் ஏங்குகிறார்கள்! ஆகவே சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் யாரும் நிலத்தை வாங்கிச் சொத்து சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று விரும்புவதாகத் தெரியவில்லை. நிலம் படைத்தவர்கள் வாங்குவார் இல்லாமல் தவிப்பதைத்தான் பார்க்கிறோம்!



திரு விஷ்ணுராம் மேதி

இந்த நிலையில் நிலத்துக்கு உச்ச வரம்பு கட்ட ஓர் இடைக்காலச் சட்டம் கொண்டு வரப் போவதாகப் பேசுவது விந்தையாக இருக்கிறது!

ஆனால் இப்படியெல்லாம் சென்னை சர்க்கார் ஏன் பேசுகிறார்கள்?

கௌஹாட்டி காங்கிரஸில் செய்த தீர்மானத்தை அப்படியே பின்பற்றுவதாகக் காட்டிக்கொண்டு நல்ல பெயர் காங்கிரஸ் மேலிடத்தாரிடம் சம்பாதிக்க வேண்டாமா? அதற்காகத்தான்!

சென்னை மந்திரிகள் காங்கிரஸ் மேலிடத்தாரிடம் இப்போதைக்கு நல்ல பெயர் எடுத்துவிடலாம். ஆனால் தமிழ்நாட்டு விவசாயத்துக்கு நிரந்தரமான தீங்கு செய்து விட்டவர்களாவார்கள்.

நாட்டில் நிலங்கள் சிறுகச் சிறுகப் பிரிந்து போவதால் அதில் போதிய கவனம் செலுத்த முடியாமற் போகிறது. அதனால் விளைவு பாதிக்கப்படுகிறது என்றுதான் விவரம் அறிந்தவர்கள் எல்லோரும் சொல்லுகிறார்கள்! 'உச்சவரம்புச் சட்டம்' நிலங்களைப் பயன் விளைவிக்காத முறையில் சிறுசிறு துண்டுகளாகப் பிரிக்கத்தான் உதவுமே தவிர வேறு எந்தவிதப் பயனும் விளைவிக்காது.

நிலமில்லாதவர்களுக்கு நிலமளிக்கும் வாய்ப்பு இதில் உண்டு. அதனால் நிலமில்லாதவர்களின் வோட்டுக்களெல்லாம் காங்கிரசுக்கே எதிர்காலத்தில் கிடைக்கலாம் என்று எதிர்வாதம் செய்யலாம்!

இப்படி எதிர்வாதம் செய்பவர்களுக்கு ஒரே ஒரு பதில்தான் உண்டு.

---

## அரபுநாடுகளிடை புது சக்தி

எகிப்து - சிரியா ஐக்கியம்

எகிப்தும், சிரியாவும் சேர்ந்து ஓர் ஐக்கிய குடியரசு ஏற்படுத்தத் தீர்மானித்து விட்டது!

# புனிதமாக்குகிறார்!



***இன்ஷுரன்ஸ் ஊழல் காரணமாக மத்திய மந்திரி சபையில் யார் யார் ராஜிநாமா செய்வார்கள் என்பது பற்றிப் பலவிதமான வதந்திகள் நாட்டில் உலவி வருகின்றன. என்றாலும் பாரதப் பிரதமர் தமது மந்திரி சபையைப் புனிதப்படுத்திப் புனர்ஜன்மம் அளிக்கவே முயன்று வருகிறார்.***

---

நிலமில்லாதவர்கள் நில உடைமை பெற்று இன்று மகிழலாம். நிலத்தைப் பண்படுத்தி உழுவதற்கு வேண்டிய மாடுகள், உரம், ஏர், விதை முதலியவை வாங்க முடியாமல் திணறி, பெற்ற நிலத்தைப் பயன்படுத்த முடியாமல் திகைப்பார்கள். அப்போது, சர்க்கார் சிறிது காலத்துக்குக் கடன் கொடுத்து உதவலாம். ஆனால் இது நீடித்து நடக்க முடியாது. அப்போது புதிதாக நிலம் பெற்றவர்கள் தங்களுக்கு உதவுவார் இன்றி மனக் கசப்படைவார்கள். அந்த நிலையில் அவர்கள் வோட்டு காங்கிரஸுக்குத்தான் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. மேலும், 'உழுபவனுக்கே நிலம்' என்ற வாதம் ருஷ்யா போன்ற நாடுகளிலேயே படுதோல்வி யடைந்துள்ளது. ருஷ்யாவில் தற்போது தனி நபர்களை விவசாயம் மேற்கொள்ளும்படியும் நில உடைமையை ஏற்றுக் கொள்ளும்படியும் சொல்லி வருகிறார்கள்! நிலத்தைக் கவனித்துக் கொள்ளச் சொந்தக்காரர்களும் வேண்டும். அதில் வேலை செய்ய உழவர்களும் வேண்டும். இவர்கள் இருவருடைய தொடர்பைச் சுமுகமாக, நல்லபடியாக நிலைநிறுத்தும் சட்டங்கள்தான் தேவை. ஒருவர் நிலையில் இன்னொருவரை ஏற்றி வைக்கும் சட்டங்கள் நாட்டுக்குப் பயன் தராது. ஆகவே, கௌஹாட்டி தீர்மானத்தைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொண்டு நாட்டு விவசாயத்தைப் பாழ்படுப்பதில் சிறிதும் புண்ணியமில்லை.

நாம் இப்படிச் சொல்வதால் நிலம் படைத்த பெரிய மிராசுதார்களுக்குப் பரிந்து பேசுவதாக யாரும் எண்ணலாகாது.

நமது நோக்கம் நாட்டின் உணவு உற்பத்தி பெருமளவு பெருக வேண்டும் என்பதே. சுதந்திரம் பெற்றுப் பத்தாண்டுகளாகியும் நாம் வெளிநாட்டிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்யாமலிருக்க முடியவில்லை. எப்பாடு பட்டாகிலும் உணவு விஷயத்தில் நாம் நம் சுயதேவையைப் பூர்த்தி செய்து கொண்டவர்களாக விளங்கவேண்டும். இதற்காக நாம் பல ஆண்டுகள் சொல்லிக்கொண்டு வந்த கொள்கைகளை விட்டுவிட வேண்டியிருந்தாலும் நாட்டு நன்மையைக்கருதி விட்டுவிடலாம். வறட்டுக் கொள்கையை விட நாட்டு மக்களின் நன்மையே மிகவும் முக்கியம். உடும்புப் பிடிபோல் பத்தாம் பசலிக் கொள்கையைப் பிடித்துக் கொண்டு நடைமுறைக்கு ஒவ்வாத காரியங்கள் செய்ய வேண்டாம். இதுவே நமது கோரிக்கை!

# என்ன சேதி?

## சிமெண்ட் விலை குறையாததேன்?

சமீபத்தில் நடந்த அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனியின் வருஷாந்தரக் கூட்டத்தில் அதன் தலைவர் இரு தரம்ஸே எம். கடாவ் பேசியபோது தற்போது நிலவும் சிமிட்டியின் விலை உயர்வைப் பற்றி முக்கியமான தகவல்கள் சிலவற்றை வெளியிட்டார். இந்திய சிமிட்டித் தொழில் உலகத்தில், இந்த ஸ்தாபனத்தை ஒரு குட்டி சாம்ராஜ்யமாகவே கருதலாம். நாட்டின் மொத்த சிமிட்டி உற்பத்தியில் பாதிக்குமேல் இந்த ஒரு ஸ்தாபனமே உற்பத்தி செய்கிறது. அவ்வாறு உற்பத்தி செய்த சிமிட்டி முழுவதையும் ராஜ்ய வர்த்தக ஸ்தாபனத்துக்கு டன்னுக்கு 54·50 ரூபாய் வீதம் விற்றுவிடுகிறது. விற்பனைச் செலவுகளுக்காக டன்னுக்கு 1·50 ரூபாய் இதற்கு உபரியாக அளிக்கப்படுகிறது. கோணிப்பைகளுக்காக மூன்று மாதங்களுக் கொருமுறை டன்னுக்கு இவ்வளவு என்று நிர்ணயம் செய்யப்படுகிறது. அந்த வகையில் இப்போது டன்னுக்கு 13·64 ரூபாய் கொடுக்கப்படுகிறது. எனவே, உற்பத்தியாளரின் மொத்த விலை டன்னுக்கு ரூபாய் 69·64 தான். நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு அனுப்புவதால் ஏற்படும் ரயில் கட்டணங்கள் டன்னுக்கு ரூபாய் 15 என்றும் அரசாங்கம் விதிக்கும் கலால் வரிக்காக டன்னுக்கு ரூபாய் 20 என்றும் சேர்த்துக் கொண்ட பிறகும் சிமிட்டி விநியோகிக்கப்பட வேண்டிய விலை டன்னுக்கு ரூ. 104·64 என்றுதான் ஆகும். ஆனால் உண்மையில் நாட்டின் பல பகுதிகளிலுள்ள மொத்த வியாபாரிகளுக்கு விநியோகிக்கப்படும் விலை 117.50 ரூபாய். அதாவது உற்பத்தியாளர் மொத்த விலைக்குமேல் டன்னுக்கு 12·50 ரூபாய் லாபம் வைத்து ராஜ்ய வர்த்தக ஸ்தாபனம் சிமிட்டி விநியோகஸ்தர்களுக்கு விற்கிறது. இவர்களிடமிருந்து சிமிட்டி உபயோகிப்போர்கள் பெற்றுக் கொள்ளும் போது விலை ரூ. 130 ஆகிவிடுகிறது.

அரசாங்க ஸ்தாபனம் இவ்வாறு அபரிமிதமாக லாபம் வைத்து விற்பதை என்னவென்று சொல்லுவது? மேலும், சென்ற மேமாத பட்ஜெட்டில் சிமிட்டியின் பற்றாக்குறை ஏற்பட்டிருப்பதாலும், இறக்குமதி செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளதாலும் சிமிட்டியின் உபயோகத்தைக் குறைப்பதற்காக வேண்டிய கலால் வரி டன்னுக்கு ரூபாய் 20 வீதம் விதிக்கப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டது. ஆனால் இப்போது சிமிட்டி உற்பத்திப் பெருக்கினால் இறக்குமதித் தேவையில்லாது போனதுமன்றி, நாட்டில் தேக்கம்கூட ஏற்பட்டிருக்கிறது. எனவே சிமிட்டியின் விநியோக விலையை இப்போதிருக்கும் உயர் நிலையில் இனிமேலும் வைத்திருப்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. அடுத்த ஆண்டு வரவு செலவுத் திட்டம் சமீபத்தில் சமர்ப்பிக்கப்படவிருக்கிறது. அதற்குள்ளாகவாவது சிமிட்டியின் விலை குறைய வழி பிறக்குமென நம்புகிறோம்.

## புலுசுவின் மறைவு

ஆந்திர நாட்டைச் சேர்ந்த புலுசு சாம்பமூர்த்தி அவர்கள் இளமையில் மிக ஆடம்பரமாக வாழ்ந்து வந்தார். காந்தி மகானின் 'அழைப்புக் குரல்' கேட்டு, ஆடம்பர வாழ்க்கையை உதறி மிக எளிய வாழ்க்கை மேற்கொண்டு சுதந்திரப் போராட்டத்தில் குதித்தார். ராஜாஜி முதன் முறை மந்திரி சபை அமைத்த போது, சாம்பமூர்த்தி அவர்களையே மிகப் பொறுப்பு வாய்ந்த சட்ட சபையின் சபாநாயகர் பதவியை ஏற்றுக் கொள்ளச் சொன்னார். சாம்பமூர்த்தி அதை மிகத் திறம்பட நிர்வகித்து நல்லபெயர் சம்பாதித்துக் கொண்டார்.

பட்டம் பதவிக்கு ஆசை கொள்ளாமல், தேசத்துக்காகத் தன்னலமற்ற சேவை செய்து வந்த தேசபக்த பரம்பரையைச் சேர்ந்தவர்களில் மற்றும் ஒருவரை இழந்து விட்டோம். பாரத அன்னை கண்ணீர் வடிக்கிறாள்!

## வாய் முத்தம் சிந்திவிடுமோ!

உன் அருகிருந்து
'நீமுத்தம் தா'வென்று அவர் கொஞ்சும் வேளையிலே நித்தநித்தம்
வேய்முத்த ரோடென் குறைகள் எலாம்மெல்ல மெல்லச் சொன்னால்
வாய்முத்தம் சிந்தி விடுமோ நெல்வேலி வடிவம்மையே! — பழம்பாடல்

எவ்வளவு அழகாக இந்தச் சிவ பக்தர் அன்னையை வேண்டிக் கொள்கிறார். சிவராத்திரித் திருநாள் வருகிறது. தென்னாடுடைய சிவனுக்குத் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் பக்தியுடனும் சிரத்தையுடனும் பூஜைகள் நடைபெறும்.

தென்னாடுடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!

# அருள் வாக்கு

இப்போது நடமாடும் சந்நியாசிகள் எல்லாருமே சாஸ்திரத்தில் விதித்த ரீதியில் உண்மை சந்நியாசிகள் அல்ல. புத்த மதத்தில் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்காவது பாரமார்த்திக அனுபவம் ஏற்படவேண்டி பிக்ஷுவாக இருக்க வேண்டுமெனக் கூறப்படுகிறது. அப்படி பிக்ஷுவாக ஆகிறவன் அம்மதத்தின்படி பின்னர் குடும்பஸ்தனுக ஆகலாம். ஆனாலும் ரொம்பப் பேர் ஆயுள் முழுவதும் பிக்ஷுவாகவே இருக்கிறார்கள். பௌத்த பிக்ஷுகளைப் பார்த்து மற்றும் பலரும் ஆத்ம ஞானம் இல்லாமலே சந்நியாசிகளாகி ஜீவனத்திற்கு உழைக்க வேண்டிய நிர்ப்பந்தமின்றிச் சுலபமாக வாழ்க்கை நடத்தப் பார்க்கின்றனர். இதனால்தான் தென்னாட்டில் பல பரதேசிகளையும் வட நாட்டில் பல சாதுக்களையும் பார்க்கிறோம். இவர்களில் மிகப் பெரும்பாலோரிடம் உண்மை சந்நியாசி லக்ஷணம் காணப்படுவதில்லை. தகுந்த அதிகாரி ஒருவரிடம் உபதேசம் பெற்று ஒரு சம்பிரதாயத்திற்கு உட்பட்டும் இவர்கள் இருப்பதில்லை. அதனால் முக்கியமான பிரும்ம ஞானத்திற்கு வேண்டிய ஆற்றலையும் இவர்களிடம் காண்பதற்கில்லை. மற்றப் பிச்சைக்காரர்களைப் போல இவர்களும் பிழைப்புக்காக ஆகாரத்தைத் தேடுகிறார்கள். இவர்கள் தான் சமூகத்தில் ஒரு புல்லுருவி போல் இருக்கின்றனர். இத்தகைய பிரிவினரை நிவர்த்திக்க வேண்டுவது அவசியம். ஆனால் போலிகளைப் போக்குவதில் உண்மை சந்நியாசிகளையும் ஒழித்து விடக்கூடாது. களையைப் பிடுங்கி எறிய வேண்டுமே அல்லாது பயிரையே அழித்துவிடக் கூடாது. உண்மை சந்நியாசிகள் ஏதோ சமூகத்துக்கு உழைக்காதவர்கள் என்று நினைத்து அவர்களையும் ஒழிக்கப் பார்க்கக் கூடாது. தண்டமும் கமண்டலமும் கூடிய உண்மை சந்நியாசிகளை அவர்கள் வாழ்க்கை நடத்தும் முறையிலிருந்து கண்டு கொள்ளலாம்.

சந்நியாசிகளுக்கு ஒரு சங்கம் ஏற்படுத்துவதென்பது சரியல்ல. அது சந்நியாசி லக்ஷணமும் ஆகாது. சந்நியாசி தனித்து வாழ்க்கை நடத்த வேண்டும். பிறர் சங்கத்தைக் கூடிக் கூட்டம் தவிர்க்க வேண்டும். சங்கம் முதலியவை ஏற்படுத்தினால் மற்ற லௌகிக ஜனங்கள் போலவே இவர்களும் ஆகிவிடுகிறார்கள். அவர்கள் ஆசிரம தர்மமும் குலைந்து விடும். பிரும்மசாரி, சந்நியாசி தவிர மற்றவர்கள் பிச்சை எடுப்பதை ஒரு பிழைப்பாக வைத்திருக்கக் கூடாது. நல்ல காத்திரமுள்ள பிச்சைக்காரர் பிரச்னையைத் தீர்க்க இரு வழிகள் உண்டு. ஒன்று இவர்களுக்கு வேலை ஏற்படுத்தித் தரவேண்டும். இரண்டாவது ஏழை பணக்காரர்களிடையே உள்ள வாழ்க்கை ஏற்றத் தாழ்வைப் போக்க வேண்டும். வேலை தேடித் தருவது சர்க்கார் பொறுப்பு. இரண்டாவது காரியத்தைச் செய்வது பொது மக்கள் பொறுப்பு.

காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் பிப்ரவரி மாதம் முதல் தேதி சென்னை ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப் பாடசாலைக்கு விஜயம் செய்தார்.



# மதுரையில் ராஜாஜி

சங்கம் வளர்த்த பதி மதுரை. முன்னாட்களில் எந்த உயரிய நூலும் சங்கப் பலகை ஏற்றுக் கொண்டால்தான் தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்றுக்கொள்ளும். அப்படிச் சங்கப் பலகை ஏற்றுக்கொண்ட நூல் தெய்வப் புலமை திருவள்ளுவர் செய்த திருக்குறள். அது இன்றும் உலகம் போற்றும் உத்தம நூலாகப் போற்றப்படுகிறது.

இதை உணர்ந்துதான் தமிழகத்து ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் பாரத நாட்டின் முன்னேற்றத்தைக் கருதி அவர் உள்ளத்தில் தோன்றும் எந்தக் கருத்தையும் மதுரை மக்கள் முன்னிலையில் அரங்கேற்றி, அவர்கள் ஒப்புக் கொண்டால்தான் நாட்டுக்கும் பயன் விளைக்கும் என்ற தீவிரமான உறுதி கொண்டிருக்கிறார்.

ஆட்சிமொழி சம்பந்தமாக ராஜாஜி கொண்டுள்ள கருத்து இப்பொழுது பாரத மக்கள் அனைவருமே நன்கு அறிவார்கள். மத்திய சர்க்காரின் ஆட்சி மொழி விஷயத்தில் எத்தகைய மாறுதலும் அவசியமில்லை; இப்பொழுது இருப்பது போலவே ஆங்கிலமே இருந்து விட்டுப் போகட்டும் என்று சொல்லி வருகிறார். இந்தக் கருத்தை மதுரை மக்களின் முன்னிலையில் வைக்க, சென்ற வாரம் ராஜாஜி மதுரைக்கு விஜயம் செய்தார்.

ராஜாஜிக்கு உடல் நிலை சரியில்லாமலிருந்ததின் காரணமாக மதுரை மக்கள் பெருந்திரளாகக் கூடி ரயில்வே ஸ்டேஷனில் கொடுக்க இருந்த வரவேற்பை ஏற்றுக் கொள்ள இயலாமல், மதுரைப் பாலம் ஸ்டேஷனில் இறங்க வேண்டியதாயிற்று. எனினும் அன்று மாலை திலகர் சதுக்கத்தில் திரு பி. டி. ராஜன் அவர்கள் தலைமையில் மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது. சுமார் நாற்பதாயிரம் மக்கள் அந்த மைதானம் முழுதும் நெருக்கமாய் உட்கார்ந்து கொண்டிருந்தனர். சுற்றுப்புறமுள்ள மதின் சுவர்களின் மீதும் வீடுகளின் மீதும் ஏறி அமர்ந்திருந்தனர். ஆட்சிமொழி ஆங்கிலமே இருக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார். தமது வாதங்களுக்கு நேரிடையாகப் பதில் அளிக்காமல் மந்திரிகளும் மற்றவர்களும் கூறும் வாதங்களுக்கு ராஜாஜி தக்க பதில் அளித்து வந்தார். சுமார் இரண்டு மணி நேரம் மக்கள் மிகுந்த அமைதியோடு ராஜாஜியின் கருத்துக்களைக் கேட்டனர்.

ஆட்சிமொழி விஷயம் முக்கியமாக எதிர்கால சந்ததிகளைப் பெரிதும் பாதிக்கும் விஷயம். ஆகவே மதுரை நகரிலுள்ள எல்லாக் கல்லூரி மாணவர்களும் (சுமார் மூவாயிரம் பேர்) மறுநாள் மாலை தியாகராய கல்லூரி திறந்த வெளி மைதானத்தில் குழுமியிருந்தனர். அந்தக் கூட்டத்தில் ராஜாஜி ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டிய அவசியத்தை எடுத்துரைத்து அவர்கள் மனத்தில் பதிய வைத்தார். அன்றையப் பிரசங்கத்தைக் கேட்டவர்களின் மனத்தில் இனி தவறிக்கூடச் சந்தேகம் ஏற்படாது!

தேசத்தில் மூன்றில் ஒரு பகுதியினரே இந்தி பேசுபவர்கள்; இந்தி பேசாத மக்களின் பகுதி பெரும் பகுதி என்பதைத் தேசப் படத்தை வைத்து ராஜாஜி விளக்கிக் கூறினார்.

இந்த இரண்டு கூட்டங்களிலும் மதுரை நகர்த் தமிழ்ப் பெரு மக்கள் ஆர்வத்தோடு கேட்ட பான்மையைப் பார்த்தபோது, ஆட்சி மொழி ஆங்கிலமாகத்தான் இருக்க வேண்டும் என்ற கருத்து நிச்சயம் வெற்றி பெறும் என்ற உறுதி ஏற்பட்டது. இவ் விஷயத்தில் தமிழ் நாட்டிலுள்ள சிந்தனைச் செல்வர்கள் அத்தனை பேரும் இப்பொழுதே மனக்கரும் கவனமும் செலுத்தி நாடு முன்னேற ஒத்துழைக்க வேண்டும்! தும்பை விட்டு விட்டு, பின்னால் வாலைப்பிடிக்க முயல்வதில் பயனில்லை.

## பால் வேண்டாம்! பானை விட்டால் போதும்!!



# தமிழருக்குப் புதிய தொல்லை

ரஜனி

—கொழும்பு, ஜனவரி 31உ.

ஏற்கனவே பல விதங்களிலும் ஒடுக்கப்பட்டு, புண்பட்டுப் போயிருக்கும் தமிழர்களின் மனத்தை வேதனைக்குட்படுத்தும் ஒரு நடவடிக்கையை இவ் வாரம் அரசாங்கம் எடுத்திருக்கிறது. 18-வது தொகுதி புதிய அரிசி ரேஷன் புத்தகங்கள் இப்பொழுது நாடெங்கும் விநியோகிக்கப் படுகின்றன. அதில் பெயர் எழுதிக் கொடுக்கும்பொழுது தமிழர்கள் பெரும் பகுதியினர்களாக வசிக்கும் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் தமிழிலும் மற்ற இடங்களில் சிங்களத்திலும் பெயர் எழுதிக் கொடுக்கிறார்கள். பல வகுப்பினரும் கலந்து வசிக்கும் கொழும்பைப் போலொத்த பெரிய நகரங்களில் சிங்களத்திலேயே பெயர் எழுதிக் கொடுக்கப்படுகின்றது. உண்மையைச் சொல்லப்போனால் ஜன கணித கணக்கின்படி கொழும்பில் சிங்களவர்களின் ஜனத்தொகையை விடத் தமிழர்களின் ஜனத்தொகையே அதிகம். இந்த நிலைமையில் கொழும்பிலுள்ள தமிழர்களின் பெயர்களைச் சிங்களத்தில் எழுதிக் கொடுக்க நியாயமேயில்லை. கொழும்பில் பல வகுப்பினர்களும் வசிப்பதை முன்னிட்டே கொழும்பு முனிசிபல் சபை அதனுடைய சகல நடவடிக்கைகளையும் சிங்களத்திலேயே நடத்தவேண்டுமென்ற தீர்மானத்தை நிராகரித்து, தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் நடத்தி வருகிறது. அப்படியிருக்க, அரிசி ரேஷன் புத்தகவிஷயத்தில் அரசாங்கம் தனிச் சிங்களச் சட்டத்தை அமுல் நடத்த என்ன நியாயம்?

சிங்களம் மாத்திரம் இலங்கையின் உத்தியோக பாஷையாயிருக்க வேண்டுமெனப் பார்லிமெண்ட் சபை சட்டம் இயற்றியுள்ள பொழுதிலும் மொழித் தகராறுக்கு ஒரு சுமுகமான தீர்வு காணும் வரையில் பழைய நிலைமையே நீடிக்க வேண்டு மென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதோடு, நியாயமான அளவு தமிழ் மொழி உபயோகத்துக்குக் கொண்டுவர விரைவில் சட்டமியற்றப் போவதாகவும் தமிழரசுக் கட்சித் தலைவர்களுக்குப் பிரதம மந்திரி வாக்குறுதியளித்திருக்கிறார். இந்த நிலைமையில் தமிழர்களின் அரிசி ரேஷன் புத்தகங்களில் சிங்களத்தில் பெயர் எழுதிக் கொடுத்து அவர்கள் மனம்புண்படச் செய்வானேன்? தனிப்பட்ட சில மந்திரிகள் செய்யும் இது மாதிரியான விஷமத்தனங்களே நாட்டின் ஐக்கியத்தைச் சீர்குலைத்து வகுப்புத் துவேஷத்தை வளர்க்கின்றன. எப்பொழுதும் போல ஆங்கிலத்தில் பெயர் எழுதிக் கொடுத்திருந்தால் யாரும் மனம் நோகத் தேவையிருக்காது. இதைப் பற்றித் தமிழரசுக் கட்சித் தலைவர்கள் பிரதம மந்திரியிடம் ஆட்சேபனை தெரிவித்துக் கொண்ட பொழுது உணவு மந்திரியின் மேற்படி இனப் பாகுபாடு உத்தரவைப் பிரதம மந்திரி உடனே மாற்றி விட்டார். ஒவ்வொருவரும் எந்த பாஷையில் பெயர் கொடுத்திருக்கிறார்களோ அந்த பாஷையிலேயே ரேஷன் புத்தகங்களில் பெயர் எழுதிக் கொடுக்கப்பட வேண்டுமென்று பிரதமர் உத்தரவு போட்டிருக்கிறார்.

* * *

கொழும்பு, பிப்ரவரி 7உ.

இவ்வாரம் இலங்கை தனது பத்தாவது சுதந்திர விழாவை அமைதியான முறையில் கொண்டாடியது; இதில் கலந்து கொள்ளுவதற்காக இந்திய உபஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனும், பிரிட்டன், ஆஸ்திரேலியா, மலாயா, கானா முதலான காமன்வெல்த் தேசப் பிரதிநிதிகளும் விஜயம் செய்திருந்தார்கள். சுதந்திர தினப் பொதுக் கூட்டத்தில் பிரதம மந்திரி திரு பண்டார நாயகா பேசியபொழுது, தமக்கும் தமிழரசுக் கட்சித் தலைவர்களுக்கு மிடையிலிருந்த தவறான எண்ணத்தினால் மொழித் தகராறு சுமுகமாகத் தீர்ந்து போய் விட்டதாயும் இலங்கைக்கு நல்ல காலம் பிறந்துவிட்டதற்கு இது ஒரு சிறப்பான அறிகுறி என்றும் கூறினார். உண்மையைச் சொல்லப்போனால் ஒரு தேசியத் திருவிழாவைக் கொண்டாடும் விஷயத்தில் கூட நாட்டு மக்களிடையில் கருத்து ஒற்றுமையில்லை யென்பதை இவ்வருட சுதந்திர தினக் கொண்டாட்டம் சந்தேகத்துக்கு இடமின்றிப் பிரகடனப்படுத்தி விட்டது.

வடக்கு கிழக்கு மாகாணங்களிலுள்ள தமிழ் மக்கள் சுதந்திர தினத்தைப் பகிஷ்கரித்துத் துக்க தினம் அனுஷ்டித்தார்கள். தமிழர் வீடு தோறும் கறுப்புக் கொடி காணப்பட்டதோடு யாழ்ப்பாணம் முனிசிபல் சபைக் கட்டடத்திலும் கறுப்புக் கொடி பறக்கவிடப்பட்டிருந்தது. தமிழ்த் தலைவர்கள் பல இடங்களிலும் நடத்திய கூட்டங்களில் சுதந்திரம் சிங்களவர்களுக்கு மட்டும் கிடைத்திருப்பதாயும் தமிழ் மக்களுக்குப் பரிபூரண சுதந்திரம் கிடைக்கும் வரையில் சுதந்திர விழா தமிழ் பேசும் ஜனங்களுக்குத் துக்க தினமாகவே இருக்குமென்றும் சொன்னார்கள். யாழ்ப்பாண முற்றவெளியில் நடைபெற்ற ஒரு பிரும்மாண்டமான பொதுக் கூட்டத்தில் தமிழ் அரசுக் கட்சித் தலைவர் ஸ்ரீ வி. வன்னியசிங்கம் பேசியபோது ஹிந்தித் திணிப்பைப் பற்றி ராஜாஜி அடிக்கடி பேசி வருவதை இலங்கை அரசாங்கம் ஆழ்ந்து கவனிக்க வேண்டுமென்றார். தமிழர் மனத்தைப் புண்படுத்தும் நடவடிக்கைகளை அரசாங்கம் அடிக்கடி எடுத்து வருவதாயும், அரசாங்கத்திடம் மனமாறுதல் ஏற்படாவிட்டால் தமிழர்கள் சமஷ்டி ஆட்சி முறை கேட்பதைக் கைவிட்டுத் தனித் தமிழ் நாடு கேட்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம் என்றும் திரு வன்னியசிங்கம் ஒரு எச்சரிக்கை விடுத்தார்.

அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் தலைவராகிய திரு ஜி. ஜி. பொன்னம்பலம் சுதந்திர தின பகிஷ்காரக் கூட்டமொன்றில் பேசிய பொழுது தமிழ் மக்களுக்குப் பரிபூரண சுதந்



**இலங்கை சுதந்திர தின விழாவுக்காக இலங்கைக்கு விஜயம் செய்திருந்தார் பாரதத்தின் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன். அப்பொழுது யாழ்ப்பாணம் நகரசபை டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கு ஒரு பொது வரவேற்பு அளித்தது. இந்த வரவேற்புக்கு டாக்டர் ராதாகிருஷ்ணன் மறுமொழி கூறுவதையும், விழாவில் திரளாக வந்திருந்த தமிழ்ப் பெண்மணிகளையும் படத்தில் காணலாம்.**

திரமும் சமத்துவமும் கிடைக்காத வரையில் தமிழ்ப் பிரதேசங்களிலே சுதந்திர தினம் கொண்டாடப்படுவதை ஒருபோதும் அனுமதிக்க மாட்டார்கள் என்றார். ஸ்ரீ வி. சுந்திரலிங்கம் வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையில் சுதந்திர தினமென்பது சிங்களவர்களுக்கே தவிர தமிழர் சம்பந்தப்பட்ட வரையில் இது அவர்கள் அடிமைப் படுத்தப்பட்டதின் நினைவு நாளென்றும் சிங்களவர் துரோகத்தின் ஆண்டு விழா என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இவ்வருட சுதந்திர தினத்தைத் தமிழர்கள் மட்டுமே பகிஷ்கரித்தார்களென்று சொல்ல முடியாது. பழைய ஆளும் கட்சியைச் சேர்ந்த சிங்களவர்கள் சர்க்காரின் சுதந்திர தினக் கூட்டத்துக்குப் போட்டியாக இன்னொரு கூட்டம் நடத்தி இலங்கையில் ஜனநாயகம் குழி தோண்டிப் புதைக்கப்படுவதாயும் சர்வாதிகார ஆட்சி தலையெடுத்து வருவதாயும் கண்டித்துப் பேசினார்கள். எதிர்க்கட்சித் தலைவரான டாக்டர் என்.எம். பெரைராவின் தலைமையிலுள்ள லங்கா சமசமாஜக் கட்சியினர் ஏதோ சாக்குப்போக்கு சொல்லிக் கொண்டு சுதந்திர விழாக் கொண்டாட்டங்களைப் பகிஷ்கரித்தனர். இவ்விதம் தமிழ் மக்களும் சிங்களவர்களிலேயே ஒரு சாராரும் இவ்வருட சுதந்திர தினக் கொண்டாட்டங்களைப் பகிஷ்கரித்தது தேசிய ஐக்கியம் சீர்குலைந்து போயிருப்பதை எடுத்துக் காட்டுவதாக இருந்தது.

நிற்க. தமிழகத்தின் தலைசிரேஷ்டரான ஸ்ரீ ராஜாஜி கொழும்பு 'வீரகேசரி' பத்திரிகையின் சுதந்திர மலருக்கு அதன் சென்னை நிருபர் திரு ஆர். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மூலமாக ஒரு ஆசிச் செய்தி அனுப்பியுள்ளார். இலங்கை மக்கள் இந்தியர்களைத் தங்களது நெருங்கிய நண்பர்களாகவும் சகோதரர்களாகவும் நோக்க வேண்டுமென்றும் உலக நாகரிக நாடுகளின் முன்னணியிலே இலங்கையும் இருக்க வேண்டுமென்றும் வாழ்த்துக் கூறியிருந்தார்.

சுதந்திர விழாவுக்காக இலங்கைக்கு விஜயம் செய்திருந்த இந்திய உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் கொழும்பு இராமகிருஷ்ண மிஷன், விவேகானந்த சபை ஆகியவற்றின் ஆதரவில் கொழும்பு நகர மண்டபத்திலும், இலங்கை இந்திய வர்த்தகச் சங்கங்களின் ஆதரவில் நடைபெற்ற உபசார விருந்திலும் ஹொராகலை என்னுமிடத்திலும் மணியாக மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இம்மூன்று பிரசங்கங்களிலும் குறுகிய தேசிய வாதமும் வகுப்பு வாதமும் நாட்டு முன்னேற்றத்துக்கு இடையூறு விளைக்கின்றன என்பதை அவர் சொல்லிக் காட்டினார். இதை இலங்கை அரசாங்க அதிகாரிகள் எந்த மட்டில் புரிந்துகொண்டிருந்துவார்களென்பது தெரியவில்லை.

இலங்கையிலிருக்கும் இலங்கைப் பிரஜைகளல்லாத அந்நியர்களுக்கெல்லாம் நபருக்கு வருடத்துக்கு ஒரு ரூபாய் வீதம் தலைவரி விதிக்க வேண்டுமென்று தபால் தகவல் இலாகா மந்திரி திரு மரைக்காயர் மந்திரி சபைக்கு ஒரு விபரீதமான யோசனையைச் சொல்லியிருக்கிறார். இலங்கையில் சட்டவிரோதமாகக் குடியேறியிருப்பவர்களைச் சுலபமாகக் கண்டு பிடிப்பதற்காக, இலங்கையர் அனைவருக்கும் அடையாளச் சீட்டுகளை வழங்க வேண்டுமென்றும், இதற்கு ஏற்படும் செலவைச் சமாளிக்க இலங்கையரல்லாதார் அனைவருக்கும் தலைவரி விதிக்க வேண்டுமென்றும் மந்திரி திரு மரைக்காயர் கூறுகிறார். உலகத்தில் முன் மாதிரியில்லாதபடியும் விஷமத்தனமாகவும் தலைவரி விதிக்கும் யோசனையை இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் அழுத்தமாகக் கண்டித்திருக்கிறது. இலங்கையர்களுக்கு மட்டும் அடையாளச் சீட்டுகள் வழங்குவதென்றால் நாடற்ற நிலையிலிருக்கும் ஒன்பது லட்சம் இந்திய வம்சாவளியினர்களின் பிரச்னை மேலும் சிக்கலடைந்துவிடும் என்பதையும், ஆகையால் இந்த விபரீத யோசனை ஆபத்தானது என்பதையும் காங்கிரஸ் சுட்டிக் காட்டியிருக்கிறது.

# வள்ளுவர் வாசகம் — ராஜாஜி

## 17

இன்சொலால் கூறல் என்பது ஒரு கடமை. அது கேட்போருக்கு இனிமையான பொய் கூறுதல் அல்ல. தருமத்தையும் நீதியையும் முற்றிலும் கண்டவர்கள் உண்மையைப் பேசும்போது எவ்வாறு பேசுகிறார்களோ அது.

உண்மையைப்பேசும்போதும் நோவு உண்டாக்காமல் பேசவேண்டும். தருமமும் நீதியும் அரை குறையாகக் கண்டவர்களே கடினமாகப் பேசுவார்கள். அன்பு நிறைந்த உள்ளம் படைத்த அறிஞர்கள் உண்மையைச் சொல்லும் போதும் அந்த உண்மையை, கேட்பவனுடைய உள்ளம் நோகாதபடி பேசுவார்கள். நீதியும் தருமமும் நன்றாகக் கண்டவர்களுக்கு உண்மையும் இனிமையும் கலந்த பேச்சு தானாக வரும். உண்மையிலுள்ள கடுமையை நீக்கும் முறை அவர்கள் அறிவார்கள். உண்மையோடு ஈரத்தைச் சேர்த்துப் பிசைந்து பரிமாறுவார்கள். ஆயினும் பொய்யைக் கலக்க மாட்டார்கள். இது அவர்களுடைய பேச்சில் உள்ள இயல்பான குணம். அதற்காகக் கஷ்டப்பட்டுத் தேட வேண்டியதில்லை. தானாக வரும்.

இன்சொலால் ஈரம்
அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச்
சொல்.

இன்சொலால் ஈரம் அளைஇ — உண்மையை இன்சொல் என்கிற ஈரத்தைச் சேர்த்துப் பிசைந்து. படிறு—குற்றம், வஞ்சனை, பொய். செம்பொருள் கண்டார்—அறத்தை உணர்ந்தவர்கள். உண்மைப் பொருளைக் கண்டவர்கள். குற்றம் குறைகளறத் தர்மத்தை அறிந்தவர்கள். அவர்கள் பேசும் சொல் இந்தக் குறள் முதல் அடியிலுள்ளவாறு இருக்கும்.

படிப்பு மட்டும் போதாது; பிறரைத் தன்னைப் போல் பாவிக்கும் குணத்தைப் பெற்றவர்களே செம்பொருள் கண்டவர்கள்—தம்முயிரும் பிற உயிரும் ஒன்று என்று கண்டவர்கள். அத்தகையவர்களின் வாய்ச் சொல்லில் படிறு கலவாது. ஈரம் அளைந்த உண்மைச் சொல்லாக இருக்கும், அவர்கள் பேசும் சொல் எல்லாம்!

பிறருக்கு உள்ளம் நோகச் செய்யலாகாது என்கிற தருமமும் வாய்மையாகிய மூலதருமமும் இரண்டும் காக்கப்படவேண்டும். பற்றறுத்த பெருமக்களுக்கு இது இயற்கையில் கூடும். துன்பம் தரும் உண்மையைத் துன்பம் உண்டாக்காதவாறு செய்துவிடும் அதிசய சக்தி அன்புக்கு உண்டு. ஆகையால் உண்மையோடு அன்பைச் சேர்த்துப் பிசைந்து அளிக்க வேண்டும் என்றார்.



# வட்ட மேஜை

## திருந்துவார்களாக

கல்கி (2-2-'57) இதழில் ராஜாஜி அவர்கள் எழுதியுள்ள "ஒற்றுமைக்கு வழி" என்ற தலையங்கத்தைப் படித்தேன். ஒருமுறையல்ல, பல முறைகள் படித்தேன். நான் படித்ததோடல்லாமல் பல பேர்களுக்கும் படித்துக் காட்டினேன். ஆங்கிலத்துக்கும், இந்திக்கும் நடுவே மனம் குழம்பித் தவிக்கும் தமிழ் மக்களுக்கு இத் தலையங்கம் நல்லதோர் மனத் தெளிவை யளிக்கும் என்பதில் சந்தேகமே யில்லை. நாட்டு மக்களின் தேவைகளைக் கவனித்து அதைச் சீர்ப்படுத்தாமல் இப்பொழுது அனாவசியமாக மொழிப் பிரச்னையை ஏற்படுத்தி, அதன் மூலம் நாட்டின் ஒற்றுமையைக் குலைத்து, மக்கள் தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளப் பலாத்காரத்தில் ஈடுபட்டால் இந்தியா பல பாகங்களாகப் பிளவுபட்டு விடும் என்பதை ஆட்சியாளர்கள் எண்ணிப் பார்க்கவில்லை போலும். இந்த நிலையில் ராஜாஜியின் மொழிப் பிரச்னை சம்பந்தமான தலையங்கம் வெளியானது மிகவும் போற்றத் தக்கது. இதைப் படித்தாவது ஆட்சியாளர்கள் திருந்துவார்களாக.

மாதிமங்கலம்
30—1—58 — ஆர். வி. ரமணி

## மின்சார வெட்டு

ஒவ்வொரு ஆண்டும் மேட்டூர் நீர்த்தேக்கத்தில் நீர்க் குறைவு காரணமாய் மின்சார வெட்டு ஏற்படுகிறது. வீடுகளுக்கு இருபது யூனிட்களுக்கு மேல் எரித்தால் சர்சார்ஜ், மில்களுக்கு ஒன்றுவிட்டு ஒருநாள் அறவை, சினிமா தியேட்டரில் மின்சார விசிறிகள் சுழலாத புழுங்கும் நிலையோடு, தினசரி ஒரே காட்சி என்று பலவிதமான சங்கடங்கள் ஏழு மாத காலத்துக்கு—ஜனவரி முதல் ஜூலை வரை வந்து விடுகிறது.

சர்க்கார் இந்தச் சங்கடங்களை நீக்குவதற்கான வழிகளையோ, அல்லது மேட்டூர் நீர்த்தேக்கத்தை நம்பாத முறையில் மின்சாரம் சப்ளை செய்வதற்கான சாதனங்களை ஏற்படுத்தவோ செய்யாமல் மிகவும் அதிகமாக 'கோட்டா' கொடுத்ததற்கு மேல் — எரிப்பவர்களுக்குக் கட்டணத் தொகைக்கு மேல் எட்டணா சர்சார்ஜ் வசூலிப்பதையே குறிக்கோளாகக் கொண்டு விட்டது பெரிதும் வருந்தத் தக்கது.

இந்த சர்சார்ஜ் வரிவிதிப்பு நடுத்தர வியாபாரிகளையே பெரிதும் பாதிக்கிறது. வீடுகளுக்கு மின்சாரம் உபயோகிப்பவர்கள் சாதாரணமாக இருபது யூனிட்களுக்குமேல் உபயோகிக்கிறதில்லை. பெரிய தனவந்தர்களோ சர்சார்ஜ் தொகை எவ்வளவு போட்டாலும் கட்டி விடுகிறார்கள். அவர்கள் மின்சார வெட்டைப்பற்றிக் கவலைப்படுவதில்லை.

அதேபோல் சர்சார்ஜ் தொகை கட்டுகிறவர்களுக்கு விநியோகம் செய்யவும் அரசாங்கம் தயங்கவில்லை! இதனால் மின்சார விநியோகக் குறைவு என்ற காரணம் சரிவர அனுஷ்டிக்கப்படாமல், பணம் அதிகம் கட்டக்கூடியவர்களுக்கு மின்சார வினியோகம் அதிகம்கிடைக்கும் என்ற "வியாபார நோக்கம்" அடங்கியிருப்பது பொதுமக்களுக்கு நன்கு புலனாகிறது. பணம் கட்டுபவர்களுக்கு மட்டும் எவ்வளவு வேண்டுமானாலும் மின்சாரம் வினியோகம் செய்யலாம் என்றால், மின்சார வெட்டு வருவதின் நோக்கம்என்ன?

' தவிர, புதிது புதிதாக ஏராளமான கிராமங்களுக்கு மின்சார இணைப்புகள் கொடுத்துக் கொண்டே போகிறார்கள். அதற்குத் தகுந்த முறையில் மின்சார வினியோக விஸ்தரிப்புக்கும் வழி செய்யாததால் ஜனத் தொகை அதிகரிப்புக்கு, குடும்பக் கட்டுப்பாடு புத்திமதிகளைக் கூறுவதைப் போல, மின்சார விஸ்தரிப்புக்காக மின்சார வெட்டு கொண்டு வருகிறார்கள் போலும்!

கும்பகோணம்
20—1—58 — கே. ரகுபதி

## ஒரு விண்ணப்பம்

திருப்பத்தூர் தாலூகா விவசாயிகள் சங்க வாயிலாக, பஸ் பிரயாணிகளுக்குள்ள தொல்லையைப் போக்கும்படி அதிகாரிகளுக்குச் சில மாதங்களுக்கு முன் ஒரு விண்ணப்பம் அனுப்பப்பட்டது. "கல்கி" பத்திரிகையிலும் அதை வெளியிட்டிருந்தீர்கள். அதன்படி ஜோலார்பேட்டை—திருப்பத்தூர் செல்கின்ற பிரயாணிகளுக்கு வசதியாகவும் 17—1—58 முதல் ரயில்வே பிரயாணிகள், ஏனைய மக்கள் செல்ல வசதியாகவும் புதிதாக நான்கு வண்டிகள் விடப்பட்டுள்ளன.

அதிகாரிகள் மேற்படி விண்ணப்பத்தில் கண்டுள்ள மற்ற வசதிகளையும் செய்து கொடுத்தால், திருப்பத்தூர் தாலூகாவிலும் சுற்றுப்புறங்களிலும் வாழும் மக்களுக்கும், கலாசாலை, பள்ளிகள் செல்லும் மாணவர்களுக்கும் வசதியாக இருக்கும். இதனை உடன் செய்யுமாறு அரசியலாரைக் கேட்டுக் கொள்கிறேன்.

ஜோலார்ப்பேட்டை
19—1—58 — கே. என். கேசவன்

## சம்பளம் கொடுக்கத் தாமதம்

தனியார் நிர்வாகத்திலிருக்கும் அரசாங்க உதவி பெறும் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் கடந்த ஆண்டு டிஸம்பர் மாத ஊதியம் இன்னும் பெறவில்லை. ஏனெனில் தனியார் நிர்வாகத்திலிருக்கும் பள்ளிகள் பல, அரசாங்கத்திலிருந்து கிடைக்கப் பெறும் ஆசிரியர் ஊதிய உதவித் தொகையைப் பெற்றே, ஆசிரியர்களுக்கு ஊதியம் கொடுக்கக்கூடிய நிலையிலிருக்கின்றன. இப்பொழுது டிஸம்பர், புதிய ஆண்டு ஜனவரி மாத ஊதிய உதவித் தொகைகள், நிர்வாகிகள் அரசாங்கத்திலிருந்து பெற்றுக்கொண்ட இதர உதவித் தொகைகளின் தணிக்கைக்காக, நிறுத்தி



சங்கத் தமிழ் வளர்த்து வரும் மதுரையம்பதியில் சங்கீதத்தை வளர்த்து வருகிறது ஸ்ரீசற்குரு சங்கீத சமாஜம். இந்த சமாஜத்தின் கட்டட நிதிக்காக சங்கீத நிகழ்ச்சிகள் மதுரைமா நகரில் நடைபெற்று வருகின்றன. இந்தத் தொடர் நிகழ்ச்சிகள் பிப்ரவரி முதல் தேதி ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் கடவுள் வாழ்த்துப்பாட, சபைத்தலைவர் திரு டி. கே. சிவசங்கரன் தலைமையில் கோலாகலமாக ஆரம்பமாயின. கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் விழாவை ஆரம்பித்து வைத்தார். விழாத்தலைவர், கல்வி மந்திரி, கட்டட நிதிக் குழு பொருளாளர்கள் திருமதி டி. எஸ். அம்புஜம் கிருஷ்ணா, திருமதி டி. எஸ். பங்கஜம் ராஜம், நிதிக்குழு அங்கத்தினர் திருமதி சத்தியபாமா கோவிந்தராஜன், காரியதரிசிகள் திரு வி. சுந்தரராஜன், திரு கே. வைத்தியநாதன், மற்றும் நிதிக்குழு அங்கத்தினர்கள் ஆகியோரை மேலே படத்தில் காணலாம்.

---

வைக்கப்படுகின்றன. தணிக்கை முடிந்த பின்னரே மேற்படி ஊதிய உதவித் தொகைகள் கிடைக்கப் பெற்று, ஆசிரியர்களுக்கு ஊதியம் கொடுக்கப்படுகின்றன. பிப்ரவரி மாதம் இருபது தேதிக்குமேல் இவ்வாறு ஊதியம் கிடைக்கப் பெறுகின்றது. இது ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் மாமூலான வழக்கம். இதனால் ஆசிரியர்கள் உரிய காலத்தில் ஊதியம் பெறுவதற்கு முடியாமல் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.

மாறுதல்கள் ஏற்படுகின்ற இந்நிலையில் இதர ஊழியர்களுக்குக் கிடைக்கப் பெறும் முன் பணம், போனஸ் போன்று கிடைக்கப் பெறாவிடினும், ஆசிரியர்களுக்கு உரிய காலத்தில் ஊதியமாவது கிடைக்க வழி செய்யுமாறு அரசாங்கக் கல்வி இலாக்காவைக் கேட்டுக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
3—2—58

இராம நடராசன்

## கடிதங்களின் கதி என்ன?

சேலம் ஜில்லா, ஆத்தூர் தாலுக்காவைச் சேர்ந்த பெத்தநாயக்கன் பாளையத்தில் எனக்குச் சொந்தமாக நிலங்கள் இருக்கின்றன. மேற்படி நிலங்களுக்குச் சென்ற ஏழு வருஷங்களாக மலாய் நாட்டிலிருந்து வரித் தொகை அனுப்பி வந்துள்ளேன். ஆனால் இது வரையில் மேற்படி தொகைகளுக்குச் சர்க்காரிடமிருந்து ரசீது எதுவும் வரவில்லை. அவ்விஷயமாகச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குப் பல கடிதங்கள் எழுதியும் இதுவரையில் ஒரு பதிலும் இல்லை. இந்திய சர்க்காருக்கு எழுதியும் பலனில்லை. வெளி நாட்டில் வாழும் ஓர் இந்திய ஏழை விஷயத்தில் இந்திய சர்க்காரும் சென்னை சர்க்காரும் ஏன் இப்படி அனுதரவாக இருக்க வேண்டும் என்பது தெரிய வில்லை. பல கடிதங்களில் ஒன்றுக்காவது பதில் எழுதக் கூடாதா? கடிதம் வந்து சேர்ந்தது என்றாவது தெரிவிக்கக் கூடாதா? கடைசியில் வேறு வழியின்றி, ''கல்கி'' மூலம் எனது கஷ்டத்தைத் தெரிவித்துக் கொள்ள முன் வந்துள்ளேன். இனியாவது என் கோரிக்கையை அதிகாரிகள் கவனித்து ஆவன செய்வார்களா?

மலேயா
15—1—58

ப. ராமசாமி பண்டாரம்

## விலை உயர்வு ஏன்?

தனிப்பட்டோரின் வியாபாரத்தில், இடைத் தரகர்கள் லாபமடைவதைக் குற்றமாகக் கருதும் சர்க்கார், தேசிய வர்த்தக ஸ்தாபனம் (ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன்) மட்டும் அதிக லாபமடைவதைத் தடுக்க இதுவரை ஒன்றும் செய்யவில்லை. சாதாரணமாக, தேசிய வர்த்தக பிரைவேட் ஸ்தாபனம் என அழைக்கப்படும் சர்க்காரால் கண்காணிக்கப்படும் மேற்படி வர்த்தக ஸ்தாபனமே பாரதத்தின் சிமெண்ட் விநியோகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு நடத்துகிறது. வெளிநாடுகளிலிருந்து மிகக் குறைந்த அளவில் இறக்குமதியாகும் சிமெண்ட் விலை உயர்வைக் குறைக்க, உள்நாட்டில் உற்பத்தியாகும் சிமெண்ட் விலையை உயர்த்தி இரு வகைகளையும் சம விலையில் கிடைக்கச் செய்வது போற்றப்பட வேண்டியதே!

சிமெண்ட் தேவையுள்ள வாடிக்கைக்காரர்கள், விலை குறைவால் ஏற்படும் சலு

கையைப் பெருவிடினும், எக்ஸைஸ் வரி டன் ஒன்றுக்கு ரூ. 5 லிருந்து ரூ. 20-க்கு உயர்த்தப்பட்டதால் அதிக விலை கொடுக்கவேண்டிய வர்களாக இருக்கிறார்கள். உற்பத்தியாளர்களுக்கு, உற்பத்திச் செலவுகளைக் காணும்போது அச்செலவுகளுக்கு இணங்க விலை உயர்வால் சாதகம் கிடையாது.

ஏனெனில் சிமெண்ட் உற்பத்தியாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்வது முழுதும் தேசிய வர்த்தக ஸ்தாபனத்துக்கு டன் ஒன்றுக்கு ரூபாய் 54·50 விலைக்குக் கொடுத்து விட வேண்டும். போக்குவரத்து, பாக்கிங் செலவுகளைச் சேர்த்தபின் தேசிய வர்த்தக ஸ்தாபனத்துக்கு டன் ஒன்று ரூ. 69. 64 ஆகிறது. ஆனால் விநியோகஸ்தர்களுக்கு விற்கும் விலை (வரி உள்பட) டன் ஒன்றுக்கு ரூ. 117. 50 ஆகும்.

இப்போது இந்தியாவில் சிமெண்ட் பற்றாக் குறை அதிக அளவில் கிடையாது. ஆகையால் இனி அதிக அளவு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய அவசியம் தேசிய வர்த்தக ஸ்தாபனத்துக்கு இருக்காது. எனவே, அரசாங்கம் தக்க சமயத்தில் சிமெண்ட் விலைகளைக் குறைத்துக் கட்டட வேலைகளுக்கு ஊக்கமளிப்பதோடு, நியாயமான அளவில் உற்பத்தியாளர்களுக்கும், விநியோகம் செய்யும் வியாபாரிகளுக்கும் லாப வரம்பை ஒரு சிறிதேனும் உயர்த்தி உதவி புரிவார்களா?

அதிராம்பட்டினம்
3—2—58
அ. உலகநாதன்

## பாவை விளக்கு

திரு அகிலன் அவர்களின் ''பாவை விளக்கு'' ஒரு அற்புதமான சிருஷ்டி. தேன் சொட்டும் தமிழ் நடையில் கருத்துக்குவியல்களை வாரி வழங்குகிறார் திரு அகிலன்.

தணிகாசலம் ஒரு குணசித்திரப் பாத்திரம். கௌரி தமிழ்ப் பெண்மையின் பிரதிநிதி. இவர்களைத் திரையில் சந்திக்க மிக்க ஆவலாக இருக்கிறது. தமிழ்ப் படாதிபதிகள் ''பாவை விளக்கை''த் திரைப்படமாகத் தயாரித்தால் தமிழ் நாட்டில் நல்ல திரைக் கதைக்குப் பஞ்சம் என்ற அவச்சொல் நீங்கும்.

விஜயபுரம்
31—1—58
மா. வரதராஜன்
தஞ்சை ஜில்லா தமிழ் எழுத்தாளர் சங்கம்.

✶

அகிலனின் ''பாவை விளக்கி''னைப் படித்து மகிழும் எண்ணற்ற ரசிகர்களுக்குள்ளே நானும் ஒருவன். பேராசிரியர் 'கல்கி' அவர்களுக்குப் பின்னர் கல்கியில் தமது தென்னுதமிழ் நடையால் தமிழகத்து இளம் உள்ளங்களைச் சிறிது சிறிதாகக் காந்தம்போல் ஈர்த்து வருபவர் திரு அகிலன்.

அவரின் அற்புதப் படைப்புகளாக இக்கதையில் திகழ்பவர்கள் தணிகாசலம், தேவகி, செங்கமலம், கௌரி, உமா முதலியோர். இவர்களை நாட்டிலே நம்முன் ஒரு கூட்டத்தினராக, நம்மைப் போலவே வாழ்க்கை நடத்துபவர்களாக நடமாட விட்டு, அவர் தம் வாயிலாக இன்று நாட்டிலே நடக்கின்ற நடைமுறைக் காட்சிகளைப் பல அரிய கருத்துக் குவியலுடன் தமிழ் பேசும் மாந்தரிடை உலவ விடுவதுதான் ''பாவை விளக்கு.''

மன்னார்குடி
16—1—58
ம. க. வேலாயுதம்

## ''எங்கே போகிறது ?''

சென்னை நகரில் தினம் ஓடும் சர்க்கார் பஸ் வண்டிகளில், அநேகமாக அவை எந்த இடத்திலிருந்து எந்த வழியாக எங்கு போகின்றன என்று தெரிவிப்பதற்கு வேண்டிய இடம் காலியாக இருக்கிறது. அதிலும் இரவில் ஒன்றுமே தெரிவதில்லை. இதனால் பொது மக்கள் ஒவ்வொரு பஸ் நிலையத்திலிருந்து பஸ் கண்டக்டரை இவ்வண்டி எங்கே போகிறது. என்று கேட்க வேண்டியிருக்கிறது. சர்க்கார் இதைக் கவனிப்பார்களா ?

சென்னை
16—1—58
எஸ். ஜகதீசன்

## சுட்டுவிட்டாரா ?











ஜஸ்மின் மில்ஸ் பிரைவேட் லிட்.,
பம்பாய்-2.




# எங்கள் குடும்பம் பெரிசு

படத்தின் தலைப்பைப் போலவே கதையும் பெரிதுதான். மூலக் கதை மகாராஷ்ட்ரம். அதைத் தழுவிக் கன்னடத்தில் ''ஸ்கூல் மாஸ்டர்'' என்று வெள்ளித் திரையில் வெளியிடப்பட்டது. அது தமிழில் 'டப்' செய்யப்பட்டு, இப்படி வெளியாகியிருக்கிறது.

அகங்கனிந்த பக்தியை அடிப்படையாகக் கொண்ட புராணக் கதையாயினும் சரி, வீரத்தை அடிப்படையாகக் கொண்ட சரித்திரக் கதையாயினும் சரி, சோகத்தை அடிப்படையாகக் கொண்ட சமூகக் கதையாயினும் சரி கதாநாயகனைப் பற்றியோ அவன் காதல் வாழ்வைப் பற்றியோ யாரும் அதிகமாக அக்கறை காட்ட மாட்டார்கள்.

பக்திக் கதைக்கு உதாரணமாக ''நந்தனா''ரையும் ''மார்க்கண்டேய''ரையும் எடுத்துக் கொள்ளலாம். மேற்படி கதைகளில் நந்தவனம், நதிதீரம் முதலிய இடங்களில் பக்த சிகாமணிகள் காதல் புரிவதை நாம் எதிர்பார்ப்பதில்லை. அதேபோல, சரித்திரக் கதைகளில் வீரம், தீரம், ஆண்மை முதலிய அருங்குணங்களுக்குப் பிறகு காதல் இடம் பெறும்.

''ஏழை படும்பாடு'' போன்ற படத்தில் காதலைப் பற்றிய நினைவைவிட, தன்னலமற்ற தியாகம், கடமை உணர்ச்சி, மனித உள்ளத்தின் மாண்பு முதலிய அருங்குணங்களைப்பற்றிய எண்ணம்தான் ஓங்கி நிற்கிறது.

''எங்கள் குடும்பம் பெரிசு'' ஓர் ஏழைப் பள்ளி உபாத்தியாயரைப் பற்றிய கதை. அதில் காதலுக்கு இடமேது? பள்ளி உபாத்தியாயர் கதையில் காதலை எதிர்பார்ப்பது பாலைவனத்தில் பசும்பாலை எதிர்பார்ப்பது போலாகும் அல்லவா?

உபாத்தியாயரைப் பற்றியும், பள்ளிக்கூடத்தைப் பற்றியும் இதுவரையில் பல ஹாஸ்யங்களும் கதைகளும் வெளி வந்து, சிரிப்புக்குப் பதிலாக உபாத்தியாயர்களுக்குக் கோபத்தையே உண்டுபண்ணி வந்திருக்கின்றன.

ஆனால் இந்தக் கதையில் உபாத்தியாயரை வெறும் ஏழையாக மட்டும் காட்டாமல், அருங்குணங்களை அணிகலன்களாகப் பூண்ட அரிய மனிதராகக் காட்டப்பட்டிருக்கிறது.

அந்த நல்ல மனிதரின் பாகத்தை ஏற்று நடிப்பவர் பி.ஆர். பந்துலு என்றால் போதும். ரசிகப் பெருமக்கள் அவர் அந்தப் பாகத்தில் எத்தனை திறமையோடு நடித்திருப்பார் என்பதை எளிதில் தெரிந்து கொள்ளுவார்கள்.

சித்தூர் நாகையாவைப் போல் பாத்திரத்தை உணர்ந்து நடிப்பவர் பி. ஆர். பந்துலு. அவரே இந்தப் படத்தை டைரக்ட் செய்து, தயாரித்திருக்கிறார்.

உபாத்தியாயர் ரங்கண்ணா அந்த ஊர்ப் பள்ளிக்கூடத்துக்கு வந்ததும் அவ்வூர்ப் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட் நாகப்பாவுக்கு

மாத்திரம் ஆத்திரம் உண்டாயிற்று. காரணம் ரங்கண்ணாவின் நேர்மையான உள்ளம்தான். நாகப்பா பல விதத்திலும் அவருக்கு இடையூறுகள் விளைவிக்கிறான். அவர் வீட்டுக்குத் தீயிட்டுக் கொளுத்தி விடுகிறான். ஆனால் மாணவர்கள் அவருக்கு வீடுகட்டிக் கொடுத்து விடுகின்றனர். பள்ளிக்கூட நிதியைத் திருடி உபாத்தியாயர்மீது பழி சுமத்த முயன்ற நாகப்பா தோல்வியடைகிறான்.

பள்ளிக்கூட உபாத்தியாயர் வாழ்க்கையில் எட்டிப் பார்க்காத காதல், அவர் பிள்ளைகள் இருவர் வாழ்விலும் அமர்க்களமாக இடம் பெற்று, மாமல்லபுரம் சிற்ப மண்டபங்களுக்கு அருகில் வளர்ந்து உரம் பெறுகிறது! ரங்கண்ணாவின் மூத்த புதல்வன் ரவி ஒரு பணக்காரப் பெண்ணைக் காதலிக்கிறான். இரண்டாவது மகன் கோபி நாகப்பாவின் புதல்வி ராதாவைக் காதலிக்கிறான். ரங்கண்ணாவின் மகள் கௌரி ஒரு பட்டிக்காட்டு புலனுக்கு மணம் செய்விக்கப்படுகிறாள்.

பி. ஆர். பந்துலுவின் நடிப்புக்காக இந்தப் படத்தைப் பார்க்கலாம். அவர் நடிப்பு சிறந்திருந்த கட்டங்களைப் பார்ப்போம் :—




மாணவன் வாக உபாத்தியாயர் ரங்கண்ணாவின் பேனாவைத் திருடி விடுகிறான். அதையறிந்த ரங்கண்ணா அவனை அன்போடு நல்ல வார்த்தைகள் சொல்லி அணைத்து, அந்தப் பேனாவை அவனுக்கே பரிசாக அளிக்கிறார். அந்த இடம் நன்றாயிருக்கிறது.

ரங்கண்ணா புதல்வனிடம் இருக்கும்போது மனைவியிட மிருந்து கடிதம் வருகிறது; மூக்குக் கண்ணாடி உடைந்துவிடுகிறது; மனம் முறிந்த ரங்கண்ணா கீழே விழுந்து உடைந்துபோன மூக்குக் கண்ணாடித் துண்டுகளில் ஒன்றினால் கடிதத்தைப்படிக்கிறார். அப்பொழுது ரங்கண்ணாவின் உடம்பில் இருந்த பதற்றம், முக பாவம் எல்லாம் பந்துலுவின் இணையற்ற நடிப்பில் தத்ரூபமாகத் திகழ்கின்றன.

பந்துலுவுடன் ரங்கண்ணாவின் மனைவியாக நடிக்கும் எம். வி. ராஜம்மா ஒரு நல்ல நடிகை. அவர் நடிப்பு குறை சொல்ல இடம் இல்லாமல் இருக்கிறது.

பள்ளிக்கூடப் பிரார்த்தனையில் பாடப்படும் ''சோமசேகர யோகபாலனே......'' என்ற பாட்டு உருக்கமா யிருக்கிறது.

ரங்கண்ணாவின் மருமகனாக நடிக்கும் ராஜகோபால் அநாயாசமாகப் பேசி அற்புதமாக நடிக்கும் ஆற்றல் படைத்தவர். மனைவி படைத்த உணவு பருத்திக்கொட்டையா யிருந்தாலும் அமிர்தமாயிருக்கும் என்னும் பண்டைக் காலத்துக் கதையை அவர் நன்கு நடித்துக் காட்டுகிறார். பணத்தாசை பிடித்த தந்தையிடம் பயந்து கொண்டு மனைவியை நெருங்காமல் இருக்கிறான் என்னும் கற்பனை மிக மிகப் பழைய காலத்துக் கதை.

பள்ளிக்கூட நிதிக்காக ஸ்ரீ ராமாயண நாடகம் நடக்கிறது. ராமனாக நடிப்பவனை நாகப்பா ஒரு பாழ் வீட்டில் தள்ளிப் பூட்டி விடுகிறான். நாடக நேரத்தில் ராமன் காணாமற் போய்விடவே ரங்கண்ணா தவிக்கிறார். அப்பொழுது வானரப் படைகள் சென்று ராமனாக நடிப்பவனைத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டு வருகின்றன. அந்த நாடகம் விறுவிறுப்பாக அமைந்திருக்கிறது.

வசனம், பாடல்கள் யாவும் பலர் சேர்ந்து இயற்றி யிருக்கின்றனர்.

ரங்கண்ணாவின் மனைவி தன் மகன் வீட்டில் தங்கி யிருந்தபோது அவன் பேத்தி டெலிபோனில் 'ட்ரங்க் கால்' போட்டுத் தாத்தாவுடன் பாட்டியைப் பேசச் சொல்கிறான். அந்தக் குழந்தையைக் கொஞ்சம் பெரிய பெண்ணாகக் காட்டியிருந்தால் அவள் பேசுகிற மாதிரிக்கு மிகப் பொருத்தமா யிருக்கும்.

தமிழ் 'டப்பிங்' பொருந்தாமல் மோசம் செய்து விட்டது!



ராஜேஸ்வரி பிலிம்ஸாரின் 'சுமங்கலி'யில் இந்தப் புது முகங்களைக் காணலாம். ஆநந்தன்-ஹேமலதா. இந்தப் படத்தின் திரைக் கதை வசனம் 'என் தங்கை' நடராஜன் எழுதுகிறாராம். சக்கைப் போடுதான்! தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று படம் வெளியிடப்படுமாம்.



இந்தியா-ருஷ்யக் கூட்டுத் தயாரிப்பான "பர்தேசி" ஒரு கோடி ரூபாய் செலவில் தயாரான படம்! சாதாரண வெள்ளித் திரையிலும், அகலத் திரையிலும் காட்டக் கூடியதாம். பத்மினியின் நடனமும், நர்கிஸின் நடிப்பும் பிரமாதமாக இருக்கின்றனவாம். படம் கூடியவிரைவில் வெளியாகும்.





விஜயா புரொடக்ஷன்ஸாரின் "கடன் வாங்கிக் கல்யாணம்" பல சிறப்பான அம்சங்களைக் கொண்ட படமாம். ஈ. வி. சரோஜாவின் எழில்மிக்க நடனம் ஒன்று போதாதா, படத்தின் சிறப்புக்கு! மேலும், ஜெமினி கணேசன், சாவித்திரி, தங்கவேலு எல்லோரும் இப்படத்தில் நடிக்கிறார்கள்.

முழு மதியின் மோகன நிலவில தனித்திருக்கும் இந்தக் காதல் ஜோடியைத் தேடுகிறதா? ஏகாந்தத்தில் ஒரு பெண் இன்பவல்லியாகத் திகழ்கிறாளே............ எல்லாம் காதலன் நினைவுதான். ஆர். ஆர். புரொடக்ஷன்ஸாரின் "காத்தவராயன்" படத்தில், ஜெமினி கணேசனும், சாவித்திரியும். நடிக்கின்றனர்.

# ஸ்டாக் கார்
# என்ட்யூரன்ஸ் ரிகார்டுகள்




## இந்த டயர் அபாயமின்றி செல்லக்கூடியதென நிரூபித்துள்ளன




அமெரிக்காவின் அற்புதமான ஸ்டாக் கார் என்ட்யூரன்ஸ் ரிகார்டு - சராசரி மணிக்கு 108 மைல்கள் விதம் 50,000 மைல்கள் செல்லுதல், ஒரு டயர்கூட சேதமடையாமல், பயர்ஸ்டோன் டயர்கள் உபயோகித்து ஏற்பட்டுள்ளது. அந்த டயர்களை இணையற்ற உறுதியுடன் வைப்பதற்கேற்ற அதே உற்பத்தித்திறனும், உன்னததரக் கண்காணிப்புமே, உங்கள் காரில் பொருத்தப்பட்டுள்ள பயர்ஸ்டோன் டயர்களின் நிச்சயமான பாதுகாப்புத் தன்மைக்கும், நம்பகத்தன்மைக்கும் உத்திரவாதம் அளிக்கின்றன.

# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலெக்ஸ் சாம்பியன் • ட்யூப்லெஸ் அல்லது ட்யூபுள்ளது

**மன நிம்மதியுடன் பிரயாணம் செய்வதற்கென்றே தயாரித்த டயர்**

I. 67

ஆடல் பாடல்

# கந்தர்வ உலகம்

சுப்புடு

பம்பாயில், ஏன், இந்தியாவிலேயே இணை யற்ற கலைக்கூடம், பம்பாய் ஷண்முகானந்த பைன் ஆர்ட்ஸ் சங்கீத சபாதான். இதை நான் சொல்லவில்லை. ஸ்ரீமதி எம். எஸ்.ஸின் கச்சேரிக்குத் தாமாகவே வந்து தலைமை தாங்கிய இந்திய பிரசார மந்திரி ஸ்ரீ கேஸ்கரே சொல்லியுள்ளார். வருடாவருடம் இவர்கள் நடத்தும் சங்கீத மகோத்சவம் பல அம்சங் களில் ஈடு இணையற்று விளங்குகிறது.

நாலாயிரத்துக்கு மேற்பட்ட ஜனசமுத் திரம் நன்றாக உட்கார்ந்து பார்க்க வசதியாக நிர்மாணிக்கப்பட்ட மாபெரும் பந்தல். கண் ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய்க் கலை சொட்டச் சொட்டக் கட்டப்பட்ட மேடை. அதை எட்டி ஓராறு முகமும் ஈராறு தோளும் புன்னகை தவழ் முகார விந்தமும், வேலும் மயிலுமாய்க் கொலு வீற்றிருக்கும் தமிழ்ப் பெருமான். எல்லாம் கலந்து ஏதோ கந்தர்வ லோகத்திலேதான் வாசம் செய்கிறோம் என்ற பிரமை! பம்பாயிலுள்ள ரஸிகப் பெரு மக்களைப் பற்றி எவ்வளவு சொன்னாலும் போதாது. கமார் பாட்டு முதல் சொக்க வைக்கும் பாட்டு வரை எல்லாவற்றையும் பொறு மையாய்க் கேட்டு, குணத்தை மாத்திரம் கொள்ளும் புண்ணியாத் மாக்கள். இவர்கள் முன் னிலையில் பாடுவதைப் பெரும் பாக்கியமாக வித் வான்கள் எல்லாரும் கருதுவதில் ஒன்றும் ஆச் சரியமில்லை அல்லவா?

இந்தப் பம்பாய் விஜ யத்தை நான்என்னுடைய வாழ்க்கையிலேயே ஒரு சிறந்த சங்கீத அனுபவ மாகக் கொள்ளுகிறேன்.

## துவார பாலகர்கள்

முதல் நாள் ஆரம்ப விழாவை அடுத்து, குளிக் கரை எஸ். பிச்சையப்பா பிள்ளையின் முழு நேர நாதஸ்வரக் கச்சேரி நடை பெற்றது. தேவலோகத் தில் துவார பாலகர்களைத் தாண்டித் தானே உள் செல்ல வேண்டும்! பிள்ளையவர்களும் ஷேய்க் ராமச்சந்திரனும் சேர்ந்து வாசித்தார்கள்.

சபையோர் ஷண்முகசுந்தரனின் சுநாத மான தவில் கச்சேரியைக் கேட்டு மகிழ்ந்த துடன் திருப்தியடைய வேண்டியதாயிற்று.



விழாவைத் துவக்கி வைத்துப் பேசுகிறார் திரு சோமானி.

## தீரர் செம்மங்குடி

இடக்குப் பண்ணும் சாரீரத்தை மடக்கி அடக்கி ஆண்டு அமோகமாகக் கச்சேரி செய் யும் பாணியில் செம்மங்குடிக்கு ஈடே கிடை யாது. ரஸிகமகாஜனங்கள் அவரது பாணியை ரஸித்தார்கள். ஆங்காங்கு மின்னிய தாரகை களைக் கண்குளிரக் கண்டார்கள். பல்லவிக்கு எடுத்துக் கொண்ட சங்கராபரண ராக ஆலா பனை விச்ராந்தியாக இருந்தது. விளம்பம், விஸ்தாரம், விறுவிறுப்பு, விவரம், விந்யாசம் இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம். சபையோர்கள் சத்தை மாத்திரம் எடுத்துக் கொண்டார்கள். "சாரீரம் கிடக்கிறது! பாணியல்லவா முக்கியம்?" என்ற மனப் பான்மையுடன் கேட்டு ரஸித்தார்கள்.

அடுத்த நாள் நடந்த வசந்தகுமாரியின் கச்சேரிக்குத் தகுந்த தலைப்புக் கிடைக்க மாட் டேன் என்கிறது. இவர் பாட்டில் எல்லா ருடைய பாணியும் காண்கிறது. தமக்கென்று ஒரு பாணியை வகுத்துக் கொள்ளாததுதான் இதற்குக் காரணம் என்று நினைக்கிறேன். சுநாதமான சங்கீதம்; கல்வரமான பிரயோகங் கள்; கற்றியடிக்கும் பிர் காக்கள்; கயமான லயப் பிடிப்பு இவைகளுக்கு வசந்தகுமாரியை நம்ப லாம். அவருடைய பைரவி ராக ஆலாபனை யும் தொடர்ந்து வந்த சேது லார கீர்த்தனையும் என்னைமிகவும் கவர்ந்தன. பைரவியில் ஓரளவுக்குக் கரகரப்பிரியா வாடை வீசினாலும் ஆலாபனை விஸ்தாரமா யிருந்தது. சேதுலார கீர்த்தனை இப் போதெல்லாம் வழக்கில் இல்லை. காரணம் அது கொஞ்சம் வேலை வாங்கு கிற பாட்டு. சங்கதிகளை அடுக்கடுக்காய் உதிர்க்க வேண்டும். சாஹித்தியம் குறைவு; சங்கதிகள் ஜாஸ்தி. நன்றாகப் பழுக் கிற சாரீரங்களுக்குத்தான் அது உதவுபடி. வெறுமனே மண்டையை மாத்திரம் ஆட்டி னால் போதாது. வசந்தகுமாரி இந்தக் கீர்த் தனையை அற்புதமாய்ப் பாடியதில் வியப்பு ஒன்றும் இல்லை. வயலின் திருவள்ளூர் சுப்பிரமணியத்தின் பக்கவாத்தியம் அபாரம்!

## ஜி. என். பி.யின் மறுமலர்ச்சி

கொஞ்ச நாட்களாக அஞ்ஞாத வாசத்திலிருந்த ஜி. என். பி.யின் சாரீரம் மறுமலர்ச்சி அடைந்திருக்கிறதென்பதை அன்றுடைய பம்பாய்க் கச்சேரியில் கண்டார்கள். அவர் கூப்பிட்ட குரலுக்குத் தோடி ஓடி வந்தும், திருப்தியடையாத ஜி.என்.பி. ''தாமசமேன்'' என்ற சிவன் கீர்த்தனையை அழகாகப் பாடினார். அபூர்வமாக விழுந்த சில ரவைப் பிடிகளை இப்போது நினைத்தால் கூட மயிர்க்கூச்செறிகிறது. ராகம், தானம், பல்லவிக்கு எடுத்துக் கொண்ட காம்போதி பாக்கியம் செய்தது. ''இதுதான் காம்போதி; இப்படித்தான் பாட வேண்டும்'' என்ற அளவுக்கு இருந்தது ராக ஆலாபனை. தொட்ட இடமெல்லாம் ரஞ்சகமாயிருந்தது. கொஞ்சம் மேல் காந்தாரத்தில் விச்ராந்தியாய் நின்று தீர்க்கமான பொழிவுகளைப் பிரயோகிக்கலாம் என்று பாடகர் முயற்சித்தால், சௌடய்யா அவர்கள் ஆரோஹணை அவரோஹணம் பூராவும் ஓடி விளையாடி, பின்னர் காந்தாரத்துக்கு வருவார். பாடுகிறவருக்கு எவ்வளவு சௌகரியம் பாருங்கள்! ஆனால் எப்படியோ தனிமையில் நின்று போராடி ரஸிகர்களின் மதிப்பைப் பெரும் அளவில் ஜி. என். பி. பெற்று விட்டார். ஒரு நட்சத்திரக் கச்சேரிதான்; ஐயமில்லை.

## ராமநாதனின் "கோஷ்டி" கானம்

என்ன விழிக்கிறீர்கள்? வடமொழியில் கோஷ்டி என்றால் கோணல், சேஷ்டை என்ற பொருள் உண்டு. குரு சிஷ்ய பாவத்தில் பல விதங்கள் உள்ளன. இவ்வளவு இளம் வயதில் டைகரின் சேஷ்டைகளை முன்னுக்குக் கொண்டு வருவதில் ராமநாதனுக்கு இவ்வளவு சிரத்தை ஏன் என்று புரியவில்லை. வராத சங்கதிகள் வயிற்றை அமுக்கினால் வருமா? நல்ல ஞானம்; குருவின் பரிபூர்ண ஆசீர்வாதம். ஆனந்த பைரவியில் 'ஓஜகதம்பா' கீர்த்தனம் அருமையாயிருந்தது. ஸ்வரக் கோவைகள் கனகச்சிதம். இடத்துக்கு இடம், ஆவர்த்தத்துக்கு ஆவர்த்தம் ரொம்பப் பங்கீடாயிருந்தது. மணி பன்னிரண்டுக்கு மேல் பல்லவி பாடவில்லை என்று யார் அழுதார்கள்? சாவேரி பேஷாய்த் தானிருந்தது. தானம் தரமாயிருந்தது. ஆனால் அந்த அகாலத்தில் கேட்பதற்கு ஆள் வேண்டாமா? முன்னுக்கு வர வேண்டிய இந்த இளைஞர் கச்சேரி பந்தாவை முதலில் கற்றுக்கொள்ள வேண்டும்.

## வியவஹார சங்கீதம்

தேவலோகமாயிருந்தாலும், பூலோகமாயிருந்தாலும் சதா சமாதானமாயிருந்தால் வாழ்க்கை ருசிக்காது. ஓரளவுக்கு வியவகாரமும் இருந்தால்தான் நல்லது. இந்தத் தேவையைப் பூர்த்தி செய்யப் பம்பாய் கந்தர்வலோகத்திலே ஆலத்தூர் சோதரது பிரசன்னமானார்கள். காம்போதி வர்ணம் சர்வ நிச்சயத்துடன் இரண்டு காலத்தில் பாடப்பட்டது. ஹரிகாம்போதியில் 'சனிதோடி' என்ற தியாகராஜ க்ருதி மேற்கண்ட முறையில் சாஹித்ய சுத்தமாய்ப் பாடப்பட்டது. பல்லவிக்குப் பாடப்பட்ட நாட்டக்குறிஞ்சி பிரமாதம். இந்த அற்புதமான ராகத்தை அதியற்புதமாகக் கையாண்டார் பெரியவராய்க் காட்சியளிக்கும் சின்னவர் சுப்பு. ராக பாவம் பரிபூர்ணம். நாகஸ்வரப் பிடிப்புகளெல்லாம் ரம்மியமாய் அமைந்தன. இவ்வளவு விரிவான நாட்டக்குறிஞ்சி நான் இதுவரை கேட்டதில்லை. பிறகு வந்ததப்பா பல்லவி யுத்தம். ஒரே ரணகளம்தான்: கண்டஜாதி திருபுடை தாளம். நாலு களை சவுக்கம். நல்ல துல்லியமான மனோயான சரிஜமுச் சவுக்கம். பாலக்காடு மணி அய்யர் மிருதங்கத்திலும் புதுக்கோட்டை சாமிநாதப் பிள்ளையவர்கள் கஞ்சிராவிலும் அமர்ந்து விட்டு, சௌடய்யா அவர்கள் ஏழு தந்தியுடனும் ஏற்பட்டு விட்டால் பிறகு கேட்கவும் வேண்டுமா? ஒரே உத்ஸாகம்தான்; போதாக்குறைக்குப் பல்லவி அமைப்பும் கண்ட நடையில். அன்று மணி அய்யர் தனி ஆவர்த்தம் வாசிக்கவில்லை; மணி ஆவர்த்தம் வாசித்தார் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஷண்முகானந்த சபையின் சங்கீத விழா நடைபெற்ற ஒவ்வொரு தினமும் சபை இப்படித்



மதுரை மணி அய்யர்வாள் கச்சேரி வழக்கம் போல் நாததனு மனிசத்தில் துவங்கி, காம்போதியில் திளைத்து, ஷண்முகப்ரியாவில் ஜல ஜல என்று ஊசலாடி இங்கிலீஷ் நோட்டில் முடிந்தது. வயலின் வாசித்த லால்குடி ஜயராமன் அமுதத்தைப் பொழிந்தார் என்றால் அது மிகையாகாது. நாளுக்கொரு நயமும், புதுமையுமாய் நாத வெள்ளம் பொழிகிறார். தொட்ட இடமெல்லாம் சுநாதம், போங்கள்!

## ஹரி கதை

எம் பார்வையினின்றும் இதுகாறும் தப்பி வந்த எம்பார் விஜயராகவாச்சாரியாரை என்றென்றும் மறக்க முடியாத வண்ணம் செய்து விட்டது அன்னார் செய்த ராமதாஸ் சரித்திரம். எம்பாரின் வாக்சாதுர்யம் வசீயமானது; பாண்டித்யம் பிரமாதமானது. தியாகராஜ பக்தராகிய இவர் சாகித்யத் தெளிவுடன் அவர் பாட்டுகளைப் பாடிய போது சபையோர் மெய்ம்மறந்தனர். பின்பாட்டுக்கென்று ஏற்பட்ட அவர் சகோதரர் கச்சேரி வித்வான்கள் பாணியில் பாடுகிறவர். மிருதங்கம் கன கச்சிதம். சொற்கட்டுகள் வியக்கத்தக்க பந்தாவில் அமைந்தன. முத்தாய்ப்புகள் முதல்தரம். க்ஷீணித்து வரும் ஹரிகதைக் கலைக்கு இவர்கள் கோஷ்டி செய்யும் சேவை பாராட்டத் தக்கது.

## நாத வெள்ளம்

இந்த சீரிஸில் எம். எஸ். ஸின் கச்சேரி ஒரே நாத மயம். நான் வெகுவாய்ப் பயப்படும் கீர்த்தனங்களில் 'ஜகதானந்தகாரா' முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. இந்தப் 'பெரிய' கீர்த்தனையைப் பல கோணங்களில் ரசித்துப் பாடினால்தான் கேட்க முடியும். இல்லாவிட்டால் ரஸிகர்களுக்குப் பெருத்த சோதனைதான். சாகித்யத்தை உருக்குலையாமல், ராக பாவத்தைச் சிதைக்காமல், ஒரு உள்ளுணர்வுடன் பாடினால்தான் இதை அநுபவிக்க முடியும். இல்லாவிட்டால் வெறும் பஞ்சாதிதான். எம். எஸ். இந்தக் கம்பீர நாட்டையை மிக்க சொகுசுடன் கையாண்டார். ஸ்வரமும் சாகித்யமும் மாறி மாறி வரும் இடங்களில் இந்த நாத வித்யா உபாஸினியின் நயம் வெளியாயிற்று. பந்துவராளி ராக ஆலாபனையில் மேல் ஸஞ்சாரங்களில் சங்கதிகள் பந்து விளையாடின. ஸாரஜாக்ஷ கீர்த்தனையில் லாகவமான ''தநி கரி நித மக மத நிரி கரி'' போன்ற பிரயோகங்கள் மின்வெட்டாய்க் காட்சியளித்தன. ஆபோகியில் அநுபல்லவியில் சபாபதி, ரூபாநிதியாய்க் காட்சி அளித்தான். ''சாமகான விநோதினி'' சரணத்தில் சங்கராபரணம் ஸ்வரூபத்துடன் விளங்கியது. ஸ்வரப்ரஸ்தாரங்களுக்குச் சுகமாய் அமைந்த இந்த இடம் நன்கு பயன்படுத்தப்பட்டது. பல்லவிக்கு அமைந்த கீரவாணி ராக ஆலாபனை கச்சேரியின் உச்சியாய் அமைந்தது. கீரவாணியைப் பலர் பாடும்போது அதன் பெயரை ''கரகரப்ரிய மாயமாளவ கௌளம்'' என்று மாற்றி அமைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடும். கொஞ்ச நேரம் மேலேயும் பின் சற்றுக் கீழேயும் பாடி அதை சமாப்தி செய்து விடுவது சகஜம். ராகத்தின் ஸ்வரூபத்தை அறிந்து பாடிய எம். எஸ். ரஸிகர்களின் உள்ளங்களைக் குளிரச் செய்து விட்டார்கள். கண்ட ஜாதியில் நுழைந்து தம்மையும் பிறரையும் இம்சிக்காமல் சௌக்கியமான ஸர்வ லகுவான ஆதிதாளத்தில் பல்லவி அமைத்தது குறிப்பிட வேண்டிய அம்சம். பல தரப்பட்ட ரஸிகர் குழாத்தின் ஆசையைப் பூர்த்தி செய்யப் புரந்தரதாஸரும் துளஸிதாஸரும் உதவி புரிந்தார்கள். நான்கு மணி நேரம் நாதவெள்ளம் என்று கொஞ்சம் கவிப் பண்புடன் சொல்லத் தூண்டுகிறது.

விலாயத்கானின் ஸிதார் கச்சேரியை விஷயம் தெரிந்தவர்கள் எல்லாம் மிகவும் ரஸித்தார்கள். பீம்பிளாஸில் பல அபூர்வ சங்கதிகள் விழுந்தன. கமாஜ் ரஞ்சிதமாயிருந்தது. இதற்கு மேல் எழுதினால் நீங்கள் கட்டாயம் பொறுமையை இழந்துவிடுவீர்கள்.

தான் தோற்றமளித்தது. இது சபையின் ஒரு சிறு பகுதிதான்.





திருமதி எம். எஸ். கச்சேரியின்போது, உற்சாகத்துடன் கலந்து கொண்ட மத்திய மந்திரி திரு கேஸ்கர் தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துப் பேசுகிறார்.

## பரத நிகழ்ச்சிகள்

குமாரி வஸந்தா, ஸ்ரீமதி கமலா லக்ஷ்மணன், குமாரி வைஜயந்திமாலா ஆடிய நாட்டியங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் சிறப்பாக அமைந்தன.

'வஸந்தாவின் நாட்டியம் சம்பிரதாய சுத்தமாயும், அடவுஜதிகள் 'விளம்பமாயும் விவரமாகவும், கெட்டியாகவும் அமைந்தது. ''கர்நாடகம்'' முன்பு கூறியது போல் ஜனரஞ்சிதமாக ஆடப்படும் நாட்டிய பாணிகள் நிறைய இருந்தாலும் பழமையின் பெருமையை எடுத்துக் காட்டும் இந்த வகை ஒன்று இருப்பதும் நலம்தான். பார்த்தசாரதி அய்யங்காரின் பின்னணி வாத்திய இசை இனிமையாக அமைந்ததாக உள்ளூர்ப் பத்திரிகைகள் ஒருமுகமாகக் குறிப்பிட்டிருக்கின்றன. மகாலிங்கத்தின் பாட்டு நாட்டியத்துக்கென்றே அமைந்த வகையைச் சேர்ந்தது.

மேற்கூறிய இலை போட்ட சம்பிரதாயக கர்நாடக விருந்தை யடுத்து, கமலாவின் எவர்ஸில்வர் தட்டில் பரிமாறப்பட்ட, ரஸகுல்லா தந்தூரி கலந்த சாப்பாடு பெருந்திரளான ஜனங்களைக் கூட்டி உற்சாகப் படுத்தியதில் வியப்பொன்றும் இல்லை. கல்யாணி வர்ணம் கனகச்சிதம். பேசும் விழி படைத்த இம்மங்கை விகம் ஒளியுடன் பிரகாசிப்பதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இடைவேளையை யடுத்துப் பாம்பு நடனம், கதக் நடனம், கிராமிய நடனம் என்று பல தரப்பட்ட பலசரக்குகள் கூடையிலிருந்து வெளிப்பட்டன. பாவங்களைக் கறுப்பு சிவப்பென்று வெளிச்சம் போட்டு வெளிப்படுத்தினர் மின்சாரக்காரர்கள். ஒரு ஹிந்துஸ்தானி பஜன் பாட்டைக் கமலாவே பாடிக் கொண்டு அபாரமாக ஆடினாள். தன்னுடைய சகோதரியுடன் ஆடிய 'மீரா நாட்டிய நாடகம்' மிகவும் கவர்ச்சியா யிருந்தது.

வழுவூர் ராமையாப் பிள்ளையவர்கள் பரத நாட்டிய அபிநயங்களுக்கு மாத்திரம் நட்டுவாங்கம் செய்து அழகுக்கு அழகு செய்தார். அவர் சொல்லுக்கட்டுகள் சொல்லுவதும், விவகாரமான ஜதிக்கோவைகளை அநாயாசமாகப் பங்கிட்டு செய்து பரிமாறுவதும் அற்புதமாயிருந்தன. பின்னணி வாத்தியங்களைக் கொஞ்சம் முன்னணிக்குக் கொண்டு வருவதில் மாத்திரம் கொஞ்சம் முனைய வேண்டும்.

வைஜயந்திமாலாவின் நாட்டியம் ஒரே வர்ணஜால மயம்தான். ருசியான பின்னணி சங்கீதமும், கவர்ச்சியான ஆடைகளும், நட்சத்திர மதிப்பும் கட்டிலடங்கா கூட்டத்தைக் கரகோஷம் செய்ய வைத்ததில் வியப்பில்லை. மிகவும் பிடித்த பாகம் ஸ்ரீரஞ்சனி கீர்த்தனைக்கு அபிநயம்தான். தண்டாயுத பாணி பிள்ளையவர்களின் கைத்திறன் அதில் வெளியாயிற்று.

## வந்தனோபசாரம்

தலைவர் டி. வி. ராமானுஜம் ஒரு சிறந்த ரஸிகர். அவரது சுருக்கமான பிரசங்கங்கள் சங்கீதத்தை ஒத்திருந்தன. இன்முகமும், இன்சொல்லும் படைத்த இவர் பல்லாண்டு வாழ்ந்து பணி செய்ய வேண்டும்!

விருந்தோம்பல் கலையின் சிகரத்தைக் காண வேண்டுமானால் பம்பாய் ஷண்முகானந்த பைன் ஆர்ட்ஸ் சபைக்கு ஒரு முறை போய் வர வேண்டியதுதான். உக்கிராணம் உள் உ. வே. சிவராம கிருஷ்ணய்யர் முதல், ரயிலேற்றி விடும் நாஸு வரை எல்லாரும் பெண் வீட்டுக்காரர்கள் போல் நடந்து கொள்ளுவதைப் பாராட்ட வேண்டும்.

# பாவை விளக்கு

## அத்தியாயம் 16

## கற்பனையும் வாழ்க்கையும்

எந்தச் செய்தியை, எந்த வேளையில் யாரிடம் சொல்லக் கூடாதோ அவளிடம் சொல்லித் தொலைத்து விட்டான் தணிகாசலம். களைப்பும், சோர்வும், ஏமாற்றமும் நிறைந்த அந்த மாலைப் பொழுதில் அவன் மனக் கதவுகள் 'படீர் படீர்' என்று வெடித்துத் திறந்து கொண்டு, மனத்துக்குள்ளே பூட்டி வைத்திருந்த அந்தரங்க நினைவுகள் அனைத்தையும் சிதறச் செய்து விட்டன.

கதாபாத்திரங்கள் பெரும்பாலும் ஒரேமாதிரி தங்கள் கதைகளில் நடந்து கொள்ளுகிறார்கள். ஆனால் கடவுள் மனிதர்கள் எல்லோரையும் கதாபாத்திரங்களாகப் படைக்கவில்லை. மனிதர்கள் வாழ்க்கையின் கைப்பாவைகள்.



பெரிய மனிதர்கள், புத்திசாலிகள், நல்லவர்கள், வல்லவர்கள் என்று நீங்கள் நினைக்கக் கூடியவர்கள் அனைவருமே எப்போதும் ஒரேவகையாக நடந்து கொள்வார்கள் என நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? ஏமாறாதீர்கள்! பாதி நேரத்துக்குமேல் அவர்களும் சோம்பேறிகள், வலுவிழந்தவர்கள், முட்டாள்கள், — வெகுளிகள்! — மனித இயந்திரத்தின்படைப்பு அப்படிப்பட்டது.

**அகிலன்**

ஆயிரத்தில், லட்சத்தில், கோடியில் ஒரே ஒரு மனிதர் அகப்படலாம், இந்த நியதிக்குக் கட்டுப்படாத மனிதர். ஆனால் தணிகாசலம் சாதாரண ஒரு மனிதன்.

கௌரியிடம் போய் அவனுக்கு 'சர்டிபிகேட்' வழங்கச் சொன்னால் அப்போது தெரியும் அவன் திறமை! உலகத்திலுள்ள மற்ற எந்தப் பெண்ணும் தன் கணவனைப்பற்றி என்ன சொல்வாளோ, அதையே கௌரியும் சொல்வாள்: ''ஆண் பிள்ளையாவது ஆண்பிள்ளை! சுத்த மோசம்!''

உமாவிடம் கேட்டால் இன்னும் ஒரு படி மேலே போய்விடுவாள்: ''முரடர், மூன் கோபம் வரும், எரிந்து விழுவார், உலகத்துத் துன்பங்களுக்கு வக்காலத்து வாங்கும் சுபாவம், — நான் ஒருத்தி மட்டும் இல்லாவிட்டால் இவர் எழுதிக் கிழித்து விடுவாரோ?''

வெளி உலகத்தில் ஆண்கள் தங்கள் வலிமையால் நடிக்கிறார்கள். வீட்டில் பெண்கள் அவர்கள் வேஷத்தைக் கலைக்கிறார்கள். ஆண்களது பலவீனத்தின் சுமைதாங்கிகள் பெண்கள். ஆக்கும் சக்தியுள்ள பெண்கள் ஆண்களுக்குப் புத்துயிர் தருகிறார்கள்; அழிக்கும்

சக்தியுள்ள பெண்கள் ஏற்கெனவே உள்ள உயிரையும் உறிஞ்சித் தள்ளுகிறார்கள்.

''பிருந்தாவன சஞ்சாரி! கிருஷ்ண முராரி...''

எங்கோ இப்படி ஒரு பாட்டைக் கேட்ட ஞாபகம் தணிகாசலத்துக்கு. அவன் சென்று வந்த 'பிருந்தாவனம்' இப்படிப்பட்டதல்ல. இந்தப் பிருந்தாவனத்தில் உலவிய நந்தகுமாரர்கள் இன்னும் இந்த நாட்டின் நாடித் துடிப்பை உணர்ந்துகொள்ளாதவர்கள். 'தர்க்கரீதியாக மற்றவர்களுக்கு ஆலோசனை சொல்கிறேன்; என்னால் இந்தச் சிறு தோல்வியை ஒப்புக்கொள்ள முடியவில்லையே!' என்று தன்னையே நொந்து கொண்டான் தணிகாசலம்.

தணிகாசலத்துக்குத் தன்னைத்தானே அப்போது தட்டிக் கொடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. உற்சாகத்தை விலைக்கு வாங்கவேண்டியிருந்தது. அதற்காக அவன் உமாவுக்குத் திருமண வாழ்த்துக் கூறினான்.

கல்யாணம் உமாவுக்கு இல்லை; அவள் அத்தை மகள் ருக்மிணிக்கு! யாருக்கோ கல்யாணம், தனக்கு வாழ்த்தென்றால் அவள் ஒப்புக் கொள்வாளா? அதை அவன் முகத்தில் திருப்பி வீசினாள்.

உமா கூறினாள்: ''எந்தப் பயலும் என்னைத் தேடிக் கொண்டு வரமாட்டான்! ருக்மிணிக்கு இப்போது மாப்பிள்ளை வேட்டை நடக்கிறது. நாளைக்குச் சாயங்காலம் மாப்பிள்ளை வீட்டார்கள் வந்து சேருகிறார்களாம். அத்தையம்மாள் இப்போதே இதைக் கல்யாண வீடாக்கி விட்டார்கள்.''

''செய்யவேண்டியதுதானே?'' என்று சொல்லிவிட்டு, ''அப்படியானால் ருக்மிணிக்கு என் மனம் நிறைந்த வாழ்த்துக்களைச் சொல்'' என்றான் அவன்.

''அது சரி, உன் 'பேப்பர் டிஸ்போசல்' மாமா நாளைக்காவது வீட்டில் தங்குவாரா? அல்லது 'டிஸ்போஸ்' செய்யப் போய் விடுவாரா?''

''நாளைக்கு மாமாவை லீவு போடச் சொல்லி வீட்டில் உத்தரவு. அவர்கள் வரும் வரையில் வீட்டிலேயே ஆபீஸ் நடத்தச் சொல்லி அத்தை அனுமதி கொடுத்திருக்கிறார்கள்.''

தணிகாசலத்தின் மடியில் கிடந்த குழந்தை உறங்கத் தொடங்கினான். உமா அவனை வாங்கித் தூளியில் போட்டு விட்டு வந்து, அவனிடம் பிருந்தாவனத்தில் நடந்த கதையைக் கேட்டாள். அவனுக்கும் அவளிடம் அதைச் சொல்லி ஆற்றிக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. முழுவதையும் சொல்லிவிட்டு, ''இது வீட்டுக்குத் தெரிய வேண்டாம்; கேட்டால் மிகவும் வருத்தப் படுவார்கள்; ஆறு மாதத்தில் படம் பிடிக்கப் போவதாக அவர்களிடம் சொல்லி வைத்திருக்கிறேன்'' என்று கூறினான்.

உமாவின் முகத்தில் ஈயாடவில்லை. மோகனரங்கம் அவனைத் தேடி வந்த போது அவள் உடன் இருந்தவள். அவளையும் கல்யாணி அம்மாளையும் வைத்துக் கொண்டுதான் அவர் தமது திட்டங்களை வெளியிட்டார். 'எப்படி எடுக்க வேண்டும்; எப்போது எடுக்க வேண்டும்; யார் நடிக்க வேண்டும்' என்றெல்லாம் பிரமாதமாய்ப் பேசினார்.

''வெள்ளித்திரையில் உங்கள் பெயரைக் காணலாம் என்றார்; வெள்ளிப் பணத்தால் உங்கள் வீடு நிறையுமென்றார். நானும் அத்தையும் அப்போது உடன் இருந்தோமே!''

''எனக்காக அவர்களை எடுக்கச் சொல்ல முடியுமா?''

''திட்டமில்லாமல் எப்படி உங்களிடம் வந்தார்கள்?''

''எல்லாம் ஒரு பெண் பிள்ளையின் உற்சாகத்தால் வந்த வினை...''

''என்ன!''

''ஆமாம்; தொழில் வேறு, குடும்பம் வேறு என்று இல்லாமல், இந்த விஷயத்தில்" குமாரசாமி தம் மனைவியின் பேச்சைக் கேட்டு இறங்கிவிட்டார். செங்கமலத்தால் வந்த தொல்லை இது! எனக்கும் அவருக்கும் அவள் நல்லது செய்ய நினைத்திருக்கிறாள். நினைத்தது ஒன்று; ஆனால் நடந்தது மற்றொன்று.''



''செங்கமலமா? அவளுக்கு ஒன்றும் தெரியாதென்றீர்களே?'' என்று வியப்புடன் கூவினாள் உமா.

''எனக்கே இன்றைக்கு மத்தியானந்தான் தெரியும்.''

தணிகாசலம் அவள் தன்னை வழியில் சந்தித்துப் பேசியதையெல்லாம் உமாவிடம் கூறினான். அவனுக்குள்ளே செங்கமலத்துக்காகப் பொங்கியெழுந்த நன்றி உணர்ச்சி அவன் பேச்சில் ஊற்றுப் பெருக்காய்க் கொட்டியது. அவளும் தானும் ஒன்றாகவே இருந்து, முதல் நாள் திரைப்படத்தில் அவர்களுடைய சொந்தக் காட்சியையே திரும்பப் பார்த்துக் கொண்டதும் நினைவில் வந்தது.

''விதி என்று ஒன்று இருந்து அது மனிதன் எங்கு போனாலும் அவனைத்தொடர்ந்துகொண்டே வருகிறதுபோலும்...''

''தங்களுடைய உழைப்புக்காவது பணம் கொடுத்து அனுப்பியிருக்கலாமே?'' என்றாள் உமா.

''யோக்கியர்கள் பசுபதியிடம் பணம் பெற முடியாது; தட்டிப் பறிப்பதற்கு எனக்கும் தெரியவில்லை. செங்கமலத்தின் திருப்திக்காக நான் வாங்கிக் கொண்டிருந்தால், அந்த மூன்று மனிதர்களிடம் எனக்கு ஏற்பட்ட கசப்பு உணர்ச்சி மாறி விடும். எழுத்தாளன் எதையும் இழப்பதில்லை. அந்தக் கசப்பின் விலை என்ன, தெரியுமா? பத்தாயிரம்! அதையே எழுதி நான் படம் பண்ணுகிறேன் பார். இந்த உலகத்தில் பசுபதியை விட்டால் வேறு யாரும் நல்லவர்கள் கிடையாதா, என்ன?''

துவண்டுபோன வாழைக் குருத்தாய்த் தணிகாசலம் சாய்வு நாற்காலியில் விழுந்து கிடந்தான். சன்னலுக்கு வெளியே வேப்ப மரத்தில் ஒரு இலைகூட அசையவில்லை. உமாவும் அசையாச் சித்திரமாக அவன் அருகில் உட்கார்ந்து அவன் தோல்வியைப் பங்கு போட்டுக்



கொண்டிருந்தாள். தோல்வியை ஒப்புக் கொள்ளாத அவனுடைய பேச்சு அவளுக்குச் சிரிப்புத் தந்தது.

''செங்கமலத்துக்கு ஏன் மாமா உங்களிடம் இவ்வளவு அக்கறை?''

தணிகாசலம் எங்கோ நினைவாக இருந்தான். உமா திரும்பவும் அதே கேள்வியைக் கேட்டாள். ''செங்கமலத்துக்கு உங்களிடம்...?''

''அது ஒரு சோகக் கதை...''

பெருமூச்சு சிறிக்கொண்டு வந்தது.

''என்னிடம் சொல்லக் கூடாதா அதை?'' என்று கேட்டாள் உமா.

வாய் தவறிச் சொல்லி விட்டவன் போல் அவன் விழித்துக் கொண்டான். ஆனால் அந்த விழிப்புப் பாதி விழிப்புத்தான்.

உமாவின் குரலில் உருக்கம் நிறைந்திருந்தது. ''அத்தையிடம் சொல்லாததை யெல்லாம் என்னிடம் சொல்லுகிறீர்களே! இதைச் சொல்லக் கூடாதா? எனக்கு உங்களிடம் அக்கறை இல்லையா? உங்கள் உழைப்பில் பங்கு தருகிறீர்கள்; உங்கள் மகிழ்ச்சியில் பங்கு தருகிறீர்கள்; உங்கள் துன்பத்திலும் எனக்குப் பங்கு தரக் கூடாதா?''

தணிகாசலம் கண்களை மூடித் திறந்து விட்டு வறட்டுச் சிரிப்புச் சிரித்தான். ''துன்பம்! துன்பம்!'' என்று கூறிக்கொண்டே தன் தலைமயிரைப் பின்னால் தள்ளினான். அவனுடைய வயிறு குலுங்கியது; நெஞ்சு குலுங்கியது; அவனே ஒரு குலுங்கு குலுங்கினான்.

''எல்லாம் அவள் கொடுத்த துன்பந்தான்! அந்தப் பாவி கொடுத்த துன்பந்தான்!'' என்று பதறினான்! ''எந்த வேளையில் பேனாப் பிடித்து அவள் கொடுத்த துன்பச் சுமையைக் காகிதத்தில் இறக்கத் தொடங்கினேனோ, அன்றிலிருந்து துன்பந்தான். துன்பம் என்னைத் தொடர்ந்து கொண்டே வருகிறது. கதையாம், கதை! எனக்குக் கதை எழுதத் தெரியாது, உமா! கதை எழுதத் தெரியாது. வாசகர்களுக்கு நான் தொடர் கதை எழுதி விட்டு, சொந்த வாழ்வில் தொடர் துன்பம் அநுபவிக்கிறேன். இரண்டும் இந்த உயிருள்ளவரை ஓயவே ஓயாது போலிருக்கிறது உமா!...''

'சட்'டென்று அவன் வாயைப் பொத்தினாள் உமா. மூச்சுக் காற்றின் நெருப்பு அவளுடைய விரல்களைப் பொசுக்கியது.



தணிகாசலம் முரட்டுத்தனமாய் அவள் மென்கரத்தை ஒதுக்கித்தள்ளிவிட்டு மேலே பேசினான்; ''முதல் கதைதான் அவள் கதை! அதில் என் நெஞ்சைப் பிய்த்துப் பிய்த்து ஒட்ட வைத்திருக்கிறேனே, உனக்குத் தெரியவில்லையா? எந்த நேரத்தில் அவள் முகத்தில் விழித்தேனோ அன்றிலிருந்தே என் வாழ்க்கைப் படகை அவள் திசை திருப்பி விட்டாள். அதற்கு முன்பு நான் எழுதப் போவதாய்க் கனவு கூடக் , காணவில்லை. முதல் கதையின் பெயரும் 'ஏமாற்றம்', இன்றைக்கு அவள் கணவனுக்காக எழுதிய கதையும் ஏமாற்றம்! எழுத்தாம் எழுத்து! இடையில் அவளால் எத்தனை எத்தனை ஏமாற்றங்கள்! நம்பிக்கையை வளர்த்து ஏமாற்றுவதே அவள் தொழில். கடற்கரையில் காற்றாடப் போய்க்கொண்டிருந்தவனை வழி மறித்து ஏன் இத்தனை நாட்களாய்ச் செக்கு மாடாய் உழைக்க வைத்தாள்?—வெறுப்பால் கிடைக்கும் துன்பத்தை நான் தாங்கிக் கொள்வேன்; அன்பால் கிடைக்கும் துன்பத்தை என்னால்தாங்க முடியாது, உமா!...''

தன்னைப்பேயாய்ப் பிடித்துக்கொண்டு ஆட்டிய எழுத்துப் பழக்கத்துக்கு அவளே காரணமென்று மனங்கொண்ட மட்டும் அவளைத் திட்டினான்: "குடியும் பழக்கம், எழுத்தும் பழக்கம், மனிதன் பழக்கத்துக்கு அடிமை" என்று புழுங்கினான். "இந்தப் பழக்கம் இல்லாவிட்டால் எங்கேயாவது போய் நிம்மதியாய் உழைத்துக்கை நிறையச் சம்பளம் வாங்கிக் கொண்டு காலந்தள்ளியிருக்கலாம்." தணிகாசலத்துக்கு இந்த நிலையில் வீட்டின் நிதி நிலைமை வேறு நினைவுக்கு வந்து விட்டது. வயிற்றெரிச்சலைக் கிளறும் நினைவு அது. வெள்ளித் திரையை எதிர்பார்த்துக்கொண்டிருந்ததால் சல்லிக் காசு கூட வீட்டில் இல்லை!

உமாவைத் திரும்பிப் பார்த்தான். 'சிங்கத்துக்கு முன்னால் நின்று கொண்டு செய்வதறியாமல் தவிக்கும் சின்னஞ்சிறு செம்மறியாட்டுக் குட்டி போல் அவள் மிரள மிரள விழித்தாள்.

"தயவு செய்து நீ வெளியில் போ, உமா!" என்று உறுமி விட்டுத் தன்னுடைய முகத்தைக் கைகளுக்குள் அவன் புதைத்துக் கொண்டான். சமுதாயத்தின் கோணலை அவன் பேனாமுனையால் நிமிர்த்துவதற்குள், சமுதாயப் பெருச்சாளிகள் அவன் முதுகையே நிமிர்த்தி விடுவார்கள் போலிருந்தது. அன்றைக்கு நாகநாதன் அவனை வெளியே அனுப்பினார்; அரிசிக் கடைக்காரன் அவனைக் குத்திக் கிழிக்க வந்தான்; பசுபதி சரியான சமயம் பார்த்துக்கொண்டிருந்து வஞ்சம் தீர்த்து விட்டார். "எல்லாம் இந்த நாசமாய்ப் போன செங்கமலத்தால் வந்த வினை! அவளுக்கு என்ன நன்றி வேண்டிக் கிடக்கிறது? பணத் திமிர்! என் ஏழைமையைச் சுட்டிக்காட்டி என்னைப் பரிகசிப்பதற்காகவா இந்த உதவி?—முதலில் எனக்கு உதவிசெய்ய வருகிறவர்களை வெளியில் போகச் சொல்ல வேண்டும்!"

"என்னைக் கூடவா, மாமா?"

தனக்குள்ளே பேசிக்கொண்ட தணிகாசலம் திடுக்கிட்டுத் தலையைத் தூக்கிப் பார்த்தான். "இங்கிருந்து நீ இன்னும் போகவில்லையா, உமா?"

'போகச் சொல்லாதீர்கள்' என்று அவள் கண்களால் கெஞ்சினாள்.

"உழைப்புக்குத்தான் கூலி கேட்க வேண்டும்; இரக்கத்தால் அரைக்காசு கூடப் பெறக்கூடாது. தெரிந்ததா? உனக்கும்தான் இந்தப் பேச்சு."

"தெரிந்தது" என்று அவள் 'ஆமாம் சாமி' போட்டாள்.

"என்ன 'தெரிந்தது?'—நீ இனிமேல் என்னிடம் இரக்கங் காட்டியோ, அநுதாபங் கொண்டோ இலவசமாக வேலை பார்க்க வேண்டாம். நான் யாருக்கும் இரக்கங் காட்டப்போவதுமில்லை; அதை எதிர்பார்க்கவும் மாட்டேன். உன் உழைப்புக்கு உள்ள ஊதியத்தை என்னிடம் கேட்டு வாங்கிக் கொள். நீ பேராசிரியர் பெண்ணாக இருந்தால் என்ன? கல்லூரியில் பேராசிரியையாகவே இருந்தாலும் என்ன?"

"சரி, மாமா!"

"என்ன, சரி?"

"வேண்டும்போது எல்லாவற்றையும் சேர்த்து வாங்கிக்கொள்கிறேன். கட்டாயம் வாங்கிக் கொள்வேன்."



தணிகாசலம் சிரித்து விட்டான். அவள் பேச்சு வெட்டிப்பேச்சு! அவனால் கொடுக்கவும் முடியாது; அவள் வாங்கிக் கொள்ளவும் மாட்டாள்.

அவனுடைய புண்பட்ட தன்மான உணர்ச்சிக்கு அருமருந்தாக உமா நான்கு வார்த்தைகள் இதமாகப் பேசி அவனைத் தேற்றினாள். தணிகாசலம் அதைக் கேட்டுக் கொண்டே அரை மணி நேரம் ஒரு கோழித் தூக்கம் போட்டுக் கண் விழித்தான். கண் விழித்துப் பார்த்தபோது அவள் அருகில் அவள் நின்று விசிறிக் கொண்டிருந்தாள்.—சுழல் விசிறி அறையில் இருந்தும் அவள் அதைப் போடவில்லை.



வீட்டுச் சொந்தக்காரர் :— நீங்கள் தானே காரை மோதி இந்த வீட்டுத் தூணை இடித்துத் தள்ளினீர்கள். ரிப்பேர்க்காரர் வருகிற வரையிலும் நீங்களே தாங்கிண்டு இருங்கள்.

---

விசிறியை வெடுக்கென்று பிடுங்கித் தூர எறிந்து விட்டு, ''இப்படி உட்கார்!'' என்று நாற்காலியைக் காட்டினான். ''உன்னிடம் நான் உளறிக் கொட்டியதை யெல்லாம் உடனே மறந்துவிடு. எப்போதாவது நான் கோபமாய்ச் சீறி விழுந்தால் அதையெல்லாம் பொருட்படுத்தாதே! சாண் ஏறினால் முழம் வழுக்குகிறது என் பிழைப்பு. அந்தக் கோபத்தை உன்மீது காட்டுகிறேன். அவ்வளவுதான். தேவகி அக்காள் எனக்குள்ளே இரண்டு மனிதர்கள் இருப்பதாய்ச் சொன்னதும் உண்மைதான். தர்க்க ரீதியாக வாழக் கற்றுக் கொண்டு அந்த இருவரையும் ஒருவனாக மாற்ற வேண்டும்.''

''தேவகி அக்காளா!'' — உமா தேவகியை உடும்புப் பிடியாய்ப் பற்றிக் கொண்டு கேள்விமேல் கேள்வியாகக் கேட்டாள். ''அது என்ன கதை?''

அந்த நேரத்தில் உமாவே புத்திசாலி. தணிகாசலம் செங்கமலத்தின் கதையைச் சொன்னதோடு நிற்காமல், தான் படித்த காலத்தில் தேவகி தன்னை மணந்து கொள்ள விரும்பியதையும் சொல்லி விட்டான். 'தேவகி விரும்பினாள்; நான் மறுத்தேன்' என்ற முறையில் அதை வெளியிட்டான்.

கண்ணிமைக்காமல் வினயமாக உமா அவ்வளவையும் கேட்டுக்கொண்டிருந்து விட்டு, ''அப்படியானால் 'தங்கச் சங்கிலி' அவர்களுடைய உண்மைக் கதைதானா?'' என்று வினவினாள்.

''ஆமாம்; அந்த அக்காள் ஒரு அன்புச் சங்கிலி; மாசுமறுவற்ற பத்தரைமாற்றுத் தங்கச் சங்கிலி!''

உமாவின் பார்வை அதற்குப் பின் வேப்பமரத்தை ஊடுருவியது. ஊடுருவிக் கொண்டு அதற்கப்பாலும் வானத்தை நோக்கிச் சென்றது. நீண்ட நேரம் அவள் நினைவில் முழுகத் தொடங்கினாள்.

''போதி மரத்தடியில் புத்தர் உட்கார்ந்ததுபோல் சிலையாகி விட்டாயே!''

உமாவின் பார்வை அவன் பக்கம் திரும்பியது. ''புத்தர்பிரான் உலகத்தின் துன்பத்துக்கு மூலகாரணம் கண்டு பிடித்தார். நான் உங்கள் கதையின் ஆணி வேரைத் தேடிக் கொண்டிருக்கிறேன்.''

தணிகாசலத்துக்கு ஒரு கணம் தூக்கி வாரிப் போட்டது.

''திரும்பவும் நீங்கள் எழுதியதையெல்லாம் சேர்த்து வைத்துப் படிக்கப் போகிறேன்'' என்றாள் உமா.

'வந்தது ஆபத்து' என்று நினைத்தான் தணிகாசலம். ''முதலாளி தன்தொழில் ரகசியங்களைக் கணக்கரிடம் சொல்வது போல், நான் எல்லாவற்றையும் உன்னிடம் சொல்லி விட்டேன். நீ எதையும் வெளியில் காட்டிக் கொடுத்து விடாதே! எல்லாவற்றையும் மனத்தில் போட்டுக் காப்பாற்றி வை.''

உமாவின் உதடு புன்முறுவல் காட்டுவதுபோல் மெல்ல நெளிந்தது. அறைக்குள் இருள் பரவியதால் தணிகாசலம் எழுந்து போய் விளக்கைப் போட்டான். உமா அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அன்றைக்கு அவனை அவள் பார்த்ததுபோல் அதற்கு முன்பு என்றைக்குமே பார்த்ததில்லை. பெருமூச்சால் மார்பகம் ஓங்கி விம்ம அவள் மெதுவாக எழுந்து சென்றாள்.

துன்ப நினைவுகளைக் கழுவிக்கொள்ள விரும்பிய தணிகாசலம், மற்றொரு துன்பத்துக்கு அவனையறியாமலே வித்தூன்றி விட்டான். அது துன்பமா? இன்பமா?—விதை விழுந்து விட்டது! முளைத்துத் தளிர்விடப் போகிறது.

மனோதத்துவக் குப்பைகளைக் கிளறுவதாகப் பெருமை கொள்ளும் தணிகாசலமே! அவள் பார்த்த பார்வையின் பொருள் என்னவென்று உனக்குத் தெரியுமா? அன்றொரு நாள் கதை எழுதும் வேளையில் அவள் உள்மனம் வெடித்து, அவள் பெண் என்பதை அவனுக்கு எடுத்துக் காட்டியது; பிறகு உன்னை

யும் செங்கமலத்தையும் கடற்கரையில் கண்டவுடன் அவள் சந்தேகம் கொண்டாள்; அந்தச் சந்தேகம் இன்றைக்கு அவள் நெஞ்சத் தடாகத்தில் அழகியதொரு பொறாமைத் தாமரையாய் மலர்ந்திருக்கிறது. பெண் பெண்ணானாள்; சந்தேகப் பட்டாள்; பொறாமை கொண்டாள். இப்போது? இப்போது? இப்போது?......அந்தப் பார்வை, பெருமூச்சு, மார்பகத்தின் விம்மல்!

## அத்தியாயம் 17

# நெஞ்சக் கடலின் நினைவு எதுவோ?

பொழுது விடிவதற்கு முன்பே, பொழுது விடிந்ததாக நினைத்துக் கொண்டு செளந்தரத்தம்மாள் தன்வீட்டில் உள்ளவர்களைச் சத்தம் போட்டு எழுப்பி விட்டாள். அவள் போட்ட சத்தத்தில் வேப்ப மரத்தில் கூடு கட்டியிருந்த காக்கைகள் விழித்துக் கொண்டன. காக்கைகளின் சலசலப்புத் தாங்காமல் மாடியில் குடியிருந்த தணிகாசலம் விழித்துக் கொண்டான்.

பிற்பகல் நான்கு மணிக்கு மாப்பிள்ளை வீட்டார் வருவதாக இருந்தார்களாம். சரியாகப் பன்னிரண்டு மணிக்கே பெரும்பாலான ஏற்பாடுகளைச் செய்து முடித்து விட்டாள் செளந்தரத்தம்மாள். பக்கத்துப் பங்களாக்களில் இரவல் வாங்கிய வெல்வெட் சோபாக்கள் வீட்டின் உள் கூடத்தை அலங்கரித்தன. காஷ்மீர் கம்பளங்கள் தரையை மறைத்தன. சன்னலுக்குச் சன்னல், கதவுக்குக் கதவு நீலநிறத் திரைத் துணிகள் தொங்கின. செளந்தரத்தம்மாள் அலமாரிக்குள் அடைத்துக் கிடந்த வெள்ளிப் பாத்திரங்களை வெளியில் எடுத்துத் துடைத்து வைத்தாள். ருக்மிணியோ தன்னை அலங்கரித்துக் கொள்வதற்காகக் கண்ணாடி பீரோவிடம் தஞ்சம் புகுந்தாள்.

அன்றைக்கு அந்த வீட்டில் மூன்று பேர்களுக்கு 'லீவு'. பையன் பாலு பள்ளிக்குச் செல்லவில்லை; உமா கல்லூரிக்குச் செல்லவில்லை; பெரியவர் ஆபீசுக்குச் செல்லவில்லை. அவர்கள் போக வேண்டிய இடங்களுக்கு விடுமுறைச் சீட்டுக்கள் சென்றன. இன்னும் அடுப்பு வேலை மட்டிலும் பாக்கி இருந்தது. உமா தன் அத்தைக்கு எடுபிடி வேலை செய்து கொண்டிருந்தாள்.

தணிகாசலம், டார்வின் எழுதிய 'உயிர்ப் பிராணிகளின் வரலாறு' என்ற நூல் சுருக்கத்தை எடுத்துக் கொண்டு மொழிபெயர்க்கத் தொடங்கினான். புத்தக வெளியீட்டாளர்களிடம் அதுபற்றி முன்பே பேசி வந்திருக்கிறான். அவர்கள் சாதகமான பதில் சொல்லவில்லை. "உங்கள் சிறுகதைகளைக் கொடுங்கள்; நாவல்களைக் கொடுங்கள்; அல்லது ஏதாவது மேல்நாட்டுக் குப்பைக் கதைகளைத் தமிழாக்கிக் கொடுங்கள்; போடுகிறோம்" என்றார்கள். "இந்த நாட்டில் மட்டரகமான வாசகர்களும், மட்டரகமான ரசிகர்களும் பெருகி வருவதால், உங்கள் சொந்தக் கற்பனைகளை விடக் கொலை, கொள்ளை, இழிந்த வாழ்க்கை பற்றிய எழுத்துக்களுக்கே அதிகக் கிராக்கி உண்டு" என்று ஒரு வியாபாரி அவனுக்கு நயமாகப் போதனை செய்தார். தணிகாசலம் திரும்பி வந்து விட்டான். 'உணர்ச்சிக்கு மட்டும் விருந்து கொடுத்தால் நல்ல வியாபாரம்; உணர்ச்சியையும் அறிவையும் கலந்து கொடுத்தால் சுமாரான வியாபாரம்; வெறும் அறிவுக்கு மட்டும் விருந்து போட்டால், போட்டவர்களே சுவைத்துச் சாப்பிட வேண்டியதுதான்!' என்று நினைக்க வேண்டியிருந்தது.

சூழ்நிலைக்குப் பலியாகாத தணிகாசலம், புதிய சூழ்நிலையை ஏற்படுத்துவதற்காக டார்வினைக் கட்டிக்கொண்டு அழுதான். இந்தச் சமயம் பார்த்து அவனைத் தேடிக் கொண்டு உமாவின் மாமா வந்து சேர்ந்தார். வழக்கம்போல் அதே கறுப்புக் குல்லாய், கறுப்புக் கோட்டு, கறுப்புக் குடை! மாடிக்கு வரும்போதுகூட அவருக்குக் குடை — செருப்புக்கள் தேவைப்பட்டன.

"மாப்பிள்ளைப் பையனை ஒருவழியாய் 'டிஸ்போஸ்' செய்து அனுப்ப வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அருகில் அமர்ந்தார் குருமூர்த்தி.

தணிகாசலம் சிரித்தான்: இந்த 'டிஸ்போஸலை' இவர் எப்போதுதான் டிஸ்போஸ் செய்யப் போகிறாரோ!

"இன்றைக்குத் தேதி நிச்சயமாகும்; அடுத்த மாதமோ, அதற்கு அடுத்த மாதமோ கல்யாணத்தை முடிக்க வேண்டும்" என்றார் அவர்.

சம்பந்தி வீட்டுப் பெருமைகளை அவரால் தாங்க முடியவில்லை. பையன் அப்போது உதவி கலெக்டராம்; ருக்மிணியின் கையைப் பிடித்தால் உதவியில்லாமலே உயர்ந்து கலெக்டராகி விடுவாராம். தணிகாசலத்துக்கு எதுவும் தேவையானால் அவரிடம் சிபாரிசு செய்வதாய் வாக்களித்தார். இவ்வளவும்

கூறிவிட்டு, ''நீங்களும் வந்திருந்து இன்றைக்கு வரவேற்பில் கலந்து கொள்ள வேண்டும்; இதற்குப் பிறகு கல்யாணத்துக்கு ஒரு வாழ்த்துப் பத்திரம் எழுதித் தர வேண்டும்; சௌந்தரம் சொல்லச் சொன்னாள்'' என்றார்.

''தாராளமாய்ச் செய்கிறேன்'' என்றான் தணிகாசலம்.

''வாழ்த்துப் பத்திரத்துக்கு அச்சுக்கூலி சௌந்தரமே கொடுத்து விடுவாள்.''

சௌந்தரத்தம்மாளின் சாமர்த்தியத்தை எண்ணி வியந்தான் தணிகாசலம். குருமூர்த்தி அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

உமா அது வரையில் அவனை வந்து எட்டிப் பார்க்கவில்லை. பத்து முறையாவது மாடிப் படிகளை அதற்குள் அதிர அடித்து விடுவாள். அன்றைக்கு மட்டும் ஏனோ வரவில்லை. வரவேற்பு மும்முரமா? அல்லது தன்னிடம் (நேற்றுப் பேசிய பேச்சுக்காக) கோபமா?

பிற்பகல் நான்கு மணியான பிறகும் கூட உமா மாடிக்கு வரவில்லை.

கீழே கார்ச் சத்தம் கேட்டது. மாப்பிள்ளை வீட்டார் வந்து விட்டார்கள். அடுத்தாற்போல் சௌந்தரத்தம்மாள் மாடிக்கு ஓடி வந்து பெண்களின் காதுகளைக் கடித்தாள். தணிகாசலத்தின் அறைப்பக்கம் எட்டிப் பார்த்து, ''என்ன, தம்பி! புறப்படவில்லையா? அவர்கள் வந்து விட்டார்களே!'' என்று குரல் கொடுத்தாள். 'இந்த உமா எங்கே போய் மறைந்துகொண்டாள்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டே கீழே இறங்கினான் தணிகாசலம்.

கூடத்தில் ரத்தினக் கம்பளத்தைச் சுற்றிலும் சோபாக்கள். மாப்பிள்ளையுடன் அவர் அம்மா, அப்பா, தமக்கை மூவரும் வந்திருந்தார்கள். மாப்பிள்ளை கவர்ச்சிகரமான இளைஞர்; தன்னம்பிக்கை, மிடுக்கு, அலட்சியப் பார்வை அவர் முகத்தில் தெரிந்தன. கோட்டு, சராய், கழுத்துப்பட்டி, பூட்ஸ்களுடன் நவநாகரிகத் தோற்றத்தில் விளங்கினார். பெற்றோர்கள் கர்நாடகம்; தமக்கை கர்நாடகத்துக்கும் நவநாகரிகத்துக்கும் இடையில் ஊசலாடிக்கொண்டிருந்தாள்.

''ஓ!...உங்களை நேரில் பார்த்ததில்லை; ஆனால் படித்திருக்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டே, மாப்பிள்ளைப் பையன் பெண்ணைப் பார்ப்பதற்காகத் தம் கழுத்தைப் பின்னால் வளைத்தார்.

பெரியவர்கள் இருவரும் எதிர் சோபாவில் உட்கார்ந்து சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். பெண்கள் கூட்டம் உள்ளே நிரம்பி வழிந்தது.

ருக்மிணி அறைக்குள்ளிருந்து அன்ன நடை நடந்து வெளியில் வந்தாள். அவள் கரத்தில் வெள்ளித் தாம்பாளத்தில் கற்கண்டு, ரோஜா மலர்கள், சந்தனக் கிண்ணம் இவ்வளவும் இருந்தன. கண்களை ஒரு சுழற்றுச் சுழற்றி மாப்பிள்ளைப் பையனைச் சிறு தாக்குதலுக்கு உள்ளாக்கி விட்டு முதலில் பெரியவர்களிடம் சென்றாள். பிறகு மாப்பிள்ளை ரவியிடம் தட்டை நீட்டும்போது அவள் மலர்க் கரங்கள் மெல்ல நடுங்கின; முகம் குப்பென்று சிவந்தது; ஏற்கனவே கனிந்த எலுமிச்சை நிறமுடைய அழகிய பெண் அவள்.



''இப்படி வந்து உட்கார், ருக்மிணி!'' என்று அவள் அப்பா சோபாவைச் சுட்டிக் காண்பித்தார். ருக்மிணி அதில் அமராமல் உள்ளே சென்றாள்.

தணிகாசலம் இவ்வளவு மாதங்கள் அதே வீட்டில் குடியிருந்தும் கூட இதற்கு முன்பு ருக்மிணியைப் பார்த்ததில்லை. இப்போது அவள் உடல் வனப்பைக் கண்டு அவன் வியந்தான். 'பிள்ளைக்கேற்ற பெண்!' என்று சொல்லிக்கொண்டான். இளைஞரின் முகத்தைத் தணிகாசலம் ஏறிட்டுப் பார்த்தபோது, அந்த எலுமிச்சம் பழத்தின் எதிரொளி அதில் பிரகாசமாய்த் தெரிந்தது. 'பையன் அகப்

யட்டுக் கொண்டார்' என்று முடிவு கட்டினுன் தணிகாசலம்.

ருக்மிணியின் அப்பாவுக்குச் சும்மா இருக்க முடியவில்லை. ''எல்லோரும் இப்படி வந்து உட்காருங்களேன்!'' என்று பெண்கள் இருந்த பக்கம் திரும்பி அழைத்தார். அத்துடன், ''உமா! நீ அங்கே என்ன செய்கிறுய்? ருக்மிணியை அழைத்துக் கொண்டு இப்படி வா!'' என்று சத்தம் போட்டார்.

சௌந்தரத்தம்மாளுக்கு அவர் உமாவையும் அங்கு அழைத்தது பொறுக்கவில்லை. முகத்தைக் கடுகடுப்பாய் வைத்துக் கொண்டு அறைக்குள்ளிருந்து அவரை எட்டிப் பார்த்தாள். 'சந்தர்ப்பம் தெரியாத மனிதராயிருக்கிறீர் அளே!' என்று இடித்துச் சொல்லி அவள் கண்கள் அவரை எச்சரிக்கை செய்தன. குருமூர்த்தி அதை உணர்ந்து கொள்ளவுமில்லை; அதற்காகப் பயப்படவுமில்லை. வழக்கமாய் மனைவிக்குப் பயப்படுகிற பேர்வழிகள் எப்போதுமே தங்கள் அதிகாரத்தை நான்கு பேர்களுக்கு மத்தியில் நிலைநிறுத்திக் கொள்வதற்கு முயற்சி செய்து பார்ப்பார்கள்.

''வந்து உட்காருங்கள், இங்கே!'' என்று அதட்டினுர் குருமூர்த்தி.

சௌந்தரத்தம்மாள் தன் கணவனின் சொல்லைச் சிரசின் மேல் ஏற்றுக் கொண்டு, உமாவைத் தவிர மற்றப் பெண்களுடன் சோபாவில் வந்து உட்கார்ந்தாள். மாப்பிள்ளையின் தாய், தமக்கை, ருக்மிணி, சௌந்தரத்தம்மாள் நால்வரும் வரிசையாக வந்து அவர்கள் அருகில் அமர்ந்தார்கள்.

''உமா எங்கே? அவளையும் வரச் சொல்!'' மனித இயந்திரமான மாமாவுக்குச் சமய சந்தர்ப்பம் தெரியவில்லை; தெரியவே இல்லை. ''ஏ, உமா!'' என்று பலமாகக் கத்தினுர்.

பெண்ணைப் பெற்றவளுக்கு எரிச்சல் தாங்கவில்லை. ருக்மிணியைப் பெண் பார்க்க வந்திருக்கிருர்களா, உமாவையா? தன் கணவனைக் கண்களால் கடிந்து கொண்டே, ''அவளை எதற்கு இங்கே கூப்பிடுகிறீர்கள்? தலை கூட வாரிக் கொள்ளாமல் கை வேலையைப் பார்த்துக் கொண்டிருக்கிருள்'' என்ருள். உமாவுக்குப் பரிந்து கொண்டு, அவள் வெளியில் வராமல் இருப்பதற்கு எப்படியெல்லாம் பேச வேண்டுமோ அப்படியெல்லாம் சாமர்த்தியமாகப் பேசினுள் சௌந்தரத்தம்மாள்.

மாமாவா விடுகிறவர்? எம். ஏ. படித்த தம்முடைய மருமகளை அவர்களுக்கு அறிமுகம் செய்து, தம்முடைய



மதிப்பை உயர்த்திக் கொள்ள நினைத்தார் அவர். 'இந்தக் கர்நாடகம் விஷயம் தெரியாமல் இங்கே முட்டுக் கட்டை போடுகிறதே!' என்று அவருக்கு ஆத்திரம். இன்னும் நான்கு குரல் எழுப்பி, தாமே எழுந்து சென்று, பழைய புடவையும் எண்ணெய் வழிந்த முகமுமாய்க் காட்சி அளித்த உமாவை வெளியில் இழுத்து வந்தார். ருக்மிணிக்கு அருகில் உட்கார வைத்தார். உமா தணிகாசலத்தை ஒரு பார்வை பார்த்து விட்டுத் தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். புதுப் பெண் புது மாப்பிள்ளையைப் பார்க்கும் பார்வை அது. தணிகாசலம் திடுக்கிட்டான்.

குருமூர்த்தி மாமா தம்முடைய பெண்ணை மறந்து, உமாவின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறினுர். மனங் கொண்ட மட்டும் அள்ளி வீசினுர்.

''இப்படி இருக்கிருளே என்று நினைக்காதீர்கள்; சௌந்தரத்தோடு அடுப்படியில் இருந்ததால் அவள் முகத்தில் எண்ணெய் வழிகிறது; கல்லூரியில் இங்கிலீஷ் சொல்லித் தருகிருள். மணிக்குட்டி என்ருல் மணிக்குட்டி! இன்னும்......''

அந்த மணிக்குட்டி அப்போது பொறிக்குள் அகப்பட்ட சுண்டெலிக் குஞ்சு போல் அயர்ந்து கிடந்தது. 'வேண்டாம் மாமா! என்னைப் பற்றிப் பேசாமல், ருக்மிணியைப் பற்றிப் பேசுங்கள்' என்று அவரைப் பார்த்துத் தன் கண்களால் கெஞ்சியது.

மாப்பிள்ளையின் கண்கள் திசை மாறின. எலுமிச்சம் பழத்தை விட்டு விட்டு அவை வாடிய ரோஜாவைச் சுற்றி வட்டமிடத் தொடங்கின. இந்தக் காட்சியைச் சௌந்தரத்தம்மாளால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. குருமூர்த்தி மாமாவோ உமாவின் பெருமைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்காமல் போய்க் கொண்டிருந்தார்.



"என்ன சார் பஸ் ஸ்டாண்டைப் பிடித்துக் கொண்டு நிற்கிறீர்கள்?"

"பஸ்ஸைப் பிடிக்க முடியவில்லை. பஸ் ஸ்டாண்டையேனும் பிடித்துக் கொண்டு நிற்கலாம் என்று தான்!"

---

"போதுமே, உங்கள் மருமகள் புராணம்!" என்று வெடித்துக் கிளம்பினாள் சௌந்தரத்தம்மாள். "ருக்மிணி செய்த பலகாரம், ருக்மிணி போட்ட காப்பி, ருக்மிணியின் சாமர்த்தியம் இதையெல்லாம் கொஞ்சம் சொல்லுங்கள். பத்தாவதுக்கு மேல் பெண்ணுக்கு என்ன படிப்பு வேண்டிக் கிடக்கிறது? எம். ஏ. படித்த கோளாறுதான் உமா கல்யாணத்தையே வெறுத்துவிட்டாள். எழுத்தாளருக்கு அவள் கதை எழுதிக் கொடுக்கத்தான் லாயக்கு. வேலைக்குப் போய்ச் சம்பாதிக்க உங்கள் பெண் தலையில் எழுதியிருக்கிறதா, என்ன?"

சௌந்தரத்தம்மாளின் தாக்குதலைக் கண்டு உமா கண் கலங்கினாள். ஏற்கனவே இன்றைக்கு அவளிடம் வழக்கமான கலகலப்பும், புன்சிரிப்பும், புது முகமும் காணப்படவில்லை. 'உழைத்துச் சம்பாதிப்பது அவமானமா?' உமா தன் முகத்தைத் துடைப்பது போல் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"உமாவுக்குக் கதை எழுதத் தெரியுமா, என்ன?" என்றார் மாப்பிள்ளை.

"சே! கதையாவது கத்திரிக்காயாவது!—அவர் எழுதிக் கொடுத்தால், இவள் நகல் எடுப்பாள்; வெறும் ஈயடித்தான் காப்பி! எங்கள் பாலுகூட அதைச் செய்து விடுவானே!"

இந்தக் கட்டத்தில் உமாவை விட்டுக் கொடுக்கத் தணிகாசலத்துக்கு மனமில்லை. மெல்ல மாப்பிள்ளையின் காதில் அவளுக்குக் கவிதை எழுதத் தெரியும் என்ற செய்தியைப் போட்டுவைத்தான். மாப்பிள்ளை இன்னும் சற்று உற்சாகத்துடன் உமாவை நோக்கினார்.

சௌந்தரத்தம்மாள் தவியாய்த் தவித்தாள். அவள் தவித்த தவிப்பு நியாயமான தவிப்பு. தன் பெண் ஏற்ற இடத்தில் வாழ வேண்டும் என்ற ஆசையால் ஏற்பட்ட தவிப்பு. தன்னுடைய சீர் வரிசைப் பட்டியலை அவள் அங்கு வெளியிட்டாள். கல்யாணத்தைத் தடபுடலாக நடத்துவதாய் வாக்களித்தாள். நகைப் பெட்டியை எடுத்து வந்து சம்பந்தி அம்மாளின் மடியில் வைத்தாள். எனக்கு இருப்பது பெண் ஒன்று; ஆண் ஒன்று. பாலுவுக்கு நான் காலணா செலவு செய்யப் போவதில்லை. எல்லாமே ருக்மிணிக்குத்தான்."

தணிகாசலம் இந்தத் தர்ம சங்கடமான கட்டத்தில் சௌந்தரத்தம்மாளின் கட்சியில் திடீரென்று சாய்ந்தான். பெற்றவள் படும் பாட்டை அவனால் உணர முடிந்தது. எந்தத் தாய்தான் இப்படித் தவிக்க மாட்டாள்? அடுத்த கணத்திலிருந்து அவள் கட்சிக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு ருக்மிணியின் பெருமைகளை வெளுத்துக் கட்டினான்.

பழங் காலத்துப் புலவர்கள் இப்படியெல்லாம் தங்கள் இளவரசிகளைப் புகழ்ந்து பேசி, மாற்று நாட்டு இளவரசர்களுக்கு மணம் முடித்திருக்கிறார்கள். அவர்களிடம் தூது சென்று, தங்கள் இளவரசிகளிடம் இல்லாத சிறப்பையெல்லாம் ஏற்றி வைத்துக் கதை அளந்திருக்கிறார்கள். தானும் இங்கு அப்படிச் செய்தால் என்ன?

தணிகாசலம் ருக்மிணியைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கொண்டாடுவதற்கு முன் வந்தான்:

"ருக்மிணி சமைத்தால் சாப்பிட்ட இலையைக் கீழே போடத் தோன்றாது; அவளுடைய சுறுசுறுப்பு சிட்டுக் குருவிக்கு வராது; வீட்டைக் கண்ணாடி போல் வைத்துக் கொள்வாள்; அறிவு, அறிவு, கொள்ளை அறிவு அவளுக்கு! 'அண்ணா!' என்று அவள் தணிகாசலத்தை வாய் நிறைய அழைக்கும் போது பார்க்க வேண்டும்; கொஞ்சும் கிளி கூட அவள் குரலைக் கேட்டால் தன் வாயை மூடிக் கொள்ளும்......" இன்னும் தணிகாசலம் நிறுத்தவில்லை.

சௌந்தரத்தம்மாள் தன் கண்களில் நன்றி பொங்கத் தணிகாசலத்தைப் பார்த்து அகமகிழ்ந்தாள். மற்றவர்கள் அங்கு இல்லாமல் இருந்தால், "அடுத்த மாதத்திலிருந்து நீங்கள் வீட்டு வாட

பிப்ரவரி 14உ முதல் சென்னையெங்கும்




பீப்பிள்ஸ் பிலிம்ஸ்

# அவன் அமரன்

கதை, வசனம் நாகர்கோயில் **S. நாகராஜன் B.A.** ★ டைரக்ஷன்:- **S. பாலசந்தர்**

வினியோகஸ்தர்கள்

சென்னை நகரம்: பாப்புலர் பிக்சர்ஸ் சர்க்யூட் சென்னை-1 ★ வட, தென்ஆற்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களுக்கு: வீரா பிக்சர்ஸ், குடியாத்தம் ★ திருச்சி, தஞ்சை: நேஷனல் டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், சென்னை-1 ★ மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி: ஸ்ரீராம் பிக்சர்ஸ் திருநெல்வேலி ★ கேரளா-கன்யாகுமரி உள்பட: சென்ட்ரல் பிக்சர்ஸ், கோட்டயம் ★ மைசூர்-ராஜ்யத்திற்கு: விஜயா டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், பெங்களூர் ★ சேலம்: தங்கம் பிக்சர்ஸ், சேலம்

தி பீப்பிள்ஸ் பிலிம்ஸ் 2, ராஜாச்சார் தெரு, சென்னை-17

கையே கொடுக்க வேண்டாம்!'' என்று கூட அவனிடம் சொல்லியிருப்பாள். உலகம் தெரியாத தன் கணவரின் பைத்தியக்காரத்தனத்துக்கு, உலகம் தெரிந்த அந்த இளைஞன் ஈடு செய்வது அவளுக்குப் பெருமை தந்தது.

தணிகாசலம் தன் துதிப் பாடலை நிறுத்திக் கொண்டு தனக்குள் கணக்குப் போட்டுப் பார்த்தான்; 'ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை நடத்திவைக்கச் சொல்லியிருக்கிறார்கள். இதுவரை ஐம்பது பொய்கூட ஆகியிருக்காது போலிருக்கிறதே! இன்னும் என்னென்ன சொல்லலாம்?'

அடுத்தாற்போல் சிற்றுண்டி சிறப்பாக நடந்தது. வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டு, விருந்தினர் இருவர் மூவராகத் தனித்தனியே கூடிப் பேசினர். மாப்பிள்ளைப் பையன் தணிகாசலத்திடம் அட்டையைப் போல் ஒட்டிக் கொண்டு அவன் போகுமிடத்துக்கெல்லாம் வந்தார். வேப்பமரத்தடியில் அந்த உதவி கலெக்டர் அவனைப் பிடித்து நிறுத்திக் கொண்டு கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டார். எல்லாம் உமாவைப் பற்றிய கேள்விகள்! ருக்மிணியை அவர் மறந்தே விட்டார்.

இந்த நவீன இளவரசன் இந்த நவீனப் புலவனின் புகழ்மாலைகளுக்குக் காது கொடுத்ததாகவே தெரியவில்லை. ருக்மிணியை ஒதுக்கிவிட்டு, உமாவுக்காக அவனுடைய உதவியை வேண்டினார். சௌந்தரத்தம்மாளுக்குத் துரோகம் செய்ய விரும்பாத தணிகாசலம் அந்த இளைஞரிடமிருந்து நழுவிக்கொண்டான்.

மாப்பிள்ளை வீட்டார் அடுத்த வாரத்தில் முடிவு தெரிவிப்பதாகச் சொல்லிப் புறப்பட்டார்கள். பிடித்திருந்தால்கூட இப்படி விட்டுக் கொடுக்காமல் பேசுவது தானே சம்பந்திகளின் சம்பிரதாயம்?

''பெண் பிடித்திருக்கிறதா? அதைச் சொல்லுங்கள்'' என்று அழுத்திக் கேட்டாள் சௌந்தரத்தம்மாள்.

''எங்களுக்கெல்லாம் பிடித்திருக்கிறது; பையனுக்கும் பிடித்திருக்கிறதாம். ஊருக்குப் போய் எழுதுகிறோம்'' என்றார் பையனின் தந்தை.

சௌந்தரத்தம்மாளுக்கு இந்தச் சொல்லைக் கேட்டவுடன்தான் போன உயிர் திரும்பி வந்தது. கார் வீட்டை விட்டு நகர்ந்ததுதான் தாமதம்; தன் கணவனைப் பிய்த்துக் கட்டி விட்டாள்.

''தணிகாசலம் இருந்து இன்றைக்கு உங்கள் மானத்தைக் காப்பாற்றினார். உங்களைப்போல் துப்புக் கெட்ட ஆண் பிள்ளையை நான் இந்த உலகத்திலேயே பார்த்ததில்லை!'' என்றாள்.

அடுத்த நாள் பொழுது விடிந்தது. ஆனால் அடுத்த நாளும் உமாவின் முகத்தில் மலர்ச்சியில்லை. அதற்கடுத்த நாளும் விடிந்தது: அப்போதும் உமாவின் போக்கில் மாறுதல் இல்லை. நான்கைந்து நாட்கள் இப்படியே பொழுது புலர்வதும் மறைவதுமாக இருந்தன. நான்கைந்து நாட்களிலும் உமா உரு மாறி, உள்ளம் மாறி, பேச்சு மாறி, பெருமூச்சின் இருப்பிடமாய்த் தேய்ந்து கொண்டு வந்தாள்.

மாடிக்கு வந்தவுடன் கௌரியிடம் சென்று விடுவாள். பையனைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சுவாள். கல்யாணி அம்மாளிடம் பழங் கதைகள் பேசப் போவாள். தணிகாசலத்தின் முன்னால் அவளால் தலைநிமிர்ந்து நடமாட முடியவில்லை. அந்தப் பழைய பேச்சு, சிரிப்பு, கலகலப்பு, உல்லாசம், உற்சாகம், ஒய்யாரம், உதாசீனம் எங்கே? - எங்கே உமா? எங்கே உன் வெகுளித்தனம்? எங்கே உன்னுடைய களங்கமற்ற குழந்தை மனம்?

தணிகாசலம் தடுமாறினான். தானே வலிந்து பேசி அவளிடம் காரணம் கேட்டான்: ''என்ன உமா, இது? ஏன் இப்படி மாறிப்போய் விட்டாய்? அருகில் இருந்து கொண்டே என்னை அன்னியனாக்கி விட்டாயே?''

உமா ஒரு கணம் தயங்கி நின்றாள். ''என்னை வீணாய்த் தொந்தரவு செய்யாதீர்கள்; என்னிடம் எந்த மாற்றமும் இல்லை; அடிக்கடி மனம் மாறுகிற வழக்கம் ஆண்களுக்குத்தான்!'' அவள் பதிலுக்குக் காத்திராமல் நடந்துசென்றாள்.

கஞ்சத்தனம் மிகுந்த லோபியின் இரும்புப் பெட்டியாகி விட்டது உமாவின் வாய். அதைக் கிளறி அவனால் உண்மையை வெளியில் கொண்டு வர முடியவில்லை. தனக்குள்ளே தனிமையில் குழம்பி அவளுடைய மனமாற்றத்துக்கு இரண்டு விதமான காரணங்களைக் கண்டு பிடித்தான்.

கட்டாயம் இந்த இரண்டில் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். ஒன்று,—

உமா அன்று பெண் பார்க்க வந்த இளைஞரிடம் மனத்தைப் பறி கொடுத்திருக்கவேண்டும். இயற்கையின் நியதி அது. அப்படி இருக்குமானால் அதில் அதிசயம் ஒன்றுமில்லை. கவர்ச்சிகரமான தோற்றம் உள்ளவர்களிடம் ஒரு காந்த சக்தி இருக்கிறது. வெளி அழகின் ரகசியம் அது. கண்டதும் காதல் கதைகளில் மட்டும் நடப்பதில்லை. அபூர்வமாக வாழ்க்கையிலும் நடப்பதுண்டு. அது உண்மையில் நிலைத்து நிற்கக் கூடியதா என்பது வேறு விஷயம். உமா



''ஏய்.......அம்பி......அம்பி !.........கொஞ்சம் சீக்கிரம் வாயேன்!......என் முதுகிலே ஒரு கட்டெறும்பு கடிக்கிறது. சீக்கிரம் வந்து பாரேன் !......''

---

வைப் பார்க்கும்போது அப்படிக்கூட நினைக்கத் தோன்றுகிறது.

இரண்டு. —

தணிகாசலத்தின்மீது அவளுக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்கலாம். கடவுள் என்று நினைத்து அவனிடம் பக்தி செலுத்தியவள் அவள். கடவுளே மனித உருவில் வந்தால்கூட, மனிதர்கள் அவரை மதிக்கவா செய்வார்கள்? அவ னுடைய பழைய வாழ்க்கையின் ரகசியங்கள் அவளுக்கு அவன்மீது வெறுப் பேற்படச் செய்திருக்கின்றனவா? அவ னுடைய குற்றம் ஒன்றுமே அவற்றில் இல்லையே! ஆராய்ந்து பார்க்கும் திறன் பெண் மனத்துக்குக் கிடையாதா?— உமா! தணிகாசலம் நீ நினைக்கும் விஷயத்தில் குற்றங்குறை யற்றவன்.

தணிகாசலம் அவனிடம் தன் பரிசுத்தத் தன்மையை நிரூபிக்கும் நல்ல நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

எதிர்பார்த்த நாள் வருவதற்குள் எதிர்பாராத செய்தி ஒன்று வந்தது.

கண்ணீரும் கம்பலையுமாய் ஒரு நாள் முற்பகல் சௌந்தரத்தம்மாள் மஞ்சள் தடவிய கடிதம் ஒன்றை எடுத்துக் கொண்டு தணிகாசலத்திடம் ஓடி வந்தாள். அப்போது உமா கல்லூரிக்குச் சென்றிருந்தாள். மஞ்சள் தடவிய கடிதத்தில் நல்ல செய்திதானே இருக்கும்? எதற்காகச் சௌந்தரத்தம்மாள் இப்படிக் கண்ணீர் விட்டுக் கலங்குகிறாள்?

மாப்பிள்ளை வீட்டாரின் கடிதத்தில் இருந்த முக்கியமான பகுதி இது :—

''உங்கள் குடும்பத்துடன் சம்பந்தம் வைத்துக் கொள்வது எங்களுக்குப் பெருமை தருகிறது. உங்கள் வீட்டில் ஒரு பெண்ணை மட்டும் பார்க்க வந்தோம். இரண்டு பெண்களையுமே எங்களுக்குப் பிடித்திருக்கிறது. எங்கள் வீட்டிலும் இரண்டு மாப்பிள்ளைகள் இருக்கிறார்கள். உங்களுக்குச் சம்மதமானால் எங்களுக்கு அது பாக்யந்தான்.

ரவிக்குப் பெண் பார்க்க வந்தோம். என்னுடைய தங்கை மகன் கோபாலன் என்று மற்றொரு பையன் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வேலை பார்க்கிறான். என் பிள்ளை வேறு, தங்கை பிள்ளை வேறு என்று நான் பார்ப்பதில்லை. இருவருக்கும் ஒரே முகூர்த்தத்தில் முடித்து விடலாம்.

ஆனால், ஒரு மாறுதல்...

உங்கள் பெண் ருக்மிணியை என் மருமகனுக்கும், உங்கள் மருமகள் உமாவை என் மகனுக்கும் எடுத்துக் கொள்ள உத்தேசம். இந்தச் சம்பந்தம் மிக மிகப் பொருத்தமாக இருக்கும். ரவியின் உத்தியோகத்துக்குப் பட்டம் பெற்ற பெண் மனைவியாக அமைந்தால் அவனுக்கும் அது கௌரவம். அவனுடைய ஆசையும் அதுதான்.

ருக்மிணியைக் கோபாலனுக்குக் கொடுத்தால் அவளை எங்கள் பெண்ணாகவே பாவித்துக் கொள்வோம். ரெவின்யூ இன்ஸ்பெக்டராக இருந்தாலும் அவன் அடுத்தாற்போல் தாசில்தாராக உயர்வதற்கு வழியுண்டு.—விவரம் எழுதுங்கள்.''

ரவியின் அப்பா இந்தக் கடிதத்தில் கையெழுத்துப் போட்டிருந்தார்.

தணிகாசலம் கடிதத்தைச் சௌந்தரத்தம்மாளிடம் நீட்டினான். அடுத்த விநாடியிலிருந்து சௌந்தரத்தம்மாள் சௌந்தரத்தம்மாளாக இல்லை. ஒரு ஆட்டம் ஆடித் தீர்த்து விட்டாள்.

'' தம்பீ! படித்துப் பார்த்தீர்களா தம்பீ! ஏமாற்றுக் கள்ளி நன்றாய் அந்தப் பயலை ஏமாற்றிவிட்டாள், தம்பி! அவன் கண்ணில் சொக்குப் பொடி தூவிவிட்டாள், தம்பி! பாம்புக்குப் பாலூற்றி வளர்த்தேன், தம்பி! என் குடியையே கெடுத்து விட்டாள், தம்பி!...'' இப்படி ஒரு விநாடிக்கு ஒரு 'தம்பி'யை அமைத்துக் கொண்டு, உமாவைப் போட்டு எலும்பு வேறு, சதை வேறாய்ப் பிய்த்தெடுத்து உதறினாள்.

தணிகாசலத்தால் இந்த வசைமாரியைத் தாங்க முடியவில்லை: 'சாகசக்காரி, மாயக்காரி, நீலி, மயக்கும் காரி, ......அவள் வரட்டும் சொல்கிறேன்!'

அடடா! - பெண்களுக்குக் கோபம் வந்து விட்டால் இப்படிக் கூடப் பேசுவார்களா? கல்லூரியிலிருந்து உமா திரும்பி வந்தால் அவளுக்கு என்னவெல்லாம் காத்திருக்கிறதோ? (தொடரும்)



## Kalyani's Husband

தென்னிந்திய சமூகத்தின் மேல்மட்டத்திலுள்ள ஒரு நவீன குடும்பத்தின் கதையை விவரிக்கிறது, ''கல்யாணியின் கணவன்'' என்னும் இந்த ஆங்கில நாவல். சாதாரணமாக நவீனங்களில் வருவதுபோல் நிகழ்ச்சிகளும், பாத்திரங்களும் முற்றிலும் கற்பனையல்ல. ''நான் ஒரு கற்பனைக் கதை எழுதப் புகவில்லை; எனக்கு நெருங்கித் தெரிந்தவர்களையும் உறவினர்களையும் பற்றியே எழுதுகிறேன். எனவே உண்மைக்கு மாறாக நிகழ்ச்சிகளைச் சித்திரிக்க நான் முற்படவில்லை. இலக்கிய ரசனைக்கு அவசியமான போதிலும் உண்மைக்குப் புறம்பாக நான் இதில் எதுவும் சொல்லவில்லை'' என்று இதன் ஆசிரியர் ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி ஐ. ஸி. எஸ். தமது முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

கதையும் அப்படித்தான் இருக்கிறது. திடுக்கிடும் சம்பவங்களோ, அடுத்து என்ன நிகழும் என்ற பரபரப்போ, புதுப் புதுத் திருப்பங்களோ இந்தப் புத்தகத்தின் நிகழ்ச்சிகளில் காண முடியாது. ஆனால் இலக்கியச் சுவை மிகுந்திருக்கிறது. வர்ணனைகள் அபார அழகுடனும் அற்புதத் திறனுடனும் விளங்குகின்றன. ஒவ்வொரு பக்கத்திலும் தமிழ்ச் சமூகத்தின் பண்பு தவழுகிறது.

பாரிஸ்டர் பட்டம் பெற்ற ஜமீன்தார் சேகரையும் அவருடைய டாக்டர் மனைவி கல்யாணியையும் கதாநாயகர்களாகக் கொண்டு, சிவகாமசுந்தரி என்னும் விலைமாதையும் இந்திரா என்னும் உறவினள் ஒருத்தியையும் உப—பாத்திரங்களாகக் கொண்டு இந்தக் கதை புனையப்பட்டுள்ளது. தம்பதிகளின் தொழில் ஆர்வத்தினால் குடும்ப வாழ்க்கை பாதிக்கப்படுகிறதென்ற உண்மை கதையில் பிரதிபலிக்கிறது. கதை சோகத்தில் முடிகிறது. இது நவீன இலக்கிய வரிசையில் இடம் பெறத் தகுந்தது.

தமிழ் சமூகத்தைப் பற்றிய ஆங்கில நாவல்கள் மிகக் குறைவு. இவ்வாசிரியரைப் போன்ற பரந்த அறிவும், விரிவான வாழ்க்கை அனுபவமும், நுண்ணிய ஆற்றலும் விவரண சக்தியும் ஒருங்கே பெற்ற ஒருவர் இலக்கியத் துறையில் ஈடுபாடு கொண்டுள்ளது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இப்புத்தகத்தைப் போல் மேலும் பல அரிய இலக்கிய சிருஷ்டிகள் இவரிடமிருந்து கிடைக்கும் என்று பொது மக்கள் எதிர்பார்க்கலாம்.

கிடைக்குமிடம்: ஹிகின்பாதம்ஸ் லிட்., மவுண்ட் ரோட், சென்னை-2; விலை ரூ. 3.

## Britain - An official Hand book - 1958

இங்கிலாந்தைப் பற்றிச் சாதாரணமாக ஒருவர் தெரிந்துகொள்ள வேண்டிய எல்லா விஷயங்களையும் ஒரே புத்தகத்தின் மூலம் தெரிந்துகொள்ள முடியுமென்றால், அப்படிப்பட்ட புத்தகம் லண்டனிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் வெளியிடப்பட்டுள்ள இந்தப் புத்தகம்தான்.

நாட்டின் வளம், ஜனத்தொகை, அரசாங்க அமைப்பு, இராணுவம், பொருளாதாரம், தொழில் வளம், போக்குவரத்து, தொழிலாளர் உறவுகள், நிதி விஷயம், வியாபாரம், சமயம், பண்பாடு, இலக்கியம் முதலிய பொது அறிவுக்குத் தேவைப்படும் பல அரிய விஷயங்களைத் திரட்டி அளிக்கிறது இந்தப் புத்தகம். அதிகார பூர்வமாக வெளியிடப்பட்டிருப்பதால், இதில் கொடுத்திருக்கும் விவரங்களும், கணக்குகளும், பட்டியல்களும் உண்மைதானோ என்ற சந்தேகத்துக்கு இடமில்லாது அமைந்துள்ளன.

ஜனநாயக ஆட்சியின் நேர்மைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் இங்கிலாந்தில் பார்லிமெண்டின் மூலம் பொது மக்களுக்கு எந்த விவரங்கள் அளிக்கப்படுகின்றனவோ, அரசாங்கத்தின் பல்வேறு பிரசுரங்கள் மூலம் எந்தக் கணக்குகள் கொடுக்கப் படுகின்றனவோ, அவைகளே ஒன்று திரட்டப்பட்டு அந்தந்தத் தலைப்புகளின் கீழ் இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அழகான முறையில் அச்சிட்டுச் சிறப்பாக வெளியிடப்பட்டுள்ள இப்புத்தகம் எல்லா விதத்திலும் கைப்புத்தகமாக இருக்கத் தகுதியுடையதே. 1958-ஆம் ஆண்டுப் பதிப்பு ஆண்டு துவக்கத்திலேயே வெளியிடப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

பல புகைப்படங்களும் விளக்கப் படங்களும் ஆங்காங்கே சேர்க்கப்பட்டிருப்பது போற்றத் தக்கது. இப்புத்தகம் எவரையும் படிக்கத் தூண்டுவதாக இருக்கிறது.

கிடைக்குமிடம்: Manager, H. M. S. O. Sales Section, British Information Services, Indra Palace, Connaught Circus, New Delhi. விலை: ரூ. 7—87.

## The Eastern Economist - Annual Number 1957

இந்தியப் பொருளாதாரப் பிரச்னைகளையே முக்கிய விஷயமாகக் கொண்டு வெளிவந்து கொண்டிருக்கும் பத்திரிகைகளுக்குள் 'ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்' என்ற வாரப்பத்திரிகையும் ஒன்று. கடந்த முப்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் இப் பத்திரிகை ஆண்டுதோறும் வருஷ அனுபந்தம் ஒன்றும் விசேஷ மலராக வெளியிடுகிறது. குறிப்பிட்ட ஒரு விஷயத்தைப் பிரதானமாகக் கொண்டு, அதைப் பற்றிப் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ந்து பல தரப்பட்ட விவரங்களையும் புள்ளிகளையும் சேகரித்துத் தந்து உண்மை நிலையை வாசகர்கள் நன்கு புரிந்து கொள்ளும் வகையில் உதவுவது இவ் வருஷாந்திர அனுபந்தத்தின் சிறப்பாகும். அதற்கிணங்க 1957-ம் ஆண்டு மலரில் இந்தியாவும் சைனாவும் கடந்த பத்தாண்டுகளில் அடைந்த முன்னேற்றத்தை ஒத்திட்டுப் பார்க்கும் வகையில், பல விவ

ரங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. தற்காலத்தில் செஞ்சீனு பொருளாதாரத் துறையில் அடைந்துள்ள முன்னேற்றத்தை அடிக்கடி கட்டிக்காட்டி, அங்கே அனுஷ்டிக்கப்படும் முறைகள் இந்தியாவிலும் ஏன் அனுஷ்டிக்கப்படலாகாது என்று கேட்பவர்கள் பலர் இருக்கிறார்கள். அங்கே காணப்படும் முறைகள், முக்கியமாக விவசாயத்துறையில் நமக்கு ஏற்றவையல்ல என்று கூறுவோரும் பலர் உண்டு. எனவே இந்த விஷயம் இம் மலரில் விவரமாக ஆராயப்பட்டுள்ளது.

தனி அம்சமாக இந்தியா 1957-ஆம் ஆண்டில் பொருளாதாரத் துறையில் எவ்வாறு முன்னேறியுள்ளதென்பதைக் காட்டும் புள்ளி விவரங்களும் குறித்த பகுதிகளில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பொருளாதாரத் துறையில் அக்கறையுள்ள அனைவருக்கும் இன்றியமையாத ஒரு புத்தகம் இது.

கிடைக்குமிடம்: Eastern Economist Ltd., 58, Queensway, New Delhi. விலை: ரூ. 7—50

— எம். எஸ். சிவஸ்வாமி

## 1. வேதாவின் காதல்
## 2. ராணி மாதவி

இளம் பெண் வேதா ஒரு மர்ம மாளிகையில் கொடுமைப்படுத்தப்படுகிருள். எதிர்பாராத விதமாக அவளுக்கு ஒரு காதலன் கிட்டுகிருன். ஆனால் அந்தக் காதல் பூர்த்தியாவதற்குப் பலர் எத்தனையோ சிரமங்களுக்கு உள்ளாக வேண்டியிருந்தது. அன்பு, பச்சாத்தாபம், காதல், பயம் எல்லாம் சேர்ந்து கொண்டு கதாபாத்திரங்களை ஆட்டிப் படைத்து மர்மச் சுழலில் சிக்க வைத்து விதம் விதமான உணர்ச்சிகளை எழுப்பும் சுவாரஸ்யமான கதை வேதாவின் காதல். முன்பு இது "கல்கி" இதழ்களில் "ராஜாளி மடம்" என்னும் தலைப்பில் தொடர்ச்சியாக வெளிவந்து வாசகர்களால் பெரிதும் விரும்பிப் படிக்கப்பட்டது. ஆரம்ப முதல் கடைசி வரையில் குன்றாத சுவையுடன் செல்லும் இக்கதையை, நல்ல திறமையான உத்திகளைக் கையாண்டு ஆசிரியர் அற்புதமாக அமைத்திருக்கிறார். விலை: ரூ. 3—0—0.

நந்தவனத்திலும், நதி தீரத்திலும், கடற்கரையிலும், மாடமாளிகைகளிலும் நிகழும் காதல் காட்சிகளைப் புத்தகங்களில் படித்திருக்கிறோம். அவைகளெல்லாம் பெரும்பாலும் உயர்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் புரியும் காதலாயிருக்கும். ஆனால் "ராணி மாதவி"யில் வரும் காதல் வீடுவாசலற்ற நாடோடிகளின் வாழ்வில் நிகழ்ந்த காதல். அந்தக் காதல் எத்தனை விசித்திரமானது, எத்தனை தூய்மையானது என்பதெல்லாம் படித்து மகிழ வேண்டியவை. திகைப்பூட்டும் நிகழ்ச்சிகளும், திடுக்கிடும் சம்பவங்களும் நிறைந்து, காதலின் வேகமும் அன்பின் சக்தியும் எப்படியெல்லாம் மனித உள்ளங்களை ஈடுபடுத்தும் என்பதைச் சமத்காரமாகக் கூறுகிறது, இந்த நூல். விலை: ரூ. 2-75.

இரு நூல்களையும் எழுதியவர்: கி. ரா. கோபாலன்; பிரசுரம்: கலைஞன் பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17.

## செயற்கைச் சந்திரன்

செயற்கைச் சந்திரன் வானவீதியில் பறக்க ஆரம்பித்ததிலிருந்து பல தேசங்களிலும் மக்கள் அண்ணாந்து நடக்க ஆரம்பித்து விட்டனர். வான வீதிக்கே தனி 'மவுசு' ஏற்பட்டு விட்டது. பத்திரிகைகளில் அதைப் பற்றி ஏராளமான தகவல்கள் வெளிவந்து விட்டன. இந்நிலையில் அதைப்பற்றிய விவரங்களை ஆராய்ச்சி விளக்கங்களுடன் தெரிந்து கொள்ள வேண்டியது மிக மிக அவசியம்.

இந்நூலில் செயற்கைச் சந்திரனைப் பற்றிய எல்லா விவரங்களும் சாங்கோபாங்கமாக விளக்கப்பட்டிருக்கின்றன. விஞ்ஞான சம்பந்தமான நுணுக்கங்களும் ஆராய்ச்சி பூர்வமான தகவல்களுடன் தரப்பட்டிருக்கின்றன. "செயற்கைச் சந்திரன்" என்ற இந்நூலின் முதற் பகுதியில் ரஷ்ய சந்திரனைப் பற்றிய சகல விவரங்களும் விளக்கப்பட்டிருக்கின்றன. "அசல் சந்திரன்" "கிரகங்கள்" என்ற பகுதிகள் மிகவும் உபயோகமான பல விஷயங்களை விளக்குகின்றன. நூலின் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ள "மனிதனின் அரிய சாதனைகள்" எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய பல அரிய விஷயங்களைத் தெளிவாக்குகிறது.

தொகுத்தவர்: எஸ். நடராஜன் பி.ஏ., பிரசுரம்: ராம்நாத் பப்ளிகேஷன்ஸ், சென்னை—2; விலை: ரூ. 1—50.




வியாபாரம் பொருளாதாரத்தின் முக்கிய பாகம். பண்டைக் காலங்களில் அதுவே பெரிய பொருளாதாரப் பிரச்னையாக இருந்தது. உணவு, உடை போன்ற தினசரி உபயோகத்திலுள்ள சாதாரணப் பண்டங்களில் அதிக வியாபாரமில்லை. அந்தந்தப் பிரதேசங்களுக்குள்ளேயே பண்டங்களை மாற்றிக்கொண்டனர். ஆனால் பட்டு, மஸ்லின், கம்பளங்கள், சால்வைகள், தங்கம் வெள்ளி முதலிய உலோகங்களால் செய்த நகைகள், பாத்திரங்கள், மிளகு, வாசனைத் திரவியங்கள் முதலிய சாமான்கள் பாரதம், சைனா முதலிய தேசங்களிலிருந்து ஐரோப்பிய நாடுகளுக்கு எடுத்துச் சென்றும், பெரிய தேசங்களில் ஒரு மூலையிலிருந்து தூரமான பிரதேசங்களுக்குக் கொண்டுபோயும் வியாபாரம் செய்து வந்தனர். எதேச்சாதிகாரிகளிடமிருந்தும், கொள்ளைக்காரர்களிடமிருந்தும் எப்பொழுதும் அபாயமுண்டு. போக்குவரத்து சாதனங்கள் குறைவு, அதில் செலவு அதிகம். ஆதலால் ஒரு ரூபாய்க்கு வாங்கிய சாமானைப் பத்து இருபது ரூபாய்க்கு விற்பது சகஜமாக இருந்தது. அவ்வித வியாபாரத்தில் கருத்துள்ளவர்கள் அரசர்கள், ஜமீன்தார்கள், மற்றத் தனவந்தர்களுமே.

இயற்கைச் சக்திகளை வசப்படுத்தி, போக்குவரத்துச் சாதனங்களைப் பன்மடங்கு பெருக்கி, யந்திரத்தொழில் மூலம் ஏராளமான சாமான்களைச் செய்து வரும் இக்காலத்தில் வியாபாரம் மிகவும் பெருகி விட்டது. தானியம், துணி, பூட்ஸ் முதலிய தோல் சாமான்கள், சோப், பல்தேய்க்கும் பிரஷ் முதல் மோட்டார், ரயில் எஞ்சின், ஆகாய விமானம் உள்பட எல்லாவித சாமான்களும் ஒவ்வோரிடங்களில் தயார் செய்யப்பட்டு ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் வியாபாரம் செய்யப் படுகின்றன.

உற்பத்தி செய்பவரிடம் வாங்கி உபயோகிப்பவருக்கு விற்பது ஒரு உபயோகமான தொழிலா, அதனால் ஒரு சமூகத்தின் செல்வம் வளருமா என்று வினவலாம். இப்படி எண்ணுவது அறியாமை. சுரங்கப்பொருளைப் பூமியிலிருந்து தோண்டி எடுப்பதும், அதைப் பண்டமாகச் செய்வதும், அப்பண்டத்தை வியாபார ஸ்தலத்துக்கு எடுத்துச் செல்வதும், அதைச் சேமித்து வைத்து விற்பதும் அனைத்தும் ஒரு இன்றியமையாத தொழிலாகும். இதில் எந்தச் சங்கிலி பலஹீனமானாலும் பொருளாதார முயற்சி வீணாகிவிடும்; சமூகத்துக்கு நஷ்டமேற்பட்டு விடும்.

சில வியாபாரிகள் கலப்புச் சாமான்களை விற்றும், சாமான்களின் தரத்தைப் பற்றிப் பொய் சொல்லியும், விலைகளைக் கண்டபடி உயர்த்தியும் அக்கிரமம் செய்வது உண்மையே. அப்படியே உற்பத்தி செய்யுமிடத்திலும், தூக்கிச் செல்லும்பொழுதும் அநியாயம் செய்யப்படுகிறது. சமூகத்தில் நியாய உணர்ச்சி எவ்வளவு தூரம் பரவியிருக்கிறதோ அவ்வளவே பொருளாதாரத் துறையில் வேலை செய்பவர்கள் நியாயமாகவும் பொறுப்புடனும் பணி செய்வார்கள்.

வியாபாரத்தின் லாபத்தை ஏன் தனி வியாபாரிகளுக்கோ, வியாபாரக் கம்பெனிகளுக்கோ விட்டுவிட வேண்டும், அரசாங்கமே செய்துவிடக் கூடாதா என்றும் கேட்கலாம். சில பொதுஉடைமை நாடுகளில் வெளிநாட்டு, உள்நாட்டு வியாபாரங்களைச் சர்க்காரே நடத்துகிறார்கள். ஆனால் அதில் பல கஷ்டங்களுண்டு. சென்ற உலக யுத்தகாலத்தில் இத் தேசத்திலும் உணவுப் பொருள்கள் முதலியவற்றை ரயில்வே நிர்வாகத்தார் விற்று வந்தனர், ராஜ்ய அரசாங்கங்களும் வியாபாரம் செய்து வந்தன. அப்பொழுது ஏற்பட்ட ஊழல்களை ஆராய்ந்த எவரும் சாதாரணமாக அரசாங்கங்கள் போக்குவரத்து, உற்பத்தித் தொழில்களில் பங்கெடுத்துக் கொள்ளலாம், வியாபாரத்தில் இறங்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்திருப்பார்கள். அரசாங்கக் கடைகளில் அரிசி மட்டமாகவும் ரேஷன் கார்டு வைத்திருப்பவர்களிடம் அலட்சியமாக நடப்பதும், கணக்கு வழக்குகள் சரிவர வைத்துக் கொள்ளாமல் இருப்பதும் கண்டு அந்தக் கடைகள் மூடப்பட்டவுடன் மக்கள் பெரும் ஆறுதல் அடைந்தனர்.

வியாபாரிகளுக்குப் பதில் ஓரளவு கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் வியாபாரம் நடத்தலாம். முக்கியமாகப் பலசரக்குச் சாமான்களையும், பொது மக்கள் உபயோகிக்கும் பண்டங்களையும் அவற்றின் மூலம் செய்வதால் பல நன்மைகளுண்டு. ஆனால் மிகவும் விலையுயர்ந்த யந்திரங்களையும், சிலர் வாங்கும் அபூர்வச் சாமான்களையும் வெளிநாட்டு வியாபாரத்தையும் கூட்டுறவுச் சங்கங்களால் நடத்துவது சாத்தியமாகாது.

ஒரு தேசத்தின் வெளிநாட்டு வியாபாரத்துக்கும், உள்நாட்டு வியாபாரத்துக்கும் ஒரு முக்கிய வித்தியாசமுண்டு. உள்நாட்டு வியாபாரத்தில் வேவாதேவி நாட்டின்நாணயத்தின் மூலம் நடப்பதால் நாணயச் சிக்கல்கள் இடையாது. வெளி நாடுகளிலிருந்து வரும் சாமான்களுக்கு விலை அந்தந்த நாடுகளின் நாணயத்தில் கொடுக்க வேண்டும். அதைச் சம்பாதிப்பதற்கு அதன் மதிப்புள்ள நமது சாமான்களை அனுப்ப வேண்டும். பிரிட்டனுக்கு 100 கோடி சாமான்கள் அனுப்பி அங்கிருந்து 150 கோடி சாமான்கள் வாங்கினால் 100 கோடி பாங்கிகள் மூலம் பட்டுவாடா செய்யப்படும். மீதி 50 கோடிக்கு வழி செய்தாக வேண்டும். பிரிட்டன் அமெரிக்க டாலர்களையும், ஜாமன் வெஸ்த் நாடுகளின் நாணயங்களையும் ஏற்றுக் கொள்ளலாம். அந்த நாடுகளுக்கு நமது ஏற்றுமதி அங்கிருந்து இறக்குமதியாகும் சாமான்களின் மொத்த விலையை விட அதிகமிருந்தால் மிச்சத்தை பிரிட்டனுக்கு ஈடு செய்து விடலாம். இந்த வழியும் இல்லாவிட்டால் சிக்கலான நிலைமை ஏற்பட்டுவிடும். இப்படியே பாரதத்துக்கு இப்பொழுது வெளி நாட்டு நாணய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

1956-ம் வருஷத்தில் பாரதம் ரூ. 593 கோடிக்கு ஏற்றுமதி செய்தது. ரூ. 808 கோடிக்கு இறக்குமதி செய்தது. 1955-ம் வருஷம் ஏற்றுமதி ரூ. 602 கோடி; இறக்குமதி ரூ. 673 கோடி. 1955-ல் ரூ. 71 கோடியும், 1956-ல் ரூ. 215 கோடியும் துண்டு விழுந்தன. பிரிட்டிஷ் நாணயத்தில் நமக்கு இருக்கும் ஸ்டர்லிங் பத்திரத்தை விற்றும், உலக பாங்கில் கடன் வாங்கியும் 1955-ம் வருஷத் துண்டை எளிதில் இந்திய அரசாங்கம் சமாளித்தது. 1956-ல் துண்டு அதிகமாகி, அதை ஈடு செய்வது சிரமசாத்தியமாகி விட்டது. அவ்வாறே 1957லும் துண்டு விழுந்து மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதைத் தீர்க்கவே அமெரிக்காவிலும், இதர தேசங்களிலும் கடன் வாங்க இந்திய அரசாங்கத்தார் முயற்சி செய்து வருகின்றனர்.

திடீரென்று வெளிநாட்டு இறக்குமதியைக் குறைத்துவிட முடியாது. ஏற்றுமதியையும் அதிகரிக்க முடியாது. 1956ல் பாரதத்தின் முக்கிய ஏற்றுமதிகளின் மதிப்பு பின் வருமாறு:

| சாமான் | மதிப்பு (கோடி ரூபாய்) |
|---|---|
| தேயிலை | 143 |
| புகையிலை | 13 |
| மிளகு, பழங்கள் வகையறு | 27 |
| சணல் சாமான்கள் | 113 |
| நூல் துணியும், நூலும் | 62 |
| உலோக மண்கள் | 30 |
| மைகா முதலிய சுரங்கப்பொருள்கள் | 12 |
| லாக்ஷும், கோந்து வகையறு | 11 |
| எண்ணெய் வகையறு | 25 |
| பருத்தி, பஞ்சு | 25 |
| ரோமம் | 10 |
| தோல் வகையறு | 22 |

மொத்த ஏற்றுமதியில் டாலர் நாணயம் பிராதான்யமான தேசங்களுக்கு ரூ. 113 கோடி மதிப்புள்ள சாமான்களும், இதர நாடுகளுக்கு 480 கோடி சாமான்களும் அனுப்பப்பட்டன. அதே ஆண்டில் இறக்குமதிப் பொருள்களில் முக்கியமானவற்றின் மதிப்பு:

| சாமான் | மதிப்பு (கோடி ரூபாய்) |
|---|---|
| பழம் வகையறு | 15 |
| பல சரக்கு சாமான்கள் | 15 |
| மண்ணெண்ணெய் முதலிய - - எண்ணெய்கள் | 82 |
| பஞ்சு | 54 |
| சணல் | 14 |
| மருந்துகள் | 42 |
| யந்திரங்கள் | 150 |
| எஃகு முதலிய இரும்பு வகைகள் | 122 |
| இதர உலோகங்கள் | 36 |
| மோட்டார் வகையறு | 67 |
| சாய, வர்ண வகைகள் | 17 |
| வீட்டு தட்டுமுட்டுச் சாமான்கள் | 27 |
| மின்சார சாமான்கள் | 20 |

டாலர் நாடுகளிலிருந்து ரூபாய் 99 கோடிக்கும், இதர தேசங்களிலிருந்து ரூபாய் 706 கோடிக்கும் இறக்குமதி ஆயின.

உள்நாட்டு வியாபாரத்தின் மொத்தம் புள்ளி விவரங்கள் இடையாது. ராஜ்ய அரசாங்கங்கள் வருஷத்தில் ரூபாய் 85 கோடி விற்பனை வரி வசூலிக்கின்றனர். ஆனால் பல சாமான்கள் மீது விற்பனை வரியில்லை. வரி விகிதமும் ஒவ்வோர் ராஜ்யத்திலும் தனி விதமாக இருக்கிறது. வருஷத்துக்குச் சுமார் 3000 கோடி ரூபாய்க்கு உள்நாட்டு வியாபாரமென்று ஸ்தூலமாக மதிப்பிடலாம்.








அஜந்தா கொண்டை அழகுக்கும்
அடர்த்தியான கூந்தலுக்கும்
கேசவர்த்தினி உபயோகியுங்கள்
தயாரிப்பவர்கள் :
கேசவர்த்தினி பிராடக்ட்ஸ்
கிராஸ்கட் ரோடு, கோயமுத்தூர்







எல்லா சோதனைகளிலும்
தேர்ச்சி பெற்ற
ஆதர்ச டூத் பிரஷ்
இன்றே வாங்குங்கள்-
அதன் குணங்
களை தெரிந்து
கொள்ளுங்கள்
எல்லா
கடைகளிலும்
கிடைக்கும்
Aryan
இந்தியாவிலேயே மிக்க அனுபவம் வாய்ந்த
டூத் பிரஷ் தயாரிப்பாளர்கள்



வெளிவந்து விட்டது!
நவநாகரீக வளர்ச்சியுள்ள அழகிய மாடல்,
குறைந்த விலையில் சிறந்த
G.E.C.





5 வால்வ் 3 பாண்ட்ஸ் ரேடியோ
B. C. 5149 A. A. C.
நிகர விலை ரூ. 295
12 மாத உத்தரவாதத்துடன் மாதத்
தவணைகளில் வாங்கும் சலுகை உண்டு
வயர்லெஸ் சேல்ஸ் & ஸர்விஸ் கம்பெனி
1/11-A, மவுண்ட் ரோடு, சென்னை - 2
போன் : 86506 - தந்தி : "RADSALES"
கிளைகள்
பெலண்ட் ரோடு, காந்தி நகர், விஜய
வாடா ○ 28, கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி
ரோடு, வேலூர் ○ செர்ரி ரோடு, சேலம்

## பைன் ஆர்ட்ஸ் ஸொஸைட்டி, ஜபல்பூர்

பிப்ரவரி மாதம் 23-ம் தேதி மாலை 6-மணிக்கு
தென்னிந்திய பள்ளி நிதிக்காக
மேற்படி ஸொஸைட்டி அங்கத்தினர்களால் நடத்தப்படும் முதல் ஹாஸ்ய நாடகம்

**பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்**

கதை: பி. எஸ். ராமையா — டைரக்ஷன்: ''அரவரசன்''

**சிடி பெங்காலி கிளப் ஹாலில்**

**கட்டணங்கள், ரூ. 5-00, ரூ. 3-00, ரூ. 2-00, & ரூ. 1-00**

டிக்கட்டுகள் கிடைக்குமிடம்:
(1) தென்னிந்திய கழகம், மதஹாதால், (2) ''அஸ்டோரியா'', கண்டோன்மெண்ட்

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்

**சென்னை - நாகப்பட்டினம் - பினாங்கு - சிங்கப்பூர்**



# S. S. ரஜூலா

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1958 பிப்ரவரி 18 | 1958 பிப்ரவரி 19 |

பிரயாணத்திற்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து ''பங்க்'' வசதியுள்ள டிக்கட்டுகளையும், 'பர்த்' வசதியற்ற டிக்கட்டுகளையும் (''சாப்பாட்டுடனோ அல்லது ''சாப்பாடின்றியோ'') எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

பினாங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காங்கிற்கு சரக்குகள் அனுப்பவும் ஏற்றுக் கொள்ளப்படும்.

*பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்*

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

# முரண்

## சுபஸ்ரீ



சூரியன் மேலைத் திசையில் சரிய ஆரம்பித்தபோது பம்பாய்த் தீவின் உழைக்கும் சமூகம் வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்யத் தொடங்கியது. மாலை ஐந்து மணிக்கு மேற்பட்டு பிரயர் ரோட்டில் ஓடிப் போய், தபால் நிலையத்தில் மோதிக் கொண்டு, ரயில்வே கட்டடங்களின் நடைபாதையில் வழிந்து ஓடிய மனித வெள்ளத்துக்கு ஒரு லக்ஷியம்தான் உண்டு. காரியாலயத்திலிருந்து ராக்கெட் போல் கிளம்பிய 'மனித யந்திரங்கள்' வி. டி. ஸ்டேஷனின் 'டிக்கட்' கதவை வேகமாகத் தாண்டி, ரயில் மண்டலத்தில் எண்சாண் உடம்புக்கு ஒரு சாண் இடமாவது நிற்பதற்குக் கிடைத்துவிட வேண்டுமென்று விரும்பி விரைந்தன.

5-45 வண்டி!

ஏழாம் நம்பர் பிளாட்பாரத்தில் புறப்படத் தயாராக நின்ற மின்சார வண்டியின் உட்புறத்திலும் புட்போர்டிலும் தொத்தி நின்ற ஏராளமான பிரயாணிகள் காற்றைத் தடுத்து நிற்க, உள்ளே புழுக்கத்திலும் மலிந்த பிரகாசத்திலும் பலர் தவித்துக் கொண்டிருந்தனர்.

பணம் அதிகம் படைக்காத குடும்பத்தில் பிறந்துவிட்ட குற்றத்துக்காக எட்டு மணி நேர அலுவலகச் சிறைத் தண்டனையை அனுபவித்து விட்டு 'உத்யோக புருஷி'யாகத் திரும்பிக் கொண்டிருந்த எனக்குப் பழக்கத்தின் சாமர்த்தியத்தால் இடம் கிடைத்துவிட்டது!

சிக்னல் விளக்கின் ஆரஞ்சு நிறம் கரைந்து, பசுமை படர்ந்தது. கார்டின் விசிலும் தொடர்ந்து வண்டியின் குழலும் சுருதி பேதத்தோடு இலங்கின. 'டபட' வென்ற பாதரக்ஷைகளின் ஒலி துரிதகதியில் சப்தித்தது. கடைசி நிமிஷத்தில் வண்டியைப் பிடிக்க உயிரைப் பணயம் வைத்து ஓடிவந்து ஏறிய அவசரப் பிரயாணிகளின் பாதயாத்திரை எழுப்பிய ஒலி ஜாலங்கள் அவை.

காற்றின் மெல்லிய இழைகளை உள்ளே புக விட்டுக் கொண்டு மெதுவாகப் புறப்பட்டது அந்த வண்டி.

வண்டியினுள் ஒரு கண்ணோட்டம் விட்டேன். நிற்பதற்கே வசதியாக இடம் இல்லாத பெண்கள் பெட்டியில் உட்காருவதற்கு வாய்ப்பு ஏது? ஐந்து மணிக்கே முடிந்து விடும் ஆபீஸில் வேலை செய்யும் பெண் மணிகள், கையும் வாயும் கொண்ட சிந்து நதி தீரத்துப் பெண்டிர், பைகுல்லாவிலிருந்து ஏறி வரும் காய்கறிக் கூடைக்காரிகள்—இந்த நிலையில் ஐந்தரை மணி ஆபீஸை விட்டு அடித்துப் புரண்டு கொண்டு ஓடிவரும் எனக்கு 'இடப் பிரச்னை' தினப்படி சம்பவமாகப் போனதில் ஆச்சரியமில்லை.

வண்டி மஸ்ஜித்தைத் தாண்டும்போது உள் புழுக்கம் குறைந்து விட்டது. மாலைச் செய்தித்தாளில் மூழ்கியவர்கள், ஆங்கில நாவல் புத்தகத்தை 'ஆபரணமாக' ஏந்தி நிற்கும் நாகரிக யுவதிகள், ஆபீஸ் அரட்டையிலும் சினிமா விமர்சனத்திலும் பொழுதை ஓட்டிய பெண்மணிகள், தொட்டிலில் கிடந்து ஏங்கும் பிள்ளையையும், வீட்டையும் எண்ணிப் பார்த்துக் கலங்கும் தாய்கள்...இப்படி எத்தனையோ முகங்கள் அந்தப் பெட்டியிலே! எனக்குத் தெரிந்த சிநேகிதிகளின் கூட்டம் இரண்டு பெஞ்சுகள் தள்ளி மலையாளமும், தமிழும், ஆங்கிலமும் கலந்த மணிப்பிரவாள நடையில் உரையாடிக் கொண்டிருந்தது. கஸ்டம்ஸ் பார்வதி; கால்டெக்ஸ் கமலவிஜயம், போர்ட் டிரஸ்ட் சுபத்ரா, ரயில்வே லக்ஷ்மி, ஸ்வஸ்திக் இலாட்கர்...அந்தக் கூட்டத்திடையே ஸ்ரீமதியின் களையான முகத்தைக் காணாததில் எனக்கு ஏமாற்றமாக இருந்தது.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நேற்று மாலை இதே வண்டியில் நாங்கள் ஒன்றாய்த் திரும்பும் போதுகூட 'இன்று வரமாட்டேன்' என்ற செய்தியைச் சொல்லவில்லையே! ஒரு வேளை உடல் நலம் சரி இல்லையோ?

''என்ன மிஸஸ் சர்மா! உங்கள் சிநேகிதி இன்று வராவிடில் மற்றவர்களோடு நீங்கள் பேசக் கூடாதா?''—சுபத்ராவின் குறும்புக் குரல்தான் இது.

''பெண்களுக்குப் பேசச் சொல்லித்தர வேண்டுமா? ஆனால் இந்தப் 'பெண்கள் அரணை'க்கடந்து எப்படி உங்களையடைவது?''

எங்களது இந்தச் சிரமத்தைக் கண்டோ என்னவோ கூட்டம் சற்று விலகியது. நானும் நெளிந்து சென்று அவர்களை அடைந்தேன்.

''இன்று ஏன் ஸ்ரீமதி வரவில்லை?''

''தெரியாது. ஆனால் இன்று காலையில் 'பூ பாரம்' தாங்காது பட்டுப் புடவை உடுத்திக் கொண்டு எங்கோ தாயும் பெண்ணும்



போவதை 'வின்ஸெண்ட் ரோட்டி'ல் கண்டேன். தாமதமாக வருவதாகச் சொன்னாள்.''

நான் மௌனமானேன். ஸ்ரீமதியும் அவளது நிறை கூந்தலும் என் நினைவில் தோன்றின. சேயைப் பேணும் தாய்போல் தன் கார் குழலை அவள் சிங்காரித்து வரும் விதமே அலாதிதான்.

* * *

பிறந்தது முதல் பம்பாயிலேயே வளர்ந்துவிட்ட ஸ்ரீமதி அந்த நகரத்தின் நாகரிகத்தில் தோய்ந்து போனதில் வியப்பில்லை. தாயகத்தின் கறுப்பு நிறம் பம்பாயின் மித சீதோஷ்ணத்தில் தெளிவடைந்து மாநிறமாகப் பூசி நின்றது. பெண்கள் கணக்குப்படி பார்த்தால் அவள் உயரம் அதிகம்தான். அதற்காக ஒடிந்து விழும் தோற்றமல்ல. பருவத்தின் செழிப்புடன் கூடிய ஆகிருதி. அஞ்சனத்தின் துணையின்றிக் காட்சி அளிக்காத கண்கள்; ஆபரணமற்ற நீண்ட நாசி; உடை நாகரிகத்தில் எளிமையும் கவர்ச்சியும் போட்டி போடும். கார்மேகம் போல் 'புஸ் புஸ்' என்று கூந்தல் முழங்காலை ஸ்பரிசிக்கும். அதைத் தழைய நீளப்பின்னித் தலை தாங்காது ஏதேனும் புஷ்பத்தைச் சூடிக் கொண்டு விடுவாள். தலை அலங்காரப் பின்னல் துறையில் எத்தனை வடிவங்கள் உண்டோ, அத்தனையும் அந்த நீளக் கேசங்கள் செய்து காண்பித்தன. சொல்லப் போனால் கூந்தல் அலங்காரத்தில் அவள் ஒரு நடமாடும் பொருட்காட்சி.

காலை ஒன்பதுமணிக்குள் குளித்து, உடுத்து, உண்டு புறப்படவே என்னைப் போன்ற பெண்களுக்கு நேரமில்லாதபோது ஸ்ரீமதிக்கு எப்படித்தான் அளகபார அலங்காரத்துக்கு இத்தனை அவகாசம் இருக்கிறதோ? ஆனால் அவளுக்கென்ன! செல்லப் பெண். எது நினைத்தாலும் நடக்கும். கூந்தல் சிங்கார சாமக்கிரியைகளுக்கு மட்டும் மாதம் ஐந்து பத்து செலவிடுவாள். தனது கேசத்தின் மீது அவ்வளவு பெருமை; அத்தனை பாசம்!



ஸ்ரீமதி எனக்கு அறிமுகமானதே ஒரு உணர்வு மிகுந்த நிகழ்ச்சி.

தென் பாண்டி நாட்டிலே பிறந்து வளர்ந்துவிட்ட நான், விவாக அலைகளால் அடித்து வரப்பட்டு மேலக் கரையில் ஒதுங்கியவள். தாணாவில் வீடு; வேறு பிக்கல் பிடுங்கல் இல்லாத வரையில் கற்ற கல்வியை உபயோகித்துச் சௌகரியமாக வாழலாமே என்று ஆரம்பித்த எனது மூன்று வருட உத்தியோக வாழ்வில்தான் ஸ்ரீமதியைச் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது. அதுவும் இந்தக் 'கஸாரா' வண்டியில்தான்.

மழைக்கும் செருப்புக்கும் மட்டுமல்ல; மாரிக்கும் ரயில் வண்டிக்குமே ஒத்துக் கொள்வதில்லை. இரவு முழுவதும் விடா மழை பெய்தால் மறுநாள் 'கபர்பன்' வண்டிகள் தத்தித் தத்திச் செல்ல ஆரம்பித்து விடும். கடைசியில் வி.டி.க்கு நான்கு ஸ்டேஷன்கள் முன்பாகத் தண்ணீர்த் தேக்கம் காரணமாக வண்டி ரத்தாகி விடும். எவ்வாறு ஆபீஸ் அல்லது வீடு சேர்வோம் என்று சொல்ல முடியாது.

* * *

அன்றும் அப்படித்தான். மழை காரணமாக வழுக்கும் தெருவில், ரப்பர் பாத அணிகள்தான் என்றாலும், சேறு தெறிக்காமல் வேகம் குன்றாமல் நடப்பது கடினம். ஒரு வழியாகப் பாலத்தைக் கடந்து பிளாட்பாரத்துக்குள் நுழையும்போது வண்டியின் விஸில் சப்தித்தது. நியமிக்கப்படாத 'பாடிகார்டா'கப் பெண்கள் வண்டியின் பாதுகாவலர்கள் போல் வந்து நிற்கும் ஆத்மாக்கள் படிகளை மொய்த்து நின்றனர். என்னுள் ஒரு பரபரப்பு. இந்த வண்டியைத் தவறவிட்டால் ஆபீசுக்கு நேரமாகி விடும். விரைந்து வண்டியேற முயன்றேன். வண்டி நகரத் தொடங்கி விட்டது. கைக்குப் பற்றுக்கோலாக எந்தக் கம்பியும் அகப்படாமல் ஒரு கால் வெளியிலும் ஒரு கால் படியிலுமாக நகரும் வண்டியுடன் நடனமாடிக் கொண்டிருந்த அபாயகரமான நிலைமை. எப்படியோ இரண்டாவது பாதத்துக்கும் படியில் இடம் தேடித் தொத்தி விட்டேன். ஆனால் மயிரிழை தப்பினால் விழுந்து விடுவேன் என்ற வேளையில் என் கைக்குச் சட்டென்று பிடிபட்ட எதையோ இறுகப் பற்றின என் விரல்கள். என்னை இழுத்து உள்ளே அணைத்தது ஒரு கரம். சுற்றி நின்ற ஆண்கள் குழாம் தாங்கள் தவறாகப் பெண்கள் பெட்டியில் ஏறி இருக்கும் வெட்கக்கேட்டையும் மறந்து, விழப் போன என்னைப் பார்த்துச் சிரித்தனர். 'ஷட் அப்' என்று ஒரு பெண்ணின் குரல் சீறியது.

நிமிர்ந்து பார்த்தேன். பவழக் கண்களின் சொந்தக்காரிதான் அதட்டியது. ஆண்கள் சமூகத்துக்குத் துணிந்து ஒரு 'போடு' போட்டதில் எனக்குத் திருப்தி.

''தாங்கள் ஜாக்கிரதையான நிலையில் தற்போது நிற்கிறீர்கள். இனி என் கூந்தலின்மேலுள்ள தங்கள் பிடியைத் தளர்த்துகிறீர்களா?'' அவள் கண்களில் கனல் மாறிக் கனிவு பிறந்தது.

உணர்வு பெற்ற நான் எனது கைப் பிடியை நழுவ விட்டேன். கருநாகம் போன்ற அவள்

பின்னல் ஊசலாட, என்னை வெட்கம் கவ்விக் கொண்டது. என்னை எம பாசத்திலின்று காத்து இழுத்த கருஞ்சாட்டை அவளது கூந்தல். என் மெய் சிலிர்த்தது. நயனங்கள் நன்றியைக் கக்கின. சொற்கள் அடைத்துப் போய் விட்டன.

அன்றைய அறிமுகத்துடன் கூந்தலழகி ஸ்ரீமதியைப் பற்றி நிறைய அறிந்து கொண்டேன். படித்து விட்டு நேரத்தை வீணாக்க விரும்பாது, வேலைக்கு வந்தவள் அவள். உத்தியோகம் செய்து ஆக வேண்டும் என்ற அவசியமில்லை; அது வெறும் பொழுது போக்குத்தான். உயர்ந்த உத்தியோகம் வகிக்கும் அவள் தந்தைக்கு மாதுங்காவில் 'சொந்த பிளாட்' இருந்தது.

அதற்குப் பிறகு ஸ்ரீமதியை அடிக்கடி ரயிலில் சந்தித்தேன். பேரழகும், பெருந் தன்மையும் படைத்த ஒரு நாகரிக நாயகியின் நட்பு, கட்டுப்பெட்டியும் சாத்வீகத் தன்மையும் கொண்ட நான் பெற்றது பலருக்கு வியப்பாகவும் பொறாமையாகவும் இருந்தது!

* * *

**வ**ண்டி மாதுங்கா என்ற 'சோட்டா மதராஸி'ல் நின்றது. பாதி வண்டி காலியாயிற்று. "லோபத்ரா! ஸ்ரீமதியைப் பார்த்தால் நாளை சனிக்கிழமை ஆபீஸ் விட்டதும் எங்கள் காரியாலயத்துக்கு வரச் சொல்லு."

ஆனால் ஸ்ரீமதி சனிக்கிழமை காணக் கிடைக்கவில்லை. திங்களன்று அவள் ஆபீசுக்குப் போன் செய்ததில் அவளுக்கு உடம்பு சரியில்லை என்று அறிந்தேன். அன்று மாலை ஆபீஸ் விட்டுச் செல்லும்போது மாதுங்காவில் இறங்கி அவர்கள் வீட்டை நோக்கி வேகமாக நடந்தேன்.

வெறும் கையுடன் போக வேண்டாம் என்று கருதி, போகிற வழியில் 'தங்கத் தேவர் புஷ்பக் கடை'யில் இரட்டை வரிசை கோக்கப்பட்ட மல்லிகை வேணி இரண்டு வாங்கிச் சென்றேன். ஸ்ரீமதிக்கு அதைவிடப் பிரியமான பொருள் இந்த உலகத்தில் வேறு இல்லை என்பது எனக்குத் தெரியும்.

* * *

"**வா**ம்மா, ராஜம்." ஸ்ரீமதியின் தாயார் வரவேற்றாள். ஆனால் அந்தச் சுமங்கலியின் முகத்தில் வழக்கமாகக் காணப்படும் உற்சாகமோ, வாய் நிறைய என்னை வரவேற்கும் சகஜமோ இல்லை.

"மாமி! ஸ்ரீமதிக்கு என்ன உடம்பு?"

"உடம்பு ஒன்றுமில்லை. பேபி, யார் வந்திருக்கா பார். வாம்மா வெளியிலே. என்ன செய்யறது......"

அது என்ன புதிர்? அவள் வரமுடியாதபடி என்ன வந்து விட்டது?

"வா, ராஜம்!"

குரல் வந்த திசையை நோக்கிப் பாய்ந்தோடினேன். வரவேற்கும் நிலையில் என்னைப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்ரீமதியின் முதுகுப் புறம் அலங்கார பீரோவின் நீண்ட கண்ணாடியில் பிரதிபலித்தது. 'ஐயோ, இதென்ன?'




"என்னடி ஸ்ரீமதி?" எனது கையிலிருந்த புஷ்பப் பொட்டலம் நழுவி விழுந்தது.

"இந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்?" ஸ்ரீமதி குழந்தைபோல் விம்மினாள். ஆறுதலாக அவள் தலையைக் கோதப்போன என் கை நெருப்பாகச் சுட்டது. கரு நாகம்போல் தொங்குகின்ற அவளது மலர்க் கூந்தல் அங்கு இல்லை. பிடரியில் சிலும்பலாக நின்றன மயிர்க் கற்றைகள். இந்த அலங்கோலம் என் அடி வயிற்றைத் தாக்கியது.

இதற்குள் ஸ்ரீமதியின் தாயார் காப்பியுடன் வந்தாள். "ராஜம்! என் தப்புத்தான். வெள்ளிக்கிழமை தாதரில் ஒரு கல்யாணம், இருவருமாகப் புறப்பட்டோம். என் பெண்ணுக்கு இரு கை அகலத்தில் தொங்கும் அந்தப் பின்னலின் நடுவே எனது மல்லிகை மொட்டு, வைரத்திருகு பில்லையை வைத்து அலங்கரிக்க ஆசைப்பட்டேன். அவள் கூட 'ஐயோ பழங்காலம்' என்று சிணுங்கினாள். ஆனால் நான்தான் விடாப்பிடியாகத் திருகி விட்டு, தவறி விழுந்து விடாதிருக்க நல்ல நூலாக வைத்து இறுக்கிப் பின்னலுடன் கட்டி விட்டேன். திரும்பி வந்ததும் வசதியாகக் கழற்றி விடலாமென்று எண்ணினேன்.

"என் கண்ணே பட்டுவிடும் போல இருந்தது. டிராமில்தான் போனோம். வண்டி தாதரில் நின்றது. ஆபீஸ் போவோர் வருவோர் கூட்டம், வேகமாக இறங்கி நடந்தது. ஸ்ரீமதி 'ஐயோ!' என்று அலறினாள். திரும்புவதற்குள் என் கண்மணியின் தலையில் இருந்த திருகு பில்லைக்காகக் கூந்தலோடு...படுபாவி... வெட்டி விட்டான். ராஜம், வெள்ளிக்கிழமையும் அதுவுமா..." மேலே பேசவிடாதபடி விம்மலும் அழுகையும் பீறின.

அறையின் கீழ்த்திசையில் பாதரஸக் குழல் வெளிச்சத்தின் கீழ் ரவிவர்மா படம் ஒன்று திகழ்ந்தது. கால் வரையில் கேசம் படர

நின்ற கேரளத்து ஆரணங்கு ஒருத்தி. திடீரென்று குழல் விளக்கு வெடித்து, அவளது நீண்ட கருங்குழல் தீய்ந்து போகங்குவது போன்ற பிரமை, எனக்கு.

ஜடையில்லையைத் திருட எண்ணிய பாவிக்கு எப்படித்தான் கூந்தலையும் சிதைக்கும் மனம் வந்ததோ? சோம்பலின்றி வாரிப் பின்னி முடிந்து ஸ்ரீமதி பேணிவந்த கூந்தலா இன்று மறைந்து விட்டது! என்ன பயங்கரம்?

அவளைத் தேற்றுவதே பெரிய காரியமாகி விட்டது. அவளது துக்கம் சொல்லுக்குள் அடங்குவதா?

முன்பு ஒரு தடவை நடந்த சம்பவம் ஒன்று என் நினைவுக்கு வந்தது. 'கேசவிருத்தி' காரியாலயம் ஒன்றில் வேலை பார்த்த பெண் ஒருத்தி ஸ்ரீமதியை நெருங்கினாள்.

''உங்கள் சிகை அலங்காரத்தின் பல கோணங்களைப் படம் பிடித்து எங்கள் தைல விளம்பரங்களில் உபயோகிக்க அனுமதிக்கிறீர்களா? தகுந்த சன்மானம் கிடைக்கும்.''

ஸ்ரீமதி சினத்தோடு அவளைப் பார்த்தாள்.

''மன்னிக்கணும். என் கூந்தலை அழகுக்காகப் பேணுகிறேன். அதனை வர்த்தக விளம்பரங்களில் உபயோகப்படுத்திப் பொருள் ஈட்டும் விருப்பமில்லை.'' வெடுக்கென்று கூறிவிட்டுத் தலைப்புக்குள் பின்னலை விட்டு மூடிக் கொண்டு விட்டாள்.



அத்துணை உயர்ந்த நோக்கத்துடன் போற்றிப் பாதுகாக்கப்பட்ட கரிகுழல், என்னை ஒரு சமயம் விபத்தின் விளிம்பினின்று காப்பாற்றிய கருங் கூந்தல், கொண்டையாகவும் பின்னலாகவும் பல வடிவு காட்டிப் பார்ப்போரைப் பிரமிக்கச் செய்யும் கலைச் செல்வம், அழகு நிரம்பிய அளகபாரம் இன்று மறைந்து விட்டது; உள்ளத்திலே துக்கத்தின் பாரம் ஏறி விட்டது.

அவளை ஒருவாறு தேற்றிவிட்டு வீட்டுக்குப் புறப்படும் போது பொழுது ஏறி விட்டது.

வழியிலே தமிழ்ச் சங்க அறிவிப்பு போர்டு ஒன்று பளிச்சிட்டது. 'பாஞ்சாலி சபதம்' பற்றி யாரோ ஒரு பிரமுகர் தமிழ்ச் சங்கத்தில் பேசப் போகிறாராம்!

என் முன்னே ஒரு காட்சி விரிந்தது.

பேரழகு கொண்ட பெருந்தவத்து நாயகி பாஞ்சாலி சிரமியக் கூந்தல் சிதையக் கவர்ந்து சென்ற சம்பவம், நீண்ட கருங்குழலைப் பற்றி இழுத்த நீசன் துச்சாதனனின் கேடுற்ற செயல்—நினைவுக்கு வந்தன. சிக்குழல் முடிக்க இல்லாத நிலையில்தான் இன்று ஸ்ரீமதியும் தவிக்கிறாள்.

• • •

மறுநாள், ஆபீஸ் கடியாரம் பதினொன்று அடித்து ஓய்ந்தது. என்கூட வேலை செய்யும் தடானி என்ற சிந்திப் பெண் இன்னும் வரவில்லை. 'அண்டி வந்த சலுகை'யால் உத்தியோகம் பெற்று விட்டாலும் அவளுக்குப் பொறுப்பு உணர்ச்சி கிடையாது.

சலிப்புடன் பைல்களைப் புரட்டிக் கொண்டிருந்தேன். 'குட்மார்னிங், மிஸஸ் சர்மா; எக்ஸ்யூஸ்மி' என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். டப்பப் பையை மேஜையின்மீது விட்டெறிந்து விட்டு நெற்றி வியர்வையை ஒத்திக் கொண்டாள். அயல் நாட்டு வாசனைச் சரக்குகளின் நெடி.

''யாரு தடானியா?'' என்று வியப்புடன் விளித்தேன். 'தலைசடை'யாக ஊசலாடும் அவளது செம்பட்டைக் கூந்தலைக் காணோம்!

கலகலவென்ற அவள் சிரிப்பொலி என்னைத் தூக்கிவாரிப் போட்டது.

''ஏன் என்னை அடையாளம் தெரியவில்லையா? என்னுடைய நெடுநாளைய லட்சியம் நிறைவேறிய காட்சியைக் காண். எத்தனை அழகாக 'பாப்' செய்திருக்கிறார்கள். 'மாடர்ன் லேடீஸ் ஹேர் டிரஸ்ஸரி'ன் கலைக் கைகள் செய்த விந்தை. அம்மா சென்ற வாரம் தான் அனுமதி தந்தாள். இந்தக் கூந்தல் சுருள்கள் ஆறுமாதம் வரை அப்படியே இருக்கும். இதற்குக் கூலியாகப் பதினைந்து ரூபாய் பறித்து விட்டார்கள்.''

மட மட வென்று பொரிந்து தள்ளினாள், தடானி! டம்பப் பையின் உட்புறத்திலிருந்து கண்ணாடி ஒன்றை எடுத்தாள். அவள் கழுத்தை வளைத்து, அரைவட்டப் பரிதியில் ஒரு தடவை கூந்தல் அழகைப் பார்த்து ரசித்தாள்.

அழகின் உயர்வு கூந்தல் குறைப்பில்தான் இருக்கிறது என்ற கொள்கையில் நம்பிக்கை கொண்டு மனதார வெட்டி எறிந்து விட்டு அதன் சௌந்தரியத்தை ரசிக்கின்ற நாகரிக உள்ளம் படைத்தவள், தடானி.

ஆனால் ஸ்ரீமதி...

அவளது தேர்வடம் போன்ற பின்னல், வைர பில்லை, குறைவுண்ட கூந்தல், நீர் மல்கும் கண்கள்...!

இரு பெண்களிடையே எத்துணை பேதம்! ஒருத்தி அகஸ்மாத்தாகக் கூந்தலை இழந்து விட்டு அவமான உணர்ச்சியுடன் குன்றி ஒடுங்கி நிற்கிறாள். மற்றொருத்தி காசைக் கொடுத்து அதனைக் களைந்து விட்டுத் தன் எழில் இப்போதுதான் சோபிப்பதாகக் கருதி இறுமாப்பு எய்துகிறாள்.

*நிகழ்ச்சி ஒன்றுதான்; ஆனால் அதன் விளைவான உணர்ச்சி வேறு; உள்ளங்களுக்கு ஏற்ப, நிகழ்ச்சியின் பலன் நிறபேதம் அடைந்து விடுகிறது. ஒருவருக்கு அமுது மற்றவருக்கு நஞ்சாகத் தோன்றுகிறது. முரண்கள் நிறைந்ததுதான் உலக இயற்கை போலும்!*

# இன்றைய நாகரீக மோஸ்தர்களில்

## பாத அணிகளின் பங்கு







நாகரீகத்துடன் இணைந்து வரும் புதிய விஷயங்களில் எப்பொழுதுமே ஒரு மோகம் இருக்கிறது. மாது பாத அணிகள் அவைகளின் தர மேன்மையாலும் நாகரீக மோஸ்தர்களாலும் பகட்டாலும் உங்கள் தேவைகளைத் திருப்திப் படுத்துகின்றன.

**நீங்கள் வாங்குமுன் அவசியம் பெயரைக் குறிப்பிட்டுக் கேளுங்கள்**

தயாரிக்குமிடம் :

**சென்னை அரசினர் பாதஅணி நிலையம்**

பெரம்பூர் - - - - - - சென்னை



இலக்கியச் செல்வம் 53

# பானைகள் பேசின

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

**பா**ரசீகக் கவிஞர் உமர் கையாம்* சொல்கிறார் :

'ரம்ஜான்** மாசம் முடிந்து கொண்டிருந்தது. புதிய பிறையின் பொன் வளைவு வானில் உதயமாகவில்லை. முன்னொருநாள் நான் போன அந்தப் பழைய பானைக் கடைக்கு, மறுபடியும் போய்ச் சேர்ந்தேன். உள்ளே போனால், என்னைச் சுற்றி எங்கும் வரிசை வரிசையாய் மண்பாண்டங்கள், குடங்கள், பானைகள், சட்டிகள், பலவகையான மட்கலங்கள்.

**இதைக்கேள் நோன்பு மாதத்தின்**
**இறுதி மாலைப் பொழுதினிலே**
**புதிய பிறையின் பொன் வானில்**
**பொலிவு முன்னர் சந்தையிலே**
**விந்த விதமான மட்கலங்கள்**
**விற்கும் கடையில் நின்றேனென்**
**எதிரே களிமண் வடிவங்கள்**
**எங்கும் வரிசை நிர்த்தனவாம்.**

மண்பாண்ட வரிசைகள் ஊமையாய் நின்றன. வேறெப்படி நிற்க முடியும்? மண்பாண்டங்கள் பேச முடியுமா? ஆனால் இரு, அதோ பானை ஒன்று தலையை நிமிர்த்துகிறது. என்ன மாயமடா இது, பானை பேசத் தொடங்கி விட்டது. இது என்ன பானைகள் மகாநாடா? அப்படித்தான் தோன்றுகிறது. இதோ முதலில் பேசும் பானை, மகாநாடு ஆராயப் போகும் பிரச்னையைச் சமர்ப்பிக்கிறது. 'மண்பாண்டத் தோழர்களே! நாம் இந்த மகாநாட்டில் முடிவு காணவேண்டிய பிரச்னை இதுதான்: நம்மைப் படைத்த குயவன் யார்? பானை (பானை என்றால் சட்டி, குடம் முதலிய எல்லா வடிவங்களும் அடங்கும்) என்றால் என்ன? வேறுவிதமாகச் சொன்னால், நாம் யார், நம்மை ஆக்கியவன் யார், இதுவே பிரச்னை.'

இப்படியாகப் பேசியது முதற் பேச்சாளராக அமைந்த பானை.

**வண்ணக் கலங்கள் வரிசைபெலாம்**
**வாய் திறவாமல் இருந்திடவும்**
**மண்பாண்டங்கள் சில மட்டும்**
**மாயமடா சொல் இசைத்தனவாம்**
**விண்ணென் றெழுந்து கலமொன்று**
**விரைவாய் ஏதோ பேசிற்று:**
**'பண்ணும் குயவன் யாரேயோ**
**பண்ணிய பானையும் எதுவேயோ!'**

இப்படி ஒரு பானை பேசி முடிப்பதற்குள், இன்னொரு பானை எழுந்தது. 'அதிருக்கட்டும், நண்பர்களே! குயவன் யார், நான் யார் என்று ஆராய்வதற்கு முன் ஒன்றை உறுதி செய்து கொள்ளலாம். நம்மை யார் படைத்தாலும் சரி, வீணாக மட்டும் படைத்திருக்க முடியாது. எவ்வளவு அழகோடு, விதம் விதமான நுட்பமான வடிவங்களில் நாம் சமைந்திருக்கிறோம்! இவ்வளவு எழிலும் வீணாகப் போமா? போகாது. சிறிது காலம் இருந்தபின் நாம் மறையலாம். ஆனால் அது மறைவேயன்றி அழிவு அன்று. சாவு வரலாம், ஆனால் சாவென்பது நம்மைப் பொறுத்தவரையில் ஏதோ புதிய வாழ்வின் தொடக்கமாகத் தான் அமையும். ஆமாம், அப்படித் தான்' என்றது அந்தப் பானை.

---

* பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் பாரசீகத்தில் வாழ்ந்தவர். சென்ற வாரக் 'கல்கி'யின் 'இலக்கியச் செல்வ'க் கட்டுரையைப் பார்க்கவும்.

** ரம்ஜான் முஸ்லிம்களுக்கு முக்கியமான நோன்பு. நோன்பு மாசத்தின் இறுதியில் புதிய பிறையைப் பார்த்த பிறகே முஸ்லிம்கள் நோன்பை முடிப்பர்.

என்றது பானை இதற்குள்ளே
இன்னொரு பானை பேசியது:

'என்னை இந்த மண்ணிலிருந்(து)
எடுத்தமைத்தது வீணேயோ?

அன்றென்னை அருமை வடிவினிலே
அழகு சொட்டப் படைத்தவனும்

இன்று மண்ணோடு மண்ணாக
எந்தன் எழிலைத் தேய்ப்பானோ'

இதைச் சொல்லிவிட்டுச் சிறிது பேச்சை நிறுத்துகிறார் பாரசீகக் கவிஞர் உமர் கையாம்.

'என்ன ஐயா, உமது பானைகள் மனிதர்களைப் போல அல்லவா பேசுகின்றன?' என்று நாம் கேட்கிறோம்.

'ஆமாம், அதனால் என்ன? மனிதன் தன்னுடைய அறிவும் ஆற்றலும், தான் இந்த உலகில் சாதித்துள்ள கலையும் காவியமும், கணிதமும் விஞ்ஞானமும் சாவிலே முடிவதற்குத்தானா, அப்படி ஒரு நாளும் இராது என்று எண்ணுகிறான். பானையோ தன் வடிவத்திலே பெருமை கொள்ளுகிறது. அழிந்து போவதற்கென்றே இவ்வளவு அழகைக் குயவன் படைத்திருக்க மாட்டான் என்று எண்ணுகிறது. இந்தக் கருத்தை இன்னொரு மண்பாண்டம் ஆமோதித்துப் பேசியது, அந்த மகாநாட்டில். அதைக் கேளுங்கள்' என்று மகாநாட்டு விவரத்தைத் தொடர்ந்து சொல்கிறார் பாரசீகக் கவிஞர்:

'இன்னொரு பானை இரண்டாம் பேச்சாளர் சொன்னதை ஆதரித்து அலங்காரமாகப் பேசியது. 'ஒன்றும் அறியாத சிறு பிள்ளைகூட, தான் மது பருகிய கலத்தை உடைக்கமாட்டான். நம்மைச் சமைத்த குயவனோ அன்பு உடையவன், ஒப்பற்ற கலைத்திறமை உடையவன். அவன் நம்மை-தான் படைத்த செல்வத்தை — அழித்து விடுவானா? ஒரு போதும் இல்லை' என்றது பானை.

வண்ணப் பானை மற்றொன்று
வக்கணையாகப் பேசியது:

'எண்ணந் தெளியாச் சிறுபிள்ளை
உண்ணும் தனது மதுக் கலத்தை

மண்ணில் மோதி அழிப்பானோ?
மாட்டான். அனைத்தும் தன்மையால்

பண்ணிய கலைஞன் அருட்குயவன்
படைத்த திருவை உடைப்பானோ'

இந்தப் பேச்சை ஏற்றுக்கொண்டவை போல் பானைகள் யாவும் அமைதியாக இருந்தன. இந்த மோனத்தைக் கலைத்து கரகரத்த குரலொன்று. திரும்பிப் பார்த்தேன். அவலட்சணமாக இருந்த ஒரு மண் தாழி, தன் விகாரமான உடலை ஆட்டி ஆட்டிப் பேசியதைப் பார்த்தேன். அது கோரமாக நகைத்துச் சொல்லியது: 'அன்பர்களே! தான் படைத்த அழகையும், வடிவையும், குயவன் அழிக்கமாட்டான் என்று இருவர் பேசியதைக் கேட்டோம். அந்தக் குயவன் ஒரு கலைஞன் என்றும் இப்போது பேசியவர் குறிப்பிட்டார். கலைஞராக இருக்கலாம். இருந்தால், என்னைப் பார்த்துச் சிரிக்கிறீர்களே, அவ்வளவு விகாரமான வடிவத்தை எனக்கு ஏன் தந்தான்? ஒரு சமயம், என்னை அவன் சிருஷ்டித்தபோது, அவனுடைய கை ஆட்டங் கண்டு நடுங்கியதோ? அவன் யார், கலைஞனா, பைத்தியமா, குடிகாரனா? எண்ணிப் பாருங்கள். கலைஞனாம், நல்ல வேடிக்கை' என்று கசப்புடன் சிரித்தது அந்தத் தாழி.

'எந்தன் கோணல் கண்டென்னை
எள்ளும் பெரியீர்! எனைப்படைத்த

அந்த வேளையில் குயவன் கை
ஆட்டம் கண்டு நடுங்கியதோ?'

என்று கேட்டது அந்த விகாரமான கோணல் பானை.

இப்படித்தானே மனிதர் பலர் எண்ணுகிறார்கள்? வறுமை, நோய், விகாரமான உடல், ஆசாபங்கம், தோல்வி, இவற்றைப் பெற்றவர்கள் கடவுளுக்கு நீதி உணர்ச்சி இல்லை என்றுதானே முடிவுகட்டுகிறார்கள்? உலகத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் காணும்போது, நல்லவர் வாடுவதையும், பொல்லாதவர் தழைப்பதையும் பார்க்கும்போது, கடவுளுக்குக் கண் இல்லை என்று சொல்லத் தோன்றவில்லையா?

இதையே அந்த விகாரமான தாழி கூசாமல் உரைத்தது. இதற்குள் இன்னொரு பானை தொண்டையைக் கனைத்துக் கொண்டு, வேறொரு கோணத்திலிருந்து குயவனைப் பற்றிய விசாரத்தில் இறங்கியது: 'சிலர் எண்ணுகிறார்கள், அவன் பொல்லாத கொடுமைக்காரன் என்று. நரகம் என்ற அகண்டமான வேதனைக் குழியை அவன் தோண்டி வேலி கட்டி வைத்திருக்கிறானாம். பானைகளை — தான் செய்த பானைகளை — சோதனை போட்டு, எடை போட்டு, குற்றம் குறை இருந்தால், நரக இருட்டிலே தூக்கி எறிந்து விடுவானாம். இப்படியாகச் சில பைத்தியங்கள் பேசி வருவதைக் கேட்டிருக்கிறீர்கள், இல்லையா? அத்தனையும் பொய். குயவனை எனக்குத்



பிரமுகர்: இதோ பாரு! பொங்கல் இனாம், அந்த இனாம், இந்த இனாம் என்று கண்டவங்களுக்கெல்லாம் கொடுக்கிறதுக்கு நான் என்ன லட்சாதிப் பிரபுவா? இந்த இனாம் கேட்கிறதை விட்டுவிடு! வேறே எது வேண்டுமானாலும் கேள், தருகிறேன்!

ஆள்: அப்படின்னா, கைமாத்தாக இரண்டு ரூபாய் கொடுங்க, ஐயா!

பிரமுகர்: நல்ல ஆளப்பா நீ! ஆளை விட மாட்டே போலிருக்கு! சரி! சரி! அப்புறமா வா; இரண்டணா இனாம் தருகிறேன்!

---

தெரியும், அவன் நல்ல பயல். நரகமா, சே, யார் சொன்னது? நமக்கு இன்ப மது தருவதே அவன் இயல்பு. எத்தனை இன்பம், எத்தனை கோடி இன்பம் இங்கே வைத்திருக்கிறான். இந்த இன்பத்துக்கு — இது மதுவைப் போல் மயக்குகிறது — இதற்கு எல்லையுண்டா? இதை அளித்த குயவன் நல்ல பயல்' என்று தன்னைப் படைத்தவனைத் தட்டிக் கொடுத்தது அந்தப் பானை.

வேறொரு பானை பேசியது:

'வெந்தழல் நரகக்கள் பூசி
ஏறு சினத்தோடு படியளக்கும்
எவனோ ஒருவன் அவன் நம்மைக்
கூறுபோட்டுக் கொடுமையினில்
குறுக வைப்பான் என்பதெல்லாம்
ஏறுமாறு. அவன் நல்ல பயல்
எனக்குத் தெரியும், மதுவார்ப்பான்.

'மதுவா, அடடா, அதுதானே அப்பனே வேண்டும்! எத்தனை நாள் மது இல்லாமல் இருந்து தொண்டை காய்ந்து போச்சு. கொண்டு வா, மதுவைக் குடித்துத் தீர்க்கிறேன். குயவனைப் பற்றிய தத்துவ ஆராய்ச்சி என்றும் தேவையில்லை' என்று மகாநாட்டுக்கு முற்றுப்புள்ளி வைத்தது ஒரு பானை.

இதற்குள் வெதும்பிப் பெருமூச்சோ(டு)
இன்னொரு பானை இயம்பியது:

'மதுவை, அடடா, எத்தனை நாள்
மறந்து போச்சடா, மண்ணுடம்பு
பதம் தடுமாறி உலர்ந்ததடா!
பழைய மதுவை வார்த்திட்டால்
இதமாய்க் குடிப்பேன் எதேதுவோ
என்னை விழுங்கும் உண்மையடா!'

'இந்தப் பானை தான் புத்திசாலி' என்று முடிக்கிறார் உமர்கையாம்.

'அப்படியா, கடவுளிடம் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?' என்று அவரைக் கேட்டு வைக்கிறோம்.

'நம்பிக்கையா? எதை நம்புவது, எதை நம்பாமல் இருப்பது? பானைகள் மகாநாடு நடத்திய அழகைத்தான் பார்த்தாயே! மக்கள் நிலையும் இது தான். அழிவுப் பாழ் வெளியில் இன்பம் பருக உனக்கு ஒருகணம் இன்று கிடைத்திருக்கிறது. அதை வீணாக்காதே! சூனியத்தின் உதயத்தை நோக்கி உயிர்க்குலம் நடக்கிறது. போகும் வழியிலே கிடைக்கும் இன்பத்தைப் பருகு. இதைத் தவிர வேறு ஒன்றையும் நம்மால் காண இயலாது. ஒன்று நிச்சயம், வாழ்க்கை ஓடுகிறது, மிக வேகமாக ஓடுகிறது, சிறிது நேரத்தில் ஒடுங்கி விடும். மலர்ந்த மலர் வாடி விடும். வாடுமுன், அதை நுகர்வோம்.

கதவு தெரிகிறது. ஆனால் திறப்பதற்கு
வழியில்லை.
திரை மறைக்கிறது. அதை ஊடுருவப்
பார்வை இல்லை.
ஏதோ சிறிது நேரம், நீ, நான்
என்ற பேச்சு.
பிறகு...நீயும் இல்லை, நானும் இல்லை,
ஒன்றும் இல்லை.

உண்மையைக் காண்பதா? பானை எப்படியடா குயவனை அறியும்?'

இது பாரசீகத்தில் 900 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த உமர்கையாம் என்ற புலவனுடைய குரல். அவன் பாடியுள்ள ரூபாயியாத்* என்ற நூலில், ஐயப்பாடும், ஏமாற்றமும், தாபமும் நிறைந்த அந்தக் குரலை இன்றும் கேட்கலாம்.

---

* நாலடிப் பாடல்கள் என்பது இதன் பொருள். உமர்கையாம் பாடியுள்ள பாடல்களை இவைகளைக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார். 'மலரும் மாலையும்' என்ற நூலில் காணலாம்.



பிறந்து 5 மாதங்கள் கூட ஆகவில்லை —

## அவன் தவழ ஆரம்பித்து விட்டான்!

அவனுக்கு அவன் தாயார்

**டூமெக்ஸ்** பேபி புட் புகட்டுகிறாள்

என்பதைச் சொல்லவும் வேண்டுமா!

டூமெக்ஸ் பிரைவேட் லிமிடெட், வேவல் ஹவுஸ், பம்பாய்-1

# கிண்டல் செய்த சுண்டல்






பஜனை என்ற உடனே - ராமு
பலே ஜோரு என்றான்
கருணையான சுவாமி - எங்கள்
கருணாமூர்த்தி என்றான்

பள்ளி விட்ட பின்பு - ராமு
தள்ளி முந்திச் சென்றான்
பரீட்சை நாளைக் காலை - குறுக்கே
பாழாய்ப் போச்சு என்றான்.

நோட்டுப் புஸ்தகம் எடுத்தான் - ராமு
நொடிப் பொழுதில் படிக்க
கோட்டுப் பாக்கட்டில் பார்த்தான் - மணி
கொஞ்ச நேரம் என்றான்.





கொட்டு வாத்தியம் முழங்க - பஜனை
கோடி முனைக்கு வரவே
சுண்டல் தரும் நேரம் - புஸ்தகத்தை
சுருட்டி எடுத்தான் ஓட்டம்

பக்தி பஜனை என்றால் - ராமு
பரமானந்தம் என்றான்
சுண்டல் என்ற உடனே - அவன்
சுறுசுறுப்பாய் நின்றான.

கை நிறையச் சுண்டல் - பலே
காரமான சுண்டல்
பரீட்சை நோட்டு எங்கே ? - ஐயோ
பறந்து விட்டதே என்றான்.

அடுத்த நொடியில் பார்த்தால் - புஸ்தகம்
அங்கே உள்ளவர் கையில்
சுண்டல் தாங்கும் ஏடாய் - ராமுவைக்
கிண்டல் செய்ததே சுண்டல் !








# விசித்திரச் சலங்கை

கதை

வாண்டு மாமா

படம்.... பாபு

9














இமயகேது கோட்டையில் இல்லை. தேவதத்த
னின் குழலிசையில் சொக்கிப் போய்ச்
சூழ்ந்து கொண்டார்கள் காவலாளிகள்.
வேறு கோணத்திலிருந்து தன் காதலியின் வரு
கையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் கற்பகவல்லி!
பலே! பலே! என்ன இனிமையான கானம்!


அவன் ஒரு மோசக்காரன் இளவரசியை மீட்க வந்திருக்கிறான். அவனைப் பிடியுங்கள்!




தேவதத்தனைக் காக்க மணிபாலன் வருகிறான். காவல் படை வீரர்கள் பலர் மடிகின்றனர். சுதாங்கன் தப்பி விடுகிறான்.




கற்பகவல்லி, இந்தக் கவண் கல்லோடு இணைந்து வரும் மெல்லிய நூலைப் பற்றி மேலேறு. இமயகேது வருவதற்குள் தப்ப வேண்டும்.
தொடரும்

# கட்டுச்சோறு

குழந்தைகளுக்கு அன்று ஏகக் கொம்மாளம். காலை ஆறு மணிக்கே வகுப்பு அறையில் குதித்துக் கொட்டம் அடிக்கத் தொடங்கி விட்டனர். காரணம், இன்னும் அரை மணி நேரத்தில் அவர்கள் எல்லோரும் உல்லாசப் பிரயாணத்துக்குப் புறப்பட இருந்ததுதான்.

ஆறரை மணிக்குப் புறப்பட்டுப் பன்னிரண்டு மைல் தூரத்தில் இருந்த திருச்சி மலைக் கோட்டைக்கு நடந்தே போக வேண்டும், மறுநாள் மாலை திரும்பி நடந்தே வர வேண்டும் என்பது அவர்களது உபாத்தியாயர் போட்டிருந்த திட்டம். குட்டிக்கும் நாய்க்கும் குடிபோகச் சந்தோஷம் என்பது போல், குழந்தைகளுக்கு உல்லாசப் பிரயாணம் புறப்படுவதில் சந்தோஷம். உற்சாகம் பிறந்து விட்டால், நடையில் உள்ள சிரமங்களெல்லாம் எங்கே தெரியப் போகின்றன? வகுப்பு அறையை என்ன, வானத்தையே அவர்கள் அதிர வைத்துக் கொண்டிருந்தனர், தங்கள் கொம்மாளத்தினால்.

சரியாக ஆறு இருபதுக்கெல்லாம் அறைக்குள் உபாத்தியாயர் நுழையவே, அவர்களது பேச்சு மூச்செல்லாம் 'கப்சிப்' என்று அடங்கி விட்டது.

உபாத்தியாயர் வகுப்பின் ஒரு சுவர் ஓரத்தில் வைக்கப்பட்டிருந்த பொருள்களைக் காட்டி, "இதோ இந்த மூட்டை சமுக்காளம், இதோ இது போர்வை, இது தலையணை, இது வேஷ்டி, துணிமணி, இது சீப்பு, கண்ணாடி, தைலம் வகையறா. இது கட்டுச்சோறு மூட்டை. இவற்றில் அவரவர்களால் தூக்க முடிந்ததைத் தூக்கிக் கொள்ளுங்கள். கலவரமேதுமின்றி அமைதியாகச் சென்று ஒவ்வொருவரும் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மூட்டை கட்டாயம் எடுத்துக் கொண்டே நடந்தாக வேண்டும்!" என்று நிபந்தனையை விதித்தார்.

முதலில் நின்று கொண்டிருந்த ராமு சட்டென்று பாய்ந்து கட்டுச்சோறு மூட்டையைத் தூக்கிக் கொண்டான். அதைக் கண்டு மற்ற மாணவர்கள் மட்டும் இல்லை, ஆசிரியர் கூட வியந்தார். 'மிகக் கனமான மூட்டைகளில் சோற்று மூட்டைதானே முதல் ஸ்தானம் பெறும்? அசட்டு ராமு அதைப் போய்த் தூக்கிக் கொண்டானே!' என்ற எண்ணம் அவருக்கும் எழுந்தது.

சில நிமிஷங்களில் ஒவ்வொரு பையன் கையிலும் மூட்டை காட்சி அளித்தது. வண்டியில் பூட்டிய பூரணி ஜோடி போல், தரையில் கால் பாவாமல், உல்லாசப் பிரயாணம் புறப்படத் தயாராக நின்றனர்.

உபாத்தியாயர் எல்லோரையும் வரிசையாக நிறுத்திப் பிரார்த்தனை கீதம் பாட வைத்தார். பிறகு மாணவர்களை முன்னால் விட்டுத் தாம் பின்னால் நடக்கலானார். ஓரிரண்டு மைல்கள் வரை, மாணவர்களின் வாயில் ஔவையாரும், நாலடியாரும் அநாயாசமாகத் தாண்டவமாடினர்.

ராமு மற்றப் பையன்களைக் காட்டிலும், சுமை அதிகமாக இருந்ததால், சற்றுச் சிரமப்பட்டே நடந்



தான். பையன்களுக்கு அவனைப் பரிகசிக்க வேண்டும் என்று ஆசை.

" 'ராமன்', 'ராமு' என்று பெயர் வைத்தாலே, அவர்கள் வெறும் சாப்பாட்டு ராமன்களாகத்தான் இருப்பார்கள் போலிருக்கிறது!" என்றான் ஒரு பையன்.

" ஆமாம். இல்லாவிட்டால், ஒரே ஓட்டமாக முதலில் ஓடி, ஒருவன் கட்டுச்சோறு மூட்டையைத் தூக்கிக் கொள்வானா? சாப்பாட்டு ராமன் என்று சொல்வதைக் காட்டிலும் அசட்டுராமன் என்று சொல்வது தான் மிகவும் பொருத்தம்!" என்றான் இன்னொரு பையன்.

சிறிது நேரத்துக்கு முன்னால் 'வாக்குண்டாம், நல்ல மனமுண்டாம்' சொன்ன வாய்கள் இப்பொழுது 'சாப்பாட்டு ராமு, அசட்டு ராமு!' என்று நாமஸ்மரணை செய்யலாயின. ராமு இவ்வளவு கேலிகளையும் முறுவலுடன் ஏற்றுக் கொண்டானே யொழிய வாய்திறந்து பேசவில்லை. தாழக்குடி வந்து சேரவும், நடையின் களைப்பும் பசியும் அதிகரிக்கவும் சரியாக இருந்தது.

அத்தனை கேலி செய்த பையன்களுக்கு அப்பொழுது ராமுவின் தயவுதான் தேவையாக இருந்தது. தன்னைப் பரிகாசம் செய்தார்களே என்பதற்காக ராமு அவர்களைப் பழி வாங்கி அழவைக்க விரும்பவில்லை.

குளக்கரைக்கு அழைத்துச் சென்று கட்டுச்சோறு மூட்டையை அவிழ்த்தான்.

எல்லோரும் வயிறார மனமார உண்டனர்; சிறிது சிரம பரிகாரம் செய்து கொண்டபின் மீண்டும் பயணம் தொடர்ந்தது. ராமுவும் பழையபடியே கட்டுச்சோறு மூட்டையைத் தூக்கிக் கொண்டான். கனமயில் பாதி குறைந்துவிடவே, அவனுக்கு முன்போல் சிரமம் தோன்றவில்லை. விசையாக நடந்தான்.

குறும்புக்காரப் பையன்களுக்குக் கேலி செய்யும் பண்பு அப்பொழுதும் போகவில்லை. 'சோற்று மூட்டை, கட்டுச் சோறு' என்று வாயில் வந்தபடியெல்லாம் அவனைப் பரிகாசம் செய்தவாறேதான் நடந்தனர்.

மணி பதினொன்றரை அடிக்கவும், காவேரிக்கரை வரவும் சரியாக இருந்தது. உபாத்தியாயர் எல்லோரையும் சிந்தாமணிப் படித்துறைக்கு அழைத்துச் சென்று குளிக்கச் சொன்னார்.

குளித்து முடிந்து கரையேறிய மாணவர்களை மீண்டும் பசி பிடித்துக் கொண்டது. "இங்கேயே சாப்பிட்டுவிட்டுப் போகலாமே, சார்!" என்றான் ஒரு பையன்.

" பசித்தால் சாப்பிடுங்கள். எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை!" என்று உபாத்தியாயர் சம்மதம் தெரிவித்துவிடவே, கட்டுச் சோறு மூட்டை அவிழ்க்கப்பட்டது. காவேரிக் கரையிலேயே சோற்று மூட்டை முழுவதும் கரைந்து விட்டது.

கட்டுச் சோறு கொண்டு வந்திருந்த துணியைத் துவைத்து எடுத்துக் கொண்டான் ராமு. கையில் கனமே இல்லை. மற்றப் பையன்கள் தங்கள் தங்கள் மூட்டையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டார்கள்.



மலைவாசலுக்கு வந்து படியேறி மண்டபத்தை அடைந்தார்கள். பன்னிரண்டு மைல் நடந்து வருவதென்றால், பச்சிளம் பாலகர்களுக்குச் சாத்தியமா? அதுவும் வெறுங் கையை வீசிக் கொண்டா வந்தார்கள்? ஒவ்வொருவர் கையிலும் தான் ஏதாவது ஒரு மூட்டை இருந்ததே! உள்ளத்திலே ஊற்றெடுத்துப் பெருகிக் கொண்டிருந்த உற்சாகம், அவர்களை முடுக்கி, இயக்கி இவ்வளவு தூரம் கொண்டு வந்து சேர்த்ததே யொழிய, அவர்களது தேக பலம் அல்லவே! எனவே, குழந்தைகளின் அசதியை அறிந்த உபாத்தியாயர், "நான்கு மணி வரை இளைப்பாறி விட்டு உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குப் போகலாம்!" என்று சொன்னார்.

மணி மூன்றரை அடித்ததும், உபாத்தியாயர் முன் கூட்டியே ஏற்பாடு செய்து வைத்திருந்த சிற்றுண்டி வந்து சேர்ந்தது. எல்லோரும் சாப்பிட்டு விட்டு, மணி நான்கு அடிப்பதை எதிர்பார்த்திருந்தார்கள்.

"அவர் அவர் மூட்டையைத் தூக்கிக் கொள்ளுங்கள்!" என்று உபாத்தியாயர் உத்தரவு போடவே, பையன்கள் மூட்டையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டார்கள். ராமு மட்டும் கையை வீசிக் கொண்டு 'ஜாம்'யாக நடந்தான். மற்றவர்களைப் பார்த்துப் புன்முறுவல் செய்தான். படியேறும் பொழுது மூட்டையைத் தூக்கிக் கொண்டு நடப்பதில் உள்ள சிரமம் அவர்களுக்குத் தெளிவாகப் புலனாயிற்று. ராமுவின் கெட்டிக்காரத்தனமும் வெளியாகியது. ராமுவின் சாமர்த்தியத்தை உணர்ந்த உபாத்தியாயரும், "நீதாண்டா சமர்த்து! சிரமத்தைக் குறைத்துக் கொள்ளும் வழியை உன்னிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும்!" என்று பாராட்டி ராமுவின் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

உல்லாசப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்த ராமுவின் இந்தச் செய்கையை அறிந்த பாரேதிப் பாட்டியின் கண்களில் ஆனந்தபாஷ்பம் குமிழியிட்டது. "எத்தனை பெரிய பாவ மூட்டையைச் சுமந்துகொண்டு நாம் இந்த உலகத்தில் பிறக்கிறோமோ, தெரியவில்லை. ராமு கட்டுச் சோறு மூட்டையைக் கரைத்துவிட்டு, இலேசாக்கிக் கொண்டு பிள்ளையாரைத் தரிசிக்கப் போனதுபோல இந்தப் பூவுலகத்தில் பிறவியெடுத்த நாமும் நமது பாப மூட்டையைக் கரைத்துக் கொள்ள வேண்டும்!" என்று சொல்லிக் கொண்டாள். தன் பேரனுக்குத் திருஷ்டிப்பட்டுவிடாமல் இருக்கவேண்டுமே என்பதற்காகத் தனது இரண்டு கைகளினாலும் அவனது கன்னத்தை அன்புடனும் ஆசையுடனும் தடவிக் கொடுத்துத் திருஷ்டி கழித்தாள்.




# ஒரே ரத்தம்

சசிதேவி

"ஏன் நிற்கின்றாய்? நேரமாகி விட்டதே. போக வேண்டாமா? மழை வரும் போல் இருக்கிறதே!" என்னும் சுரேஷின் குரல் என்னை விழிப்படையச் செய்தது. நாகதாளி வேரைக் கண்ட நாக சர்ப்பம் போல் தலையைத் தொங்க விட்டபடி நடந்தேன். என் மனத்தில் பொறாமைத் தீ எரிந்து கொண்டிருந்தது. கோரமான எண்ணங்கள் என் மூளையில் உதயமாகிக் கொண்டிருந்தன.

வேட்டையிலிருந்து திரும்பிக்கொண்டிருந்தோம். "ஏன் அண்ணா! தலையை வலிக்கிறதா என்ன?" என்று கேட்டான் சுரேஷ். அவன் கேள்வி எனக்கு விஷமாக இருந்தது. தலையையா வலிக்கின்றது? எனக்கா! இதயமல்லவோ வலிக்கின்றது! அதற்கு மருந்து உண்டோ? உண்டு! ஆனால் கிட்டுமா? இது என்ன கேள்வி?......

வானத்தின் கீழ்க்கோடியிலிருந்து மேலக் கோடிக்குப் பாய்ந்து சென்றது மின்னல். இடியோசை காதைத் துளைத்தது. அதை விட மிகவும் பயங்கரமாக என் நெஞ்சம் குமுறிக் கொண்டிருந்தது.

சுரேஷும் நானும் இரட்டைச் சகோதரர்கள். மிகவும் ஒற்றுமை மிகுந்தவர்கள். ஒருவரை விட்டு ஒருவர் வினாடி கூடப் பிரிய மாட்டோம். ராம லக்ஷ்மணர்கள் என்று எல்லோரும் எங்களைக் குறிப்பிடுவதுண்டு. ஈருடலும் ஓருயிருமாக இருந்த எங்களின் நடுவில் அந்தப் பிணைப்பை, சகோதர பாசமென்னும் கயிற்றை அறுத்து எறியவே வந்து சேர்ந்தாள் யசோதரா!

லாகூரிலிருந்த பெரிய வியாபாரியான யசோதராவின் தந்தை தம்முடைய சொத்துக்களையெல்லாம் பறி கொடுத்துவிட்டு மனைவி, மகளுடன் ஓடி வந்தவர். தாய் தந்தையரையும் கடைசியில் இழந்து, அகதியாக ஊர்க் கோடி மண்டபத்தில் தவித்துக் கொண்டிருந்த யசோதராவை எங்கள் தகப்பனார் அழைத்து வந்து தம் வீட்டில் அடைக்கலம் கொடுத்து ஆதரித்து வந்தார். கொஞ்சம் கொஞ்சமாக எங்கள் பெற்றோரின் அன்பை அபகரித்துக் கொண்ட யசோதரா இப்பொழுது எங்கள் இருவருடைய உள்ளங்களையுமே ஆளப் பார்க்கின்றாள்!

நாங்கள் பதினைந்து வயது வரையில் எங்கள் பெற்றோர்களுடன் தான் இருந்தோம். எங்கள் தந்தை மிகவும் கண்டிப்பானவர். குழந்தைகள் பெற்றோரை விட்டுத் தொலைவில் வளர்ந்தால்தான் தைரியமும், பொறுப்பும் ஏற்படும் என்னும் கொள்கை உடையவர். அப்படிப்பட்ட குணம் படைத்த கணவரிடம் எங்கள் தாயாரின் பாசமும், விருப்பமும் நிறைவேறவில்லை. அதன் பயனாகவே நானும் சுரேஷும் பதினைந்து வயதிலேயே டேராடூனுக்குக் கல்வி பயிலவும், கூடவே ராணுவப் பயிற்சி பெறவும் எங்கள் தந்தையால் அனுப்பப்பட்டோம்.

எங்கள் தந்தை காட்டு இலாகா அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். ஆகையால் நாங்கள் இருவரும் சின்ன வயது முதற்கொண்டே காட்டுப் பிரதேசங்களில் வளர்ந்து பழகியவர்கள். விடுமுறைக்கு வரும்பொழு

விஜயா

தெல்லாம் வேட்டையாடுவதும், பறவை களைச் சுடுவதும், மீன் பிடிப்பதும் எங்கள் பொழுதுபோக்கு.

அப்பா வேலையினின்றும் ஓய்வு பெற்ற பின் இங்கு—தேக்கடியில் வசித்து வந்தார். எங்கள் படிப்பு முடிந்து நானும் சுரேஷும் இங்கு வந்து நான்கு மாதங்களாயின.

வரும் பொழுது அப்பா எங்களை வீட்டு வாச லில் வரவேற்றார். அவருக்குப் பின்புறம் யார்? யசோவா? ஏ அப்பா! இயற்கைக்கு இவ்வளவு திறமை உண்டா? என்ன விந்தையான இனிய மாறுதல்! இரண்டு வருஷங்களுக்கு முன்பு நான் பார்த்த அதே யசோதராவா இவள்!

இரவு என் அறையில் படுத்திருந்தபோது படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன். வெப்பம் தாங்கவில்லை. ஜன்னலைத் திறந் தேன். அதன் வழியாகத் தெரிந்தது முழு நிலவா? அல்லது யசோதராவின் முகமா? படுக்கை கொள்ளாமல் எழுந்து உட்கார்ந் தேன். மனம் இனிய கற்பனைகளில் இறங்கி இன்பம் காண ஆரம்பித்தது. இதே வீட்டில் அவளும் இருக்கிறாள். இதே நிலவை அவளும் பார்ப்பாள்! இதே காற்று அவள்மீதும் வீசும். இத்தகைய எண்ணங்களே இனிப்பாக இருந்தன. என் நினைவின் அலைகள்!...




என் நினைவின் அலைகள் அவருடைய இருதயக் கரையினில் சென்று மோதுமோ? இல்லை, பாதியிலேயே பயனற்று நின்று விடுமோ? ஒருவேளை அவர்...ஆனால் ஏன் என்னை விழுங்கி விடுப வர் போலப் பார்க்க வேண்டும்?...

இம்மாதிரியான கேள்விகளும், பதில் களுமாக என் பேதையுள்ளத் தில் சமுத்திரம் போல் அலை அலையாகப் பொங்கியது.

மாமி அடிக்கடி சொல்லுவாள்: மூத்தவர் சேகருக்குத் தந்தையின் குணமும், சின்னவர் சுரேஷுக்குத் தன் குணமும் படிந்து விட்டன என்று. அது எவ்வளவு உண்மை! இருவருக் கும் நான் சாப்பாடு போடுகிறேன், தேநீர் தயாரித்துக் கொடுக்கிறேன். இன்னும் நெருங்கிப் பழகி எல்லா வேலைகளும் செய் கிறேன்! ஆனால் ஒருவருக்குச் செய்யும் பொழுது கடமை கலந்த உணர்ச்சியால் செய் கிறேன். மற்றவருக்கு அதே வேலையைச் செய்யும்போது மட்டும் என் மனம் எக்காள மிடுகிறதே? ஏன்!

சேகரும், சுரேஷும் என்னை அன்போடு ஒரே விதமாகத்தான் "யசோ!" என்று கூப்பிடுகிறார்கள். ஆனால் முன்னவரின் குரலில் ஒலிக்காத ஒரு ஸ்நாதம், பின்னவரின் குரலில் கேட்பது ஏன்?...புரிந்து விட்டது!...பிரேமை இவ்வளவு மதுரமானதா?...எட்டாத கனிக்கு முட்டாள் மனம் கொட்டாவி விடுகிறது. ஏன் எட்டாது? அன்று வன போஜனத்தின் போது சுரேஷிடம் நான் அதிகப் பரிவு காட்டு வதைச் சேகர் கவனித்திருக்கவேண்டும். இல்லாவிடில் பத்து தினங்களாக இவ்வளவு கடுகடுப்பாக அவர் இருப்பானேன்?

இன்று பகல் இருவரும் பெரியாறு ஏரிக்கு வேட்டைக்குப் போய்த் திரும்பிய பொழுது சேகரின் முகம் ஏன் அவ்வளவு பயங்கர மாக இருந்தது? சகோதரர்களுக்

ருன் வாக்குவாதம் நடந்திருக்க வேண்டும்! ......என் பொருட்டாக இல்லாதிருக்க வேண்டுமே! கடவுளே...!

சேகரும் சுரேஷும் உடை மாற்றிக் கொண்டு வந்தார்கள். சேகர் சாப்பிட வந்து உட்கார்ந்தார். உணவு படைத்தேன். சுரேஷ் இரண்டு மாதங்களுக்கு முன் காட்டிலிருந்து தாம் பிடித்து வந்து வளர்த்து வரும் வேங்கைக் குட்டிக்குப் பால் வார்த்துக் கொண்டிருந்தார். ஆகாரம் உட்கொள்ளும் இரண்டு ஜீவன்களுக்கும், (சேகருக்கும் புலிக் குட்டிக்கும்) மனமும், எண்ணமும், பார்வையும் ஒரே மாதிரியாக இருப்பதாக எனக்குத் தோன்றியது. ஆனால் இருவருக்கும் ஒரே வித்தியாசம்!...ஒன்று நாட்டில் வளர்ந்தது. மற்றொன்று அடர்ந்த காட்டில் வளர்ந்தது. அவ்வளவுதான்!




காட்டில் வளர்ந்த பிராணி அல்லவா? அதனால்தான் இன்னும் சரியாகப் பழக வில்லை! எப்படியாவது இந்த வேங்கைக் குட்டியை நாயைப் போல் பழக்கி விட வேண்டும்.... வைத்த பாலைக் குடிக்காமல் என்னைக்கொடூரமாகப் பார்க்கிறதே! ஏன்?..

அது சரி. அண்ணா ஏன் இன்று என்னிடம் இவ்வளவு கடுமையாக நடந்து கொண்டான்? இத்தனை வருஷங்களாக என்னிடம் ஒருமுறை கூடக் கோபித்துக் கொள்ளாதவன் பத்து நாட்களாக ஏன் இப்படி மாறிவிட்டான்?

அன்று வனபோஜனத்துக்கு க்ருஸோ தீவுக்குப் போனோம். மோட்டார்ப் படகில் ஏறும் பொழுதும், இறங்கும் பொழுதும் அண்ணா ஏன் என்னையும் யசோவையும் அப்படி முறைத்தான்? எதற்கு? யசோவுக்கு நான் கை கொடுத்து உதவியதற்காகவா?

இந்த யசோவால் எங்கள் ஒற்றுமையே கெட்டு விடும்போல் இருக்கிறது. ஒன்று - அண்ணாவின் மனைவியாக அவள் இருந்தால் நான் மரியாதையாக நடந்து கொண்டு விடுவேன். அல்லது என்னை மணந்தவளாக இருந்தாலும் அவனும் அன்புடன் விலகி

விடுவரன். இரண்டும் இல்லாமல், இருவருக்கும் சொந்தமற்ற இவளை இருவருமே விரும்புகிறோம்! இல்லாவிட்டால்......




இல்லா விட்டால் யசோ ஒரு வாரமாக என்னை இத்தனை அலட்சியம் செய்வாளா? என்னைவிடச் சுரேஷிடம் என்ன மேன்மையைக் கண்டு விட்டாள்? அவள் என்னை விரும்பவில்லை என்று தெரிந்தும் ஏன் என் மனம் அவளை வட்டமிடவேண்டும்? மாமாவின் பெண் மாலதியை என் மனைவியாக என்னால் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லையே! பெரியவர்கள் என்னவோ அவளை எனக்கு நிச்சயித்து விட்டார்கள். இந்தப் பாவி சுரேஷ் உள்ளவரையில் யசோ என்னைத் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாள். அவன் இல்லாவிட்டால் ....... இல்லாமல் செய்து விட்டால்... இத்தனை பயங்கரமான பேய்த்தனம் நிறைந்த எண்ணம்கூட என் அசுர மனத்துக்கு இதமாகத்தானே இருக்கிறது!

அன்று நானும் சுரேஷும் ஏரியில் படகில் போகும்பொழுது ஒரு பகுதியைத் தாண்டி ஒரு யானை மந்தை போயிற்று. அதன் அருகில் படகைச் செலுத்தினேன். வேண்டுமென்றே சுரேஷை ஒரு கழியைக் கொண்டு ஒரு பெண் யானையைச் சீண்டிவிடச் செய்தேன்!... ஏ அப்பா! அதன் கோபத்தையும், பிளிறலையும் கண்டு 'சரி! இன்று சுரேஷ் தொலைந்தான்!' என்று என் மனம் குதித்தது. கண்கள் தாமாகவே மூடிக் கொண்டு விட்டன.

"கண்களைத் திற, அண்ணா! யானை ஓடி விட்டது!" என்ற சுரேஷின் குரல் என் காதுகளில் நாராசமாகப் பாய்ந்தது. "என் காமிராவை எடுத்தேன், அண்ணா! என்னவோ என்று அந்தக் காட்டு யானை பயந்து ஓடி விட்டது......" என்று கூறி இடியிடியென்று சிரித்தான் சுரேஷ். என்ன சிரிப்பு! ஒரு ரஸமான வாய்ப்பு தவறிவிட்டது! என்மேல் பழியின்றியே நான் சுரேஷைப் பழி தீர்த்துக் கொள்வதற்கான ஒரு அரிய தருணம் தப்பி விட்டது! யானை அவனைத் தீர்த்துக் கட்டியிருந்தால் எனக்கு ஒரு யானை பலம் வந்தது போல் இருந்திருக்கும்!

பால் ருசி கண்ட கடுவனைப்போல் சுரேஷை ஒழிப்பதற்கு வேண்டிய சூழ்ச்சிகளையும், சந்தர்ப்பங்களையுமே எண்ணி எண்ணிப் பித்துப் பிடிக்கும் நிலையை அடைந்து விட்டேன்.

அப்பாவும், அம்மாவும் ஏன் இப்படி அவசரப்படுகிறார்கள்? மாமாவுக்கு உடனே பதில் எழுதாவிட்டால் என்ன குற்றமாம்? பத்து நாட்கள் கழித்துப் பதில் சொல்லுவதாகச் சொல்லியிருக்கிறேன். பத்து நாளென்ன? பத்து யுகங்களே கூட ஆனாலும் பாழும் மனம் யசோவை மறந்து வேறு ஒரு பெண்ணை நினைக்க ஒப்பாது போலிருக்கிறதே! மனம் என்ன இரும்பா, சூடு காட்டினால் நம் இஷ்டப்படி தோன்றியவாறு வளைக்க!

நீம் இஷ்டப்படி தோன்றியவாறு வளைக்கவும், மாற்றவும் மனம் குயவன் கை மண்ணா, என்ன?




என் பிரேம தேவனின் இதயக் கதவை முழு பலம் கொண்டு தட்டினேன்! அன்புப் பிச்சை கேட்டேன்!

"அண்ணா உன்மேல் கொள்ளை ஆசை வைத்திருக்கிறான், யசோ! என்னை மறந்து விட்டு அவனை விரும்பு!" என்கிறார் என் இன்ப மூர்த்தி. என்ன சோதனை? இப்படியும் உண்டோ? தெய்வத்துக்கென்று சமைத்த நைவேத்தியத்தைச் சாதாரண மனிதருக்கு இடுவது நேர்மையா?

இவர்களுடைய சகோதர பாசம் என்னால் முறிய வேண்டுமென்று விதித்திருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? மனம் விரும்பும் ஒருவர் மீது அன்பு செலுத்துவது குற்றமா? சுரேஷ் இல்லாமல் வாழ்வு ஏது?

இணையற்ற செல்வம் மிகுந்த இக் குடும்பத்துக்கு முதல் மருமகளாக வருவதற்கு, பாக்கியவதி மாலதி பிறந்திருக்கிறாள் — அவளுக்கு என்ன குறை? சேகருக்கு ஏன் பிடிவாதம்?

நாலு நாட்களாகச் சேகர் எப்பொழுது பார்த்தாலும் யோசனையிலேயே மூழ்கியிருக்கிறார். எனக்கு அவரைப் பார்க்கவே பயமாக இருக்கிறது. இது போதாதென்று அந்த வேங்கைப் புலியை வேறு வீட்டில் கொண்டு வந்து வைத்துக் கொண்டு விளையாடுகிறார் சுரேஷ். துஷ்ட மிருகங்களுடன் விளையாடலாமா? என்னதான் பழக்கினாலும் அவைகளின் குணம் போகுமா? அதன் கூண்டிடம் போகவே என் உடம்பு நடுங்குகிறது. மனம் நிம்மதி இழந்து ஒரு மாதமாகி விட்டது. மாமாவுக்கும், மாமிக்கும் எப்படியோ இந்தப் பிள்ளைகளின் முரட்டுத்தனம் பிடித்திருக்கிறதே! பெரியவர்கள் சொல்லித் தடுக்கக் கூடாதோ? புலியைப் பழக்கச் சாட்டைக் கழி செய்ய மரத்திலேறிக் கீழே விழுந்தார் சுரேஷ்! காலில் நல்ல அடி. ரத்தம் கொட்டிவிட்டது! அத்துடன் கூடவே அந்தப் புலியுடன் விளையாடுகிறார். அந்தப் பழிகாரப் புலி அவரது காலை நக்கிக் கொடுப்பதைப் பார்த்து விட்டேன்! அப்பா! என்னால் சகிக்க முடியவில்லை! சேகர் மட்டும் அதை ரசித்துக் கொண்டு கல்லைப்போல் உட்கார்ந்திருந்தார்! என் மனம் பட்ட பாடு...என்ன வேதனை...




வேதனை தாங்க முடியவில்லை. வலியுயிர் போகிறது! காலில் பட்ட அடியின் ரணம் இன்னும் ஆறவில்லை. நாலு நாட்களாக வெளியில் போக முடியவில்லை. பாவம், யசோதரா என் பக்கத்தை விட்டு நகராமல் எவ்வளவு அன்புடன் பணி

விடை செய்கிறான்! அன்று நான் கீழே விழுந்ததும் எப்படி நடுங்கி விட்டான்!

அண்ணாவுக்கும் பாவம் மனம் சரியாக இல்லை. எங்கோ சுற்றிவிட்டு வெகு நேரம் கழித்து வீட்டுக்கு வருகிறான். என் காலைச் சுத்தம் செய்து கட்டுவதுடன் ''ராஜாவை''க் கவனிக்கும் வேலையையும் அவனே ஏற்றுக் கொண்டு செய்து வருகிறான்.

யசோதான் சொன்னாளே, எனக்கு அடிபட்ட நாள்முதல் ''ராஜா'' ஆகாரமே தொடாமல் இருக்கிறதாம்! என்னுடன் பழகி விட்டதல்லவா! யசோவைப் போல் அந்தப் புலிக் குட்டியும் தவிக்கிறது!




தவிக்கிறது! ஆமாம். ''ராஜா'' ஒரு வாரமாக ஆகாரம் சாப்பிடுவதில்லை. அன்று சுரேஷ் கீழே விழுந்து அடிபட்டவுடன் அவன் காலை நக்கியதிலிருந்து ராஜாவுக்கு மனித ரத்தத்தின் வாடையிலும், ருசியிலும் பழக்கம் ஏற்பட்டு விட்டது போலும். அதிலிருந்து பாலும் பழமும் அதற்குப் பிடிக்கவில்லை! கண்களை உருட்டிப்பார்த்து மோப்பம் பிடிக்கிறது! ஏன்! இதைக் கொண்டே என் வேலையை முடித்துக் கொண்டு விட்டால் என்ன? என்றைக்கு மனித மாமிசத்தின் ருசியைத் தெரிந்து கொள்ள ஆரம்பித்ததோ, அன்றைக்கே அதற்குத் தன் சுபாவம் தலை தூக்கி விட்டது. அது நாலு நாட்களாகத் தண்ணீர் கூடக் குடிக்கவில்லை. நானும் வேண்டுமென்றே அதன் பசியையும் தாகத்தையும் அதிகப்படுத்தி வந்தேன். அதன் வேட்கையும், கோபமும் உச்ச நிலையில் இருக்கின்றன.

அம்மாவும், அப்பாவும் மதுரைக்கு ஒரு கல்யாணத்துக்காகப் போயிருக்கிறார்கள். திரும்ப இரண்டு நாட்கள் ஆகும்.

இன்று இரவு வேலைக்காரர்கள் வீட்டுக்குப் போய் விடுவார்கள். யசோதராவும் மாடிக்குப் போய்ப் படுத்து விடுவாள். நானும் சுரேஷும்தான் கீழ்க் கட்டில் இருப்போம். ராஜா கூண்டில் உறுமிக் கொண்டிருக்கும்.

சுரேஷுக்கு வலி தெரியாமல் தூங்க மருந்து கொடுத்துவிட வேண்டும். நன்றாகத் தூங்கி விடுவான். பிறகு கையில் துப்பாக்கியுடன் கூண்டின் மேல் ஏறிக் கொண்டு ராஜாவைத் திறந்து விட்டால்...நேராகச் சுரேஷின் மேல் தான் பாயும்....அவனால் ஓட முடியாது...பிறகு ராஜாவைச் சுட்டுவிடலாம்...என்ன கொடூரச் செயல்! சே! யாருடையது? ராஜாவுடையதல்லவா? என்ன பயங்கரம்! பேசாமல் இருந்து விடட்டுமா? நடப்பது நடக்கட்டுமே! ஆனால், யசோ? அவளை எப்படி அடைவது? கொலைகாரனுக்குக் கோழை நெஞ்சு ஆகுமா? கடவுளாகவே இவ்வளவு சாதகமான சூழ்நிலையை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார்! என்ன தயக்கம்? வழியில்லை. யசோதரா! உனக்காகவே, உன்னை அடையவே, எவ்வளவு பெரிய பாவத்தையும் செய்வேன்! நிச்சயம்...




நிச்சயம். இதில் எள்ளளவும் சந்தேகமே இல்லை. சேகருடைய துராசை தான் இந்தச் சோக நாடகத்துக்குக் காரணம்.

ஐயோ! கடைசியில் அவரே தான் ஒப்புக் கொண்டு விட்டாரே! அம்மம்மா......கடைசி வேளையில் அவர் பட்ட பாடு! நினைத்தாலும் உடம்பு சிலிர்க்கிறது. ''உனக்காகவே செய்தேன் யசோ'' என்றார். இரு சகோதரர்களின் அன்பைத் துண்டித்த பாவியா நான்? எத்தனை நாட்களாக யோசித்து இந்தக் கொடிய திட்டத்தைக் கையாண்டாரோ?

தம் மூச்சைப் பிடித்துக் கொண்டு கஷ்டத்துடன் சொன்னார்: ''ஒரு வாரமாக நான் வேண்டுமென்றே சுரேஷின் ரத்தத்தைத் துடைத்த துணிகளை யெல்லாம் அதன் கூண்டின் பக்கத்தில் போட்டு வைத்தேன். அதன் மூலம் பட்டினியுடன் கிடந்த ராஜாவுக்குச் சுரேஷின் ரத்தத்தில் ஒரு ஆவலைத் தூண்டி விட்டேன். அதற்காகவே ஒரு வாரமாக மிகவும் கனிவுடன் அவனுக்குக் கட்டு கட்டினேன் யசோ!.... ஒருவரும் இல்லாத இரவு வேளையில் மயங்கித் தூங்கும் என் அன்புத் தம்பியின்மேல் கொடிய புலியை ஏவி விட்டுவிட நினைத்து, கூண்டைத் திறந்தேன்...கேள் யசோ...ஏன் முகத்தைச் சுளித்துக் கொள்ளுகிறாய்? உனக்காகவே யசோ!....கேள்! ஒரு வாரமாகத் திறக்காமலே இருந்ததால் கூண்டின் கதவு கொஞ்சம் சிரமம் கொடுத்தது. தெட்டித் தள்ளினேன். கையில் அடிபட்டு ரத்தம் கொட்ட ஆரம்பித்தது. அதைக் கண்ட ராஜாவுக்கு வெறி மீறிவிட்டது. தெய்வசித்தம்! பாதி திறந்த கதவின் மூலம் ராஜா முட்டித் தள்ளிக் கொண்டு என்மேல் பாய்ந்து விட்டது. துப்பாக்கியை அதன் முன் நீட்டிச் சுட்டேன்... அது காலியாக இருந்தது. என்னை மீறிக் கத்தினேன். என் குரலைக் கேட்டு, சுரேஷ் விழித்துக் கொண்டான். தன் துப்பாக்கியால் ராஜாவைச் சுட்டான்.... ஆனால் பலன்! அது தன் ஆவலைத் தீர்த்துக் கொண்ட பிறகுதான் இறந்து விழுந்தது.... என் எண்ணம் என்னைத் தீர்த்து விட்டது. 'எங்கள் இருவரில் உன்னை யார் அடைந்தால் என்ன' என்னும் விவேகம் இல்லாமல் பேதபுத்தியுடன் நடந்து கொண்டேன். ஆனால் எங்களிருவரில்...எங்கள் இருவரின் ரத்தத்திலும் பேதமில்லை! அது ஒன்றுதான் என்பதை அந்தக் கொடிய மிருகம் உணர்த்தி விட்டது. அதன் புத்திகூட எனக்கு இல்லாமல் போய் விட்டது. என்னை மன்னித்து விடுங்கள்.'' இப்படி சொல்லிக் கொண்டே இறைஞ்சினார். அவர் உயிர் பிரிந்து விட்டது.

சேகர் தம் துப்பாக்கி காலியாக இருந்தது என்று சொன்னாரே, அதற்குக் காரணம் நான்தான். துடைத்துச் சுத்தம் செய்து வைத்தவள் அதை மறுபடியும் கெட்டித்து வைக்க மறந்து விட்டேன் என்பது இப்பொழுதுதான் நினைவுக்கு வருகிறது.

# அவன் நிகரற்று விளங்குகிறான்!

அவன்போன்ற வேறொரு ஆரோக்கியமான குழந்தை கிடையாது என்று எண்ணி மார்தட்டும் பெற்றோர்களை மன்னிக்கத்தான் வேண்டும்! உண்மையும் அதுவே. க்ளாக்ஸோவில் வளரும் குழந்தைகள் யாவரும், ஆரோக்கியம், குதூகலம் மற்றும் வலுத்த, அழகிய தோற்றத்துடன் விளங்கும இணையற்ற செல்வங்களாகும். ஏனெனில் க்ளாக்ஸோவில் தாய்ப்பாலின் சிறந்த குணங்கள் சேர்த்துள்ளன.

**Glaxo**

க்ளாக்ஸோ குழந்தைகளுக்குச்
சிறந்த பால் உணவு

க்ளாக்ஸோ பேபி புக் இலவசமாக வேண்டுவோர், "க்ளாக்ஸோ", டபால் ரோடு மதராஸ் 1, என்ற விலாசத்திற்கு (தபால் செலவிற்காக) 50 நயா பைசா ஸ்டாம்புகள் அனுப்பவும்.

ளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புது டில்லி

அண்ணையில் கேட்ட சிம்மகர்ஜனையின் ஒலி இன்னும் காதை விட்டு அகலவில்லை. மர நிழலில் புல் தரையின்மேல் அமர்ந்திருந்த விநாயகம் கைக்குட்டை முடிச்சை அவிழ்த்துத் தன் முன் வைத்துக் கொண்டான். பழுப்பும் மஞ்சளுமாக வேர்க்கடலையும் பட்டாணியும் கலந்து கிடந்தன. எதையும் நீக்காமல் எல்லாவற்றையும் நிலைத்துக் கொண்டு, ஒரு இயந்திரம்போல் கைக்குட்டைக்கும் வாய்க்கும் அவன் கை மேல் கீழாகச் செல்ல, அவன் தன் பொழுதைப் போக்கலானான்.

அன்று முதல் தேதி.

திடீரென்று தோன்றிய நினைவிலேயே கை கடலையை விட்டு, ஜிராய்ப் பையைத் தேடியது. நல்ல வேளை. பணம் பத்திரமாக இருந்தது. அது அவன் வாங்காத ஐந்தாவது சம்பளம். அந்த நிலைவே ஒரு கணத்தில் வெறுப்பையும் சஞ்சலத்தையும் கொண்டுவந்தது. அவன் மிருகக் காட்சிச்சாலையை விட்டு வந்தபோது, வழக்கமாக அவனைக் கண்டு தெரிந்தவனைப் போலப் புன்முறுவலிக்கும் காவலாளி ''என்னங்க, மணி மூணுதானே ஆகிறது?'' என்று கேட்டான்.

''ஆமாம்...வேலை இருக்கிறது!''

''உங்களுக்கா?''

அவன் கேட்ட தொனியே விநாயகத்தை அறுத்தது. 'தினம் தினம் மரத்தடியிலே உட்கார்ந்து உட்கார்ந்து பொழுதை விரட்டும் உனக்கு வேறு வேலையும் இருக்கிறதா?' என்று அவன் கேட்காமல் கேட்கிறானா?

''ஆமாம்!'' விநாயகத்துக்குக் கோபத்தைக் காட்டிலும் விரக்தியும் வெறுப்பும்தான் அதிகமாக உண்டாயின.

சென்ட்ரல் ஸ்டேஷனில் பஸ் ஏறும்போது மூன்றேகால் மணி. பதினாறு நயா பைசாவைக் கொடுத்து விட்டு அவன் தன்னுள் மூழ்கலானான். இடையிடையே பஸ்ஸின் சத்தமும், பிரயாணிகளின் இரைச்சலும் இந்த உலகத்துக்கே அவனை இழுத்தாலும், விநாயகம் என்னவோ அதை ஒப்புக்கொள்ள மறுத்தவன் மாதிரியே இருந்தான்.

மயிலாப்பூர் லஸ் முனையை அடைந்தபோது மணி மூன்றேமுக்கால். பஸ்ஸை விட்டு இறங்கியவுடனேயே, அவன் தன்னை-அதாவது மனத்தை-, சரி செய்து கொண்டான். அவன் மனம்தான் கடந்த சில மாதங்களாக மெழுகாக மாறி விட்டதே, இஷ்டம் போலப் பிசைந்து இஷ்டமான உருவத்தை உண்டாக்க?

வீட்டை நோக்கி அவன் நடந்த நடையே அலாதி நடை. காரியாலயத்தை விட்டுச் செல்லும் இளைஞன், தன் இளம் மனைவியைக் காணத் துடிக்கும் நடையில் மனம் துள்ளாமலா இருக்கும்?

விநாயகம் தன் அறையில் உட்கார்ந்து, 'சம்பளத்தை' எண்ணினான்; பதினைந்து பத்து ரூபாய் நோட்டுகள் இருந்தன.

இதுமாதிரி எத்தனை நாள் அவளை ஏமாற்றுவது? எத்தனை நாளைக்குத் தான் இப்படி ஏமாற்ற முடியும்?

அவன் செய்துவரும் காரியம் கண்டு பிடிக்கப்பட்டால் என்னென்ன விபரீதங்கள் நிகழும்? பரிமளம் அவன் மீது கடல் அலைகள் போல் வாரி இறைக்கும் ஆசை அலங்கோலமாகப் போய் விடுமா? அவன் கொண்டுள்ள காதல் கனவு அவனுடைய உண்மையான நடத்தையில் நீர் அற்று வற்றிவிடுமா?

# பிரச்னை தீர்ந்தது

பி.வி.ஆர்



பாங்கியில் இன்னும் மூந்நூறு ரூபாய் தான் இருக்கிறது. அது கரைய இன்னும் மூன்று மாதங்கள்—தொண்ணூறு நாட்கள்—இருக்கின்றன. அதன் முடிவுக்குள், இந்தக் காரியத்துக்கும் ஒரு முடிவு உண்டாக வேண்டும். அவன் ஏறி இறங்காத காரியாலயங்களே இல்லை என்று சொல்லலாம்.

விநாயகம் தன் வயோதிகத் தாயை நினைத்துப் பார்த்தான். பாவம், அவளும் தன் பிள்ளை இன்னும் அதே வேலையில் தான் இருக்கிறான் என்று நினைத்துக் கொண்டிருப்பாள். அவன் தம்பி "என் அண்ணனுக்குப் பட்டணத்திலே பெரிய வேலை" என்று தன் தோழர்களிடம் பெருமையடித்துக் கொண்டிருப்பான்.

அவனுக்குப் பரிமளத்தைக் கொடுத்தவர், மருமகனின் அருமை பெருமைகளைத் தெரிந்த, தெரியாத, தெரியப்போகும் நண்பர்களிடம் விளக்கிக் கொண்டிருப்பார்.

ஆனால் உண்மை நாடகம் தெரிந்தால்?

அதை நினைத்துப் பார்க்கவே விநாயகத்தால் முடியவில்லை;

* * *

அன்று அவர்கள் பார்த்த படம், எல்லாத் தமிழ்ப் படங்களையும் போல், செக்கைச் சுற்றும் மாடுகளின் பாதையைப் போன்ற படம். 'ஹீரோ' 'ஹீரோயின்', 'வில்லன்', 'வில்லி' எல்லாரும் வந்தார்கள். அழுதார்கள், சிரித்தார்கள்; போனார்கள். ஜனங்களும் வேறு வழியின்றி அதைப் பார்த்து ரசித்தார்கள்.

"படம் பிரமாதமாக இல்லை?" என்றான் விநாயகம்.

"எனக்குப் பிடிக்க வில்லை!"

"ஏன்?"

"புருஷனை மதிக்காத பெண் என்ன பெண்?" என்றான்.

"புருஷன் கொடுமைப் படுத்தினால், ஒரு பெண் எத்தனை நாளைக்குத்தான் சும்மா இருப்பாள்?"



"பெண் தர்மத்துக்குக் காலவரையறை ஏதாவது இருக்கிறதா?"

"இல்லா விட்டால் இருக்கும்படியாகப் பண்ணிவிட, 'ஹீரோ' மாதிரி எத்தனையோ ஆண்கள் பிறக்கிறார்களே!"

"அவன் பிறந்தால் அவனைத் திருத்த, ஒரு பெண் வேண்டாமா?"

"நீ இன்னும் நளாயினி காலத்திலேயே இருக்கிறாய்!"

பரிமளம் பதில் பேசவில்லை.

விநாயகம், நடந்து கொண்டே சினிமாக் கதையைப் பற்றித் தொடர்ந்தான்:

"புருஷனை எவ்வளவு தூரத்துக்கு அவள் நம்பினாள்? அவன் கடைசி வரையில் அவளை ஏமாற்றிக் கொண்டே வந்தான். அவன் குட்டு வெளியானதும் அவளுக்குப் பொறுக்க முடியவில்லை..."

"அங்கேதான் அவள், அந்த சோதனைக் கட்டத்தில் பொறுத்திருக்க வேண்டும். பெண் தர்மத்தின் உயிரே அங்கேதான் பிழைக்க வேண்டும்..." என்றாள் பரிமளம்.

"நீ பத்தாம் பசலி..."

"இருக்கிறேன் ... பரவாயில்லை ... நீங்கள், பாண்டும் ஷர்ட்டும் போட்டுக் கொண்டால் நாகரிக மனிதராகி விடுவீர்களாக்கும்?"

"பின்னே எப்படி இருக்க வேண்டுமாம்?"

"மனதிலேதான் நாகரிகமும், பண்பும், கலாசாரமும் வேண்டும். அதைச் செயலில் காட்ட வேண்டும். வெறும் உடையினாலும் வார்த்தையினாலும் காட்டி வெற்றியோ புகழோ பெற முடியாது."

"நீதான் சரியான கதாநாயகி!" என்று கூறி விநாயகம் சிரித்தான்.

"ஆமாம், உங்களுக்கேற்ற கதாநாயகி தான்!" என்று அவளும் கூறிச் சிரித்தாள்.

* * *

அன்று இரவு அவன் படுக்கையில் புரண்டதுதான் மிச்சம். வரவர, மனத்தில் பிறந்து விட்ட சஞ்சலம் வளர்ந்து வளர்ந்து அவனை அழுத்திக் கொண்டு வரலாயிற்று.

அருகே, பரிமளத்தின் இலேசான மூச்சும், அக்காற்றுடன் இழைந்து வந்த கதம்பத்தின்



மணமும் அவன் பக்கம் மனத்தை இழுத்தன. இளம் குழந்தை போல எத்தகைய அமைதியுடன் அவள் தூங்குகிறாள்? அவள் தன் வாழ்வையே அவனை நம்பி அல்லவா வைத்துக் கொண்டிருக்கிறாள்!

மணமான மறு மாதமே அவன் வேலையை இழந்து விட்டான். அந்தச் செய்தியை, மனம் நிறைய மகிழ்ச்சியுடன் இருக்கும் பரிமளம் தாங்க மாட்டாள், விவாக வாழ்க்கையின் இளமை மலர் வாடிவிடும் என்ற பயத்தில் அவன் மறைத்து விட்டான். எளிதில் வேறு வேலை கிடைத்து விடும் என்ற நம்பிக்கையும் இருக்கவே, சேமிப்புப் பணத்திலிருந்து, முதல் மாதம் முதல் தேதியன்று சம்பளம் என்று எடுத்துக் கொடுக்கவும் செய்தான்.

அவனுக்கு மனமகிழ்ச்சி இருக்கிறதோ இல்லையோ, அவனை நம்பி அவனுடன் வாழ வந்தவள் கவலைப்படக் கூடாது! இந்த எண்ணத்தோடு ஆரம்பித்த நாடகம் நாளுக்கு நாள் பயங்கரமாகப் போய்க்கொண்டிருந்தது.

அன்று இரண்டு, மூன்று கம்பெனிகள் ஏறி இறங்கினான். எப்பொழுதும் எல்லா இடங்களிலும் கிடைக்கும் பதிலே கிடைத்தது.

சோர்ந்த முகத்துடன் மிருகக் கண் காட்சிக்கு வந்த அவனை, தெரிந்தவனைப் போல் புன்முறுவலிக்கும் காவலாளி, "வாங்க!" என்றான்.

விநாயகத்துக்கு எரிச்சல்தான் பிறந்தது.

"என்னங்க ஒருமாதிரியாக இருக்கீங்க..."

"ஒன்றுமில்லே!"

"ஒன்றும் இல்லையா? முகம் சொல்லுதே."

"என்ன சொல்லுது!"

"இன்னும் வேலை கிடைக்கவில்லையென்று." விநாயகத்தைத் தூக்கிவாரிப் போட்டது.

"இதோ பாருங்க. சூபரின்டு ஐயாவைப் போய்ப் பாருங்க. அவர் உங்களை அடிக்கடி பார்த்திருக்கார். ஏதாவது கிடைச்சா, பத்து மணிக்கே இங்கே வரலாம்."

"வேலை கிடைக்குமா?" அவன் குரல் இறைஞ்சியது.

"புல்தரையிலே பட்டாணிக் கடலையைக் கொறிக்கிறதைவிட நேரே போய் விசாரிக்கிறது நல்லதில்லையா?"

'பீபிள்ஸ் பார்க்' 'சூப்ரின்டெண்டை'ப் பார்த்துவிட்டு, தெளிந்த முகத்துடன் விநாயகம் திரும்பினான்.

"என்னாங்க, என்ன சொன்னாரு?"

"பத்தாம் தேதியே வரச் சொன்னாரு."

"அவரு நல்லவருங்க. சிங்கத்தோடும் புலியோடும் பழகினா, அதுங்க குணம் வருமா? என்னுங்க கொடுக்கிறார்களாம்?"



மனைவி: ஏன், இப்படித் துக்கமாக உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்? ஓஹோ! மனதில் வேறு யாரையாவது நினைத்துக் கொண்டிருக்கிறீர்களோ!

கணவன்: அசடே! வேறு யாரையாவது நினைத்துக் கொண்டிருந்தால் இப்படித் துக்கமாக இருப்பேனா? உன்னைத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்!

---

"நூற்று அறுபது ரூபாய்..."

மனநிம்மதியுடன் புல்தரையில் உட்கார்ந்து விநாயகம் தன்னுள் புது உலகம் ஒன்றைச் சிருஷ்டி செய்து கொண்டு அதில் ஒரேயடியாக மூழ்கியிருந்தான்.

வீட்டுக்குத் திரும்புகையில் ஒரு பிரச்னை எழுந்தது. நடந்ததை யெல்லாம் பரிமளத்திடம் சொல்லுவதா, இல்லை, ஒன்றுமே நடக்காததுபோல நடிப்பதா? அவன் இதுவரையில் ஏதோ ஒரு வேலையில் இருந்து வருவதாகத் தானே பரிமளம் நினைத்து வருகிறாள்? திடீரென்று அவளாகவே 'வேறு வேலைதேடுங்களேன்' என்றாள். அவள் எதைக் குறித்துச் சொன்னாள்? சம்பளம் குறைவு என்ற காரணமாக அவள் சொன்னாளா?

பஸ்ஸை விட்டு இறங்கும்போது அவன் தீர்மானம் செய்து கொண்டான், அப்போதைக்கு ஒன்றும் சொல்ல வேண்டாம் என்று.

ஒன்பதாம் தேதி வரையில் விநாயகம் மிருகக் கண் காட்சியை நினைக்கவில்லை. தன் முகாமை ஹைகோர்ட்டுக்கு மாற்றினான்.

ஏழு நாட்கள் ஏழு யுகங்களாகச் சென்றன.

கடைசியில் பத்தாம் தேதியும் வந்தது.

சாப்பிடும்போது, ரசத்துக்குப் பிறகு கலத்தில் பாயசம் விழுந்தபோது அவன் திடுக்கிட்டான். கம்பீரமாக நின்ற ஒரு முந்திரிப் பருப்பைப் பார்த்துக் கொண்டே, "என்ன விசேஷம், பரிமளம்?" என்றான்.

"பிறந்த நாள்!"

விநாயகம் வியப்புடன் "உனக்கா? ஏன் முன்னமேயே சொல்லவில்லை?" என்றான்.

பரிமளம் குறும்புச் சிரிப்புடன் இடத்தை விட்டு அகன்றாள்.

மாலை ஆறு மணிக்குத் திரும்பிய விநாயகத்தை முகப் பொலிவுடன் வரவேற்ற பரிமளம், "சாந்தோமுக்குப் போகலாமா?" என்று கேட்டாள்.

"எதுக்கு?"

"சும்மாதான்."

"ஆகா!"

கச்சேரித் தெரு வழியாக நடந்து போய்க் கொண்டிருந்த போது திடீரென்று பரிமளம் ஒரு வீட்டு வாசலின் முன் நின்றாள்.

"ஏன்?" என்று கேட்கும் பாவனையில் அவளைப் பார்த்தான் விநாயகம்.

"நீங்களும் வாருங்கள்...என் சிநேகிதி ரொம்ப நாட்களாக நம் இருவரையும் அழைக்கிறாள்..." விநாயகம் பதில் சொல்லும் முன்பே பரிமளம் ரேழியில் கால் வைத்தாகி விட்டது. ஊமைபோல அவன் அவளைத் தொடர்ந்தான்.

சிநேகிதியின் கணவரைக் கண்டதுமே, விநாயகம் சிலையாகி விட்டான். வார்த்தைகள் வெளிவர வில்லை. அவனுக்கு வேலை கொடுத்த சூபரின்டெண்டா இப்படிப் புன்முறுவலுடன் அவனை வரவேற்கிறார்?

கடைசியாகத் திரும்புகையில் அவரைப் பார்த்துப் பரிமளம், "நீங்கள் செய்த உதவிக்கு என் நன்றி!" என்றாள்.

விநாயகம் தலைகுனிந்தான்.

வாசலண்டை வரும்போது, "என்னாங்க அதுக்குள்ளே கிளம்பறீங்க?" என்ற ஒரு அன்புக் குரல் கேட்டது.

"வரேன் வேலு!" என்றாள் பரிமளம்.

காவலாளியின் முரட்டு முகத்தில் அரும்பிய இளநகையில் விநாயகம் தன்னை இழந்தான்.

* * *

வெகு நேரம் பேசாமலேயே நடந்த விநாயகம் திடீரென்று, "பரிமளம், உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றான்.

"நீங்கள் சொல்லா விட்டால் எனக்குத் தெரியாதா?...நீங்கள் ஏன் சொல்லவில்லை?"

"தெரிந்தால் நீ எப்படிக் கஷ்டப் படுவாய்?" நெகிழ்ந்த குரலில், "நீ தெரிந்தும் ஏன் காட்டிக் கொள்ளவில்லை?" என்று மேலும் தொடர்ந்து கேட்டான்.

"காட்டிக் கொண்டால் நீங்கள் எப்படி யெல்லாம் மனத்தைப் புண்ணாக்கிக் கொள்வீர்கள்?"

"கடைசியில் நீயே என்னுடைய பிரச்னையைத் தீர்த்து விட்டாய்!"

"உங்கள் பிரச்னையா?...நம் பிரச்னை என்று சொல்லுங்கள்! சூபரின்டெண்டை நீங்கள் நம் கலியாணத்தின்போது பார்த்ததில்லை போலிருக்கு....அவரால்தான் இப்போது நம் பிரச்னை தீர்ந்தது..."

விநாயகத்துக்குப் பதில் பேச முடியவில்லை.

# 2 வழிகளால் நரையை



# ஒழிக்கலாம்...

'சிரசாஸனம்' ஒழுங்காகச் செய்துவந்தால், நரைமயிர் நாளடைவில் கருப்பாக மாறும் எனச் சொல்லப் படுகிறது. ஆனால் அதைப் பழக, ஓய்வு நேரமும், மன நிம்மதியும் அவசியம்.

தற்காலத்தில் "லோமா"வைத் தவருமல் உபயோகிப்பதுவே, நரையை ஒழிக்க நிச்சயமான தும், பத்திரமானதும், சுலப மானதுமான வழியாகும்.



"லோமா" இப்பொழுது திருட இயலாத மூடியுள்ள பிரத்தியேகமாகத் தயாரித்த பாட்டிலில் வழங்கப்படுகிறது.






ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா, ஆமதாபாத்-1
ஏஜெண்டுகள்: வி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன்: 30575

சென்னை ஏஜண்டுகள்: ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள்: சிர்குல் கதீர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

ஒன்றல்ல 17
மயக்கும் மணங்கள்
உங்களுக்கு கிறுகிறுப்பும்
புளகாங்கிதமும் தரும்!

PALMOLIVE
Talcum Powder
DE LUXE

வெறியூட்டும் 17 வெலண்டுகளின்
அற்புதக் கலவை சேர்ந்த பாமாலிவ்
டால்கம் டீ லக்ஸின் நறுமணம்
உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம்
அடையச் செய்யும்...
மணிக்கணக்காக
உங்களுக்கு குளுமையும்
புத்துணர்ச்சியும்
அளிக்கும்!

# பாமாலிவ்

## டால்கம் டீ லக்ஸ்

உண்மையில் உயர்ந்த டால்க்...
வீட்டிலுள்ள அனைவருடைய சுகத்திற்கும்
சுகாதாரத்திற்கும்... குழந்தைக்குங்கூட!

---

குழந்தைகளின் ஈரல், குலேக்கட்டி வியாதிகளுக்கு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | | இடம் | தேதி | |
|---|---|---|---|---|---|
| தஞ்சாவூர் | 17 | காலை & மாலை | விருத்தாசலம் | 22 | மாலை |
| பட்டுக்கோட்டை | 18 | காலை | சிதம்பரம் | 23 | காலை & மாலை |
| திருத்துரைப்பூண்டி | 18 | மாலை | கடலூர் N. T. | 24 | காலை & மாலை |
| மன்னார்குடி | 19 | காலை | பாண்டிச்சேரி | 25 | காலை |
| திருவாரூர் | 19 | மாலை | திண்டிவனம் | 25 | மாலை |
| நாகப்பட்டினம் | 20 | காலை | விழுப்புரம் | 26 | காலை & மாலை |
| நன்னிலம் | 20 | மாலை | காஞ்சிபுரம் | 28 | காலை & மாலை |
| மாயவரம் டவுன் | 21 | காலை & மாலை | வேலூர் | மார்ச் 1 | காலை & மாலை |
| சீர்காழி | 22 | காலை | | | |

ஜாம்ஷெட்பூர்: ஒவ்வொரு மாதக் கடைசி ஞாயிறு, காலை & மாலை
சாக்சியிலுள்ள ஆந்திர டிராமாடிக் & லிட்டரரி சொஸைட்டி கட்டிடத்தில்
கரக்பூர்: 4; காலை & மாலை M/s. யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், N.T.E.155, ரயில்வே மார்க்கெட்
ஜபல்பூர்: 15; 8 to 12 முற்பகல் & 3 to 5 மாலை M/s. மாடர்ன் ஓட்டல்,
(அப்துல்லாபாய் & சன்ஸ், எதிரில்) அந்தர்தேஷ் போன்: நெ. 348

★

# ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி - கும்பகோணம்




## 48. நேயர்கள் கடிதம்

நேயர்களின் கடிதங்களைப் பற்றிய குறிப்புகள் எழுதி நெடுநாளாயிற்று.

கடிதம் 380ல்வெள்ளாளப் பாளையம் நண்பர், க்ஷீரபலா பலாசவகந்தாதி தைலங்களால் தினசரி எண்ணெய்க் குளி செய்து வந்ததோடு, தஞ்சை அரண்மனை முறைப்படி தயாரித்த அசுவகந்தா லேஹியத்தையும் உட்கொண்டு வந்ததில்......''இப்பொழுது உடம்பு முன்பிருந்ததற்கு எவ்வளவோ தேவலை. வெய்யிலில் போகமுடிகிறது.பசிக்கிறது. கண் எரிச்சல் நின்று விட்டது. இப்பொழுது மலச்சிக்கலும் நீங்கி வருகிறது'' என்று எழுதுகிறார்.

கடிதம் 400ல் பெங்களூர் சகோதரி எழுதுகிறார். இவர் படுசூடிகையானவர். அநேகமாக எல்லா மருந்துகளையும் தாமே தயாரித்துக் கொண்டு தம் வீட்டுக்கு வேண்டிய வைத்திய வசதிகளைச் செய்து கொள்பவர். வைத்திய உதவிக்காகப் பிறரை நாடாதவர். ப்ளூ ஜுரம் ஊரெல்லாம் பரம வியாபகமாயிருந்தபோது இச் சகோதரியின் வீட்டில் குழந்தை குட்டிகள் யாவரும் பீடிக்கப் பட்டனர். . ஒரு வைத்தியனின் உதவியும் இன்றி எல்லோருக்கும் தாமே தயாரித்த மருந்துகளைக் கொண்டு சிகிச்சித்து, குணமாக்கிவிட்டு, ''காலணாக்கூட ஒரு வைத்தியனுக்குக் கொடுக்க வில்லை'' என்ற செய்தியை ஏற்கெனவே தெரிவித்து எழுதியவர். தற்போது,

டான்ஸில் என்னும் களகண்டியால்—தொண்டையில் சதை வளருகிற நோயினால்—பீடிக்கப்பட்டுள்ள இரண்டு பேரக் குழந்தைகளுக்குத் தஞ்சை முறைப்படி தயாரித்த அசுவகந்தா லேஹியம் - கூஷ்மாண்ட ரஸாயனம் என்னும் இரண்டு லேஹியங்களையும் மாறி மாறிக் கொடுத்து வருவதோடு வசாதி தைலத்தைத் தலைக்குத் தடவியும் — டான்ஸில்களின் மேல் படும்படி கொப்பளித்தும் வருவதால்......'' அவர்களுக்குக் கொஞ்சம் குணமாயிருக்கிறது. இன்னும் நன்றாய்க் குணமாகும் வரை இதே மாதிரி செய்து கொண்டிருக்க வேணுமா ?'' என்று கேட்டிருக்கிறார்.

ஆமாம், நன்றாய்க் குணமான பிறகும் சில நாள் வரையில் இம் மருந்துகளை உபயோகித்து வருவதுதான் நல்லது.

கடிதம் 315-ல் செம்பூரிலிருந்து 10-வயதுச் சிறுமி பித்த வெடிக்கு என்ன செய்ய வேணுமென்று கேட்டிருக்கிறாள்.

''காலில் உள்ள பித்த வெடிப்பிலிருந்து ரத்தம் வருகிறது. பள்ளிக்குப் போவது ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. டாக்டரிடம் காட்டி மருந்து போட்டதில் குணம் தெரியவில்லை. தயவு செய்து இதற்கு மருந்து எழுதுங்கள். செய்து போட்டுப் பார்க்கிறேன்.

''கோடையில் ஏற்படும் கட்டிக்கு என்ன செய்யலாம்? பனிக்காலத்தில் எங்களுக்கு உடம்பில் எண்ணெய்ப் பசையே இல்லாமல், வற வறப்பாக இருக்கிறது. எண்ணெய் தேய்த்துக் குளித்தாலும் நலம் இல்லை. இதற்கு என்ன செய்யலாம்'' என்றும் கேட்டிருக்கிறார்.

பித்த வெடிக்கு, முன்னொரு கட்டுரையில் எழுதிய குக்கில் நவநீதம், ஸிந்தூராதிலேபம், பிண்ட தைலம் ஆகியவற்றை மேலுக்குப் பூச உபயோகிக்கலாம்—உள்ளுக்கு திக்தகம் அல்லது மஹாதிக்தகம் என்ற கிருதங்களில் வேளைக்கு அரை டீஸ்பூன் வீதம் சாப்பிட்டு வரலாம். இந்தக் கிருதத்தைத் தொடர்ந்து சாப்பிட்டுப் பிண்ட தைலத்தை உடம்புக்குத் தேய்த்துக் குளித்து வந்தால் கோடைக் கட்டிகள் வராது. இவற்றையே உபயோகித்து வந்தால் பனிக் காலத்தில் சருமத்தின் வறட்சியும் ஏற்படாது.

422-ல் இலங்கை நண்பர் தமது பீனஸ ரோகத்துக்கு மருந்து கேட்டு எழுதியுள்ளார். பீனஸாந்தக தைலத்தைத் தினசரி தலைக்குத் தடவி ஊற வேண்டும். ஆனால் தலைக்கு ஜலம் விட்டுக் குளிக்கக் கூடாது. தீராத பட்சம் வாரத்தில் ஒருதரம் குளிப்பதானாலும் இதே தைலத்தைத் தடவிக் கொண்டு வெந்நீரில் அதிகம் ஊறாமல் குளித்து சரத்தைத் துடைத்து விட்டுப் பிறகு சாம்பிராணிப் புகை போட வேண்டும். உள்ளுக்குத் தஞ்சை அரண்மனை முறை—அச்வகந்தா லேகியம் இதமானது.

435-ல் மற்றொரு இலங்கை நண்பர் தமது 'எக்ஸிமா'வைப் பற்றி எழுதியுள்ளார். எக்ஸிமா விஷயமாக ஸ்ரீநிவாஸபுரம் சகோதரியின் கடிதத்தையே கல்கியில் பிரசுரித்திருந்தேன்.

அதன் பிறகும் எக்ஸிமாவைப் பற்றி என்னைக் கேட்க வேண்டுமா?

443-ல் மற்றுமொரு இலங்கை நண்பர் தமது ஆமவாதத்தைப் பற்றியும், டான்ஸிலைப்பற்றியும் எழுதியிருக்கிறார். ஆமவாதத்தைப் பற்றி வேண்டிய மட்டும் 'கல்கி'யில் எழுதியாயிற்று. டான்ஸிலுக்குத்தான் 400-ல் பெங்களூர் சகோதரி உபயோகித்துப் பலன் கண்ட மருந்துகள் இருக்கின்றனவே!

**குறிப்பு: இலங்கை நண்பர்களுக்கு ஒரு வேண்டுகோள். கடிதத்துக்குப் பதில் பெற விரும்புவோர் காமன்வெல்த் போஸ்டல் கூப்பன் என்பதில் இருபது ஸெண்டுக்கு ஒன்றை வாங்கி அனுப்பினால் பதிலெழுதச் சௌகரியமாகும். இல்லாவிட்டால்....? பதில் கிடைக்கவில்லை என்று என்னைக் குறை சொல்லலாகாது.**

455-ல் ஒற்றப்பாலம் சகோதரி ஒரு வியப்பை மூட்டுகிறாள். சிலநாள் முன் இச்சகோதரி மலையாளத்தில் ஒரு கடிதம் எழுதினாளாம். ஒருகால் அதை நான் புரிந்து கொள்ளவில்லையோ என்ற சந்தேகம் எழவே, இப்பொழுது தமிழ் கற்றுத் தமிழில் எழுதியிருக்கிறார்.

இச் சகோதரி இப்பொழுது ஒரு தாய். குழந்தைக்கு ஆறு மாதமாகிறது. குழந்தை புஷ்டியாக இல்லை. இதற்கு என்ன செய்யலாம்? ஆட்டுப் பால் கொடுக்கலாமா? ஒருகால் கொடுத்தால் பிறகு ஒவ்வொரு வருஷத்திலும் இந்த மாசத்தில் ஆட்டுப்பால் கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்று சிலர் சொல்கிறார்களே! இது சரிதானா? இதை அறிய வேண்டும். இதற்காக இந்தச் சகோதரி தமிழ் கற்றுக்கொண்டு தமிழில் எழுதினால்தான் நான் சரியாகப் புரிந்துகொள்வேன்; பதிலும் எழுதுவேன் என்று தீர்மானித்திருக்கிறார்.

தன் மகவுக்காக......என்றபோது ஒரு தாயின் ஆற்றலைப் பார்த்தீர்களா?

தினசரி எண்ணெய்க் குளியே போதும். சரீரத்துக்குப் புஷ்டிதர. ஆட்டுப்பால் கொடுப்பதில்சகோதரியிடம்சிலர்சொன்னது போன்ற நிர்ப்பந்தம் ஏதும் இல்லை.

457ல் சொக்கிக்குளம் நண்பர் சில ரசமான கேள்விகளைக் கேட்டிருக்கிறார்.

1. ''சில குழந்தைகள் வயது 8-க்கு மேல் ஆகியும், இரவில் படுக்கையிலேயே மூத்திரம் கழித்து கொள்கிறார்கள். எவ்வளவோ கண்டித்தும் நல்ல வார்த்தை சொல்லியும் பயனில்லை. என்னுடைய மகன், இதேமாதிரிதான் இரவில் படுக்கையில் மூத்திரம் கழித்து கொள்கிறான். இதை நிவர்த்திக்கச் சுலபமான வழிகள் ஏதாவது தெரிவிக்கவும்.

2. ''டான்ஸில் — தொண்டையில் வளரும் சதை. இது குழந்தைகளுக்கு இருக்கிறது. இங்கிலீஷ் ஸ்பெஷலிஸ்டுகளிடம் (Doctors) காண்பித்தால், ஆபரேஷன் செய்ய வேண்டுமென்கிறார்கள்.

3. ''சில குழந்தைகள் தூங்கும்போது கண் இமைகள் சரியாக மூடப்படாமல் தூங்குகின்றன. இது குறையாகுமா?

கேள்விகளுக்கு முறையே:

(1) இதற்கு ஒன்றுமே செய்ய வேண்டாம். சில நாட்கள் சென்ற பிறகு தண்ணீர்விட்டான் கிழங்கினால் செய்யப்படும் லேஹியத்தைக் கொடுத்து வந்தால் சரியாகிவிடும்.

இடுப்பு வரையில் ''அவகாஹ'' ஸ்நானம் (Tub bath என்றும் Hip bath என்றும் சொல்லப்படுவது) செய்யவும்.

(2) இதற்கு ஆபரேஷன் தேவையில்லை என்பது எனது அபிப்பிராயம். ஆனால் நான் ஸ்பெஷலிஸ்டுமில்லை, டாக்டருமில்லை. ஆனால் சில பேருக்கு இந்த ஆபரேஷன் செய்ததால் நிரந்தரமான வேறு உபாதைகள் ஏற்பட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். அதனால் இந்த ஆபரேஷன் வேண்டாமென்பது என் அபிப்பிராயம்.

மேலும், பெங்களூர் சகோதரியின் கடிதம் 400-ல் தெரிவித்திருப்பது போல் பல பேருக்கு ஆபரேஷன் இல்லாமலே இந்த டான்ஸில் குறைந்து போயிருக்கிறது. மேற்சொன்ன என் அபிப்பிராயத்துக்கு இது மற்றொரு காரணம்.

(3) இது சரீர வாகு. இதற்கு ஒன்றுமே செய்ய வேண்டாம். செய்யக் கூடிய சிகிச்சையும் எனக்குத் தெரிந்த வரையில் இல்லை. செய்யாததனால் ஒரு தீங்கும் விளையாது.

**(தொடரும்)**

# கண்ணாத்தாள் இதயம்



துரோணன்

“ஏ! கூப்பிடறேனே — என்ன மாச்சும் காதுலே விழுதா? ஹூம்?” சாய்வு நாற்காலியில் ஒய்யாரமாகப் படுத்தபடியே புகையை உறிஞ்சி வெளியாக்கிக் கொண்டிருந்த கண்ணாயிரம் கேள்வியைத் தொடர்ந்து, சட்டென்று திரும்பிப் பார்த்தான்.

அவனது பின்புறத்தில் — சற்றுத் தூரத்துக் கப்பால் உட்கார்ந்து பூமாலை தொடுத்துக் கொண்டிருந்த கண்ணாத்தாள் திடுக்கிட்டு, “ஹூம், என்னாங்க?” என்றாள். அவனுடைய மூன்று முறைக் கூப்பாடுகளும் அவளது செவிக்குள் ஏறவில்லை. அவளது இதயப் பறவை எங்கேயோ வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

“உன் ரோசனை என்னான்கிறதெல்லாம் புரியுது. அதெல்லாம் இனிமேப்பட்டு, கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதிச்சாலும் பண்ருட்டிக்குப் போவலாம்கிற ஆசையையே விட்டுவிடு! தெரிஞ்சுதா?” என்று கண்டிப்பு மிகுந்த குரலில் கூறிக் கொண்டே புகையை உறிஞ்சினான் கண்ணாயிரம்.

கண்ணாத்தாள் பதிலளிக்கவில்லை.

“கொஞ்ச நேரம் முன்னாடி வேலி ஓரத்திலே—அடுத்த வீட்டுக்காரிகிட்டே நீ பேசிக்கிட்டிருந்ததெல்லாம் எனக்கும் தெரியும்! இந்த ஆம்பிள்ளைக்கும் கொஞ்சம் மானம், மரியாதை உண்டு! என்றைக்கு ஒங்கப்பன் கூண்டிலே ஏறி எனக்கு எதிரியாகச் சாட்சி சொன்னானோ, அன்றைக்கே அவனுக்கும் எனக்கும் மூணுக்குக்கூட விட்டுப் போச்சு. இனி அவன் செத்தாலும்—” என்று வார்த்தையை முடிக்காமல் சிகரெட் புகையை உள்ளுக்கு இழுத்தான் கண்ணாயிரம்.

“என்ன பேச்சுப் பேசறீங்க. அவரு உங்களுக்கு என்னா கெடுதல் பண்ணிட்டாரு?” என்று கேட்ட அவளது குரலில் துயரம் ததும்பியது.

“என்ன? என்ன கெடுதலா? இதைவிட வேறே கெடுதல் செய்யணுமா? அறிவுகெட்ட மூடம்! ஒங்கப்பனுக்கு அந்த ஆறுமுகம் பயல் அவ்வளவு ஒசத்தியாப் பூட்டானில்லே? ஏன், அவனுக்கே உன்னைக் கட்டிக் கொடுக்கிறது தானே? அவனும்தான் ஆசையாசையா ஒங்கப்பனைச் சுத்தி வந்துக்கிட்டிருந்தான்!”

“அத்தான்! காலே நேரத்திலே இப்படித் தாறுமாறாக என்னவெல்லாமோ ஏன் பேசறீங்க?” — அவளது வார்த்தையில் சற்று இலேசான பதைப்பு தொனித்தது.

“இல்லே! நானும்தான் இப்போது அந்த வருஷத்துக்குப் பிறகாவது விசயத்தைத் தெரிஞ்சுக்கணுமில்லே? உன்னை அவனுக்குக் கட்டிக் கொடுத்திருந்தால், இப்போ எசமானியம்மா கணக்காய்க் குந்திக்கிட்டுப் பூமாலே தொடுக்க முடியுமான்னு கேட்கிறேன்! மாப்பிள்ளையைக் காட்டிக்கொடுத்த உன் தகப்பனும் ஒரு தகப்பனா? அந்த மோசத் தகப்பனைப் பார்க்கப் போகிறதுன்னு...”

“அத்தான்! நான் செத்தாலும் உங்ககாலுங் கீழேயே தான் சாவேன். சத்தியமா, இதுக்காக, எங்கப்பனைப் பத்தி மாத்திரம் கண்டபடியெல்லாம் திட்டாதீங்க!”

அவளது தோற்றமும் வார்த்தைகளும் அவன் மனத்தை ஓரளவுக்குத் திடுக்கிடத்தான் வைத்தன. ஆனாலும், மிடுக்குக் குறையாமல் எழுந்தான். நல்ல வேளையாக, அப்போது வெளிப்புறமிருந்து வந்து கொண்டிருந்த ஒரு ஆள், அச் சூழ்நிலைக்கு மாற்றமளித்து விட்டான். அவன், “கணக்குப் பிள்ளைக்கு உடம்பு காயலாம். அதனாலே அவங்க சந்தைக்கு வல்லீங்க” என்றான் பணிவுடன்.

“ரொம்ப சரி! கண்ணாலச் சேதி கொண்டாந்துட்டேல்ல?” என்று கூறியபடியே, சட்டையை எடுத்து அணிந்து கொண்டு, சாவிக் கொத்துடன் அவசரமாக வெளிக் கிளம்பினான் கண்ணாயிரம்.

அவன் சென்றதும், கண்ணாத்தாள் ஒரு பெருமூச்சை விடுத்துவிட்டு எழுந்தாள். கையிலிருந்த மாலைச் சரத்தை முருகன் படத்துக்கு அணிவித்தாள். அப்பொழுது அவளை யறியாத துயரம் அவளது நெஞ்சை அடைத்துக்கொண்டு குமைந்தது.

★

கண்ணாத்தாள் ஒன்பது மாதக் கர்ப்பிணி! அவளைச் சிரிப்பும் சந்தோஷமுமாக விட்டிருக்க வேண்டிய காலத்தில் — அவன் இவ்வளவு கொடூரமாகவா மாறவேண்டும்? கண்ணாயிரத்துடன் வாழ்க்கை நடத்திவந்த நூத்தாண்டுகளாக அவன் இந்த அளவுக்கு அவள் மனத்தைப் புண்படுத்திப் பேசினதில்லை. அதற்குப் பதிலாக, அவன் அவளிடம் உயிரையே வைத்திருந்தான். அவளுக்கு ஒரு சிறு தலைவலியானாலும் மனம் பொறுக்காது. தானே வைத்தியர் வீட்டுக்கு ஓடுவான். அன்றாடம் சந்தையில் நடக்கும் விசேஷங்களை யெல்லாம் கூட, குழந்தைக்குக் கதை சொல்லுவதுபோல் அவளிடம் கூறி விளையாடுவான். அவன்



விரும்பிக் கேட்கும் பண்டம் எதையும் வாங்கிக் கொடுக்க அவன் தயங்கியதே இல்லை. இவற்றுக்கெல்லாம் காரணம், அவளது இயற்கையான எழில் உருவம் அவனைப் போதை கொண்டு ஆடச் செய்தது தான் என்றால் அதில் சிறிதும் வியப்பே இல்லை!

ஐந்து வருஷங்களுக்கு முன், பண்ருட்டியிலிருந்தபோது, அவளைக் கல்யாணம் செய்து கொள்வதற்காக நான்கு வாலிபர்கள் முனைந்தார்கள். கண்ணாத்தாளின் அழகுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், அந்த இளைஞர்களெல்லாம் ஓரளவுக்காவது பொருத்தமுடையவர்கள் என்றுதான் குறிப்பிட வேண்டும். அதிலும் ஆறுமுகம் ஒருபடி மேலானவனாகத் தானிருந்தான். ஆனால், கண்ணாயிரமோ?—

கண்ணாயிரம் கட்டையான சரீரமும், கரணை கரணையான கைகால்களும் கொண்டிருந்ததுடன், வழுவழுப்பான நாகப் பழத்தின் நிறத்தை யொத்திருந்தான்! பெயருக்கேற்ற படியே, மகமாயித்தெய்வத்தின்பரிசுமுத்திரைகளான ஆயிரம் கண்களும் அவன் உடலில் இருந்தன. இத்தகைய அழகன்—கண்ணாத்தாளைப் பத்தினியாகப் பெற எப்படி நினைக்க முடியும்? அவளைப் பார்க்கும்போதெல்லாம் உள்ளூறப் பொருமினான். மற்ற இளைஞர்களைக் காணும்போதெல்லாம் பொறாமைக் கனலால் பொசுங்கினான். கடைசியாக, அப்பூஞ்சை மெல்லிடையாள் அவனுக்கே வாழ்க்கைத் துணைவியாக அமைந்ததுதான் அற்புதத்திலும் அற்புதம். உண்மையாகவே, அவர்களுக்கு நடந்து விட்ட கல்யாணத்தைப் பற்றி அவ்வூரார் இன்னமும் அதிசயமாகத்தான் பேசிக் கொண்டு வருகின்றனர்.

கண்ணாயிரத்துக்கு இயற்கையளித்த பரிசு, அவனது கட்டுமஸ்தான உடல் ஒன்றுதான். அதன் மூலம், அவன் உழைத்துப் பாடுபடுவதற்கும் சலித்துக் கொண்டதில்லை. உற்றார், உறவினரற்ற அவன், பதினெட்டு வயதுமுதல் தனவந்தர்களின் வீடுகளில் சிற்றேவல்கள் புரிவதும், தோட்ட வேலைகளின் மூலம் கூலி பெறுவதுமாக வாழ்நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தான். ஆனால், அவனது இயற்கையான முன்கோபத்தையும் முரட்டுத் தன்மையையும் முன்னிட்டே, யாரும் அவனை நிரந்தரமாக வேலைக்குச் சேர்த்துக் கொள்ளுவதற்கு அஞ்சினார்கள். இந்நிலையில், ஊரில்

செல்வாக்குடனிருந்த பெரியம்பலக்காரரின் தரிசு நிலத்தைக் குத்தகைக்கு ஒப்புக்கொண்டு பாடுபடத் தொடங்கினான். அவனது முரட்டு முயற்சிகள் வீணாகவில்லை. முதல் வருஷம் அவன் வைத்த மிளகாய்ச் செடிகள் நல்ல பலனை ஈன்றன. குத்தகைத் தொகை போக, அவனுக்கு நூற்றைம்பது ரூபாய் உபரியாகவும் கிடைத்தது. இந்தக் காலத்தில் தான், கல்யாண விஷயம் குறுக்கிட்டது.

கண்ணாத்தாள் அவ்வூர் மாரியம்மன் கோவிலின் பூசாரி மகள். ஊராரின் ஒருமுகமான அபிமானங்களுக்கும், அன்புக்கும் பாத்திரமானவன் ஒருவன் உண்டென்றால், அவன் பூசாரி வேலய்யா தான். அவன், அக் கலியுகத்துக் கண்கண்ட நாயகியின் ஆலயத்துக்கு ஊழியம் புரிவதையே தொழிலாகக் கொண்ட வம்சத்தில் வந்தவன். கோவிலுக்குக் கூப்பிடு தூரத்தில் பூசாரிக்கென ஒரு குடியிருப்பு வீடும், தினமும் ஒருபடி அரிசிக்கு ஊதியமும் ஊரார் வைத்திருந்தனர். ஆழ்ந்த பக்தியினாலும், தளரா நம்பிக்கையினாலுமே, அவ்வூராரின் நலன்கள் முழுமையும் அத்தெய்வத்தினிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. அந்த அளவுக்கு அத்தெய்வம் ஊரைக் காப்பாற்றிய போதிலும், தனக்கு அன்றாடச் சேவை புரிந்து வந்த வேலய்யாவை மட்டிலும் சில வருஷங்களுக்கு முன் சோதனைக்குத்தான் உள்ளாக்கியது. வேலய்யாவின் மனைவி பத்து மாதக் கர்ப்பிணியாயிருக்கையில், மாரியம்மன் தன் திருவிளையாடலின் மூலம் அவளை அவனிடமிருந்து பிரித்து விட்டாள்.

அவள் விட்டுச் சென்ற பெண் சிசுதான் கண்ணாத்தாள். அவளைப் பதினாறும் வயதுக் கன்னிப் பருவம் வரையில் வளர்ப்பதற்குள், வேலய்யா அரும்பாடும் பட்டு விட்டான். ஆனாலும், அவனது மனப்போக்கில் அவள் 'கண்ணாத்தாள் தெய்வம்' கொடுத்த பிச்சையாகவும், அவளே வளர்த்து விட்ட தெய்வக் கன்னியாகவும் இருந்தாள். 'தளதள'வென்ற மல்லிகைக் கொடியாக வளர்ந்துவிட்ட கண்ணாத்தாளின் வாழ்க்கையைப் பற்றி வேலய்யாவிடம் ஊரார் விசாரிப்பதுண்டு. அப்போதெல்லாம் அவன், 'அம்பிகையின் திருவுள்ளம்! அவளேதான் பிறப்பித்தாள், அவளேதான் வளர்த்தாள். அவளே அவளுக்கு வாழ்க்கையையும் அளிப்பாள்!' என்று பதில் கூறுவான். அத்தகைய பதிலால் அவனிடம் அனுதாபப்பட்டோர் சிலர். பொறுப்பற்ற தன்மையைக் கண்டு வியந்தோரும், கடிந்தோருமோ பலர்.

இந்நிலையில், கண்ணாத்தாள் ஊரிலிருந்த வாலிப உள்ளங்களையெல்லாம் உருக வைத்துப் பித்த போதை கொள்ளும்படி செய்து வந்தாள்!

முடிவாக, வாலிபர்களின் மனோரதங்களெல்லாம் செயலளவுக்கு வேலய்யாவிடம் வந்து மோதின. கண்ணாத்தாளின் மலர்க்கரம் பற்ற நான்கு வாலிபர்கள் போட்டியாக இருப்பது பற்றி வேலய்யா திகைத்தான்.

ஆறுமுகம் பெரியம்பலக்காரரின் குடும்பத்தில் சிற்றேவல்கள் புரிவதன் மூலம், அக் குடும்பத்திலேயே ஒருவனாக ஒன்றி விட்டான். அவனது இயற்கையான வனப்பில் அவனுக்கே ஒரு பெருமிதமும் உண்டு. நாள் தவறினாலும் அவன் கோவிலுக்கு வருவதற்கும், வேலய்யாவின் பற்றுதலைப் பெறுவதற்கும் தவறினதில்லை! இந்நிலையில் கண்ணாத்தாள் தனக்கே உரியவளாகி விடுவாளென, அவன் ஆகாயக் கோட்டை நிர்மாணித்திருந்தான்!

கண்ணாயிரமோ, தன் உருவத்தின் விசித்திரப் படைப்பைப் பற்றிச் சிறிதும் சிந்திக்கவில்லை. தான் ஒரு சுதந்திரமான உழைப்பாளியென்பதையும், சுயமாக உழைத்துப் பொருள் ஈட்டிய பெருமையையும் சிபாரிசுக்காரர்களின் மூலம் வேலய்யாவின் கவனத்துக்குக் கொண்டு வந்திருந்தான்.

இப்படியாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் உயர்ந்தவர்களாகத் தோன்றவே வேலய்யா குழப்பமுற்றான். கடைசியாக, ஒரு முடிவுக்கு வந்து கண்ணாத்தாளின் வாழ்வை நிர்ணயிக்கும் பொறுப்பை மாரியம்மனின் திருவுள்ளத்துக்கே விட்டுவிடத் தீர்மானித்து விட்டான். மறு வெள்ளிக்கிழமை யன்று, ஊரிலிருந்த குடிகளைத் திரட்டி, அம்மனுக்கெதிரே குடவோலைச் சீட்டுப் போட்டு நிச்சயிப்பது என்பதுதான் அவன் தீர்மானம்.

அதன்படி கண்ணாயிரத்தின் பெயரையே அறிவித்து ஆக்ஞையிட்டிருந்தாள் தேவி!

மறுவாரம், அவ்வூர்ப் பெருமாள் கோவிலில் கண்ணாயிரத்துக்கும் கண்ணாத்தாளுக்கும் சிறப்பாக மணவினை முடிந்தது.

ஆறுமாத காலம் சென்றது. கண்ணாயிரம் பெரியம்பலக்காரருக்குக் கொடுக்க வேண்டிய குத்தகைத்தொகையைக் கொடுக்கவில்லை. அதற்காக அவர், அநேகம் தடவை கேட்டனுப்பி ஆள் விட்டார். ஒரு நாள் கண்ணாயிரம் மாரியம்மன் கோவிலின் எதிரில் நின்று கொண்டிருக்கும் போது, ஆறுமுகம் அங்கே வந்து, அவனிடம் குத்தகைத் தொகையைக் கேட்டான். கண்ணாயிரம் சிறிது அலட்சியத்துடனே பதிலளித்தான். ஆறுமுகத்துக்கு வேகம் ஏற்பட்டது. ஏற்கனவே தன் ஆசைக்கு எதிரியாக வந்த



கண்ணாயிரத்தின் மீது அவனுக்குப் பொறாமை ஏற்பட்டிருந்தது. ஆகவே இளமையின் துடிப்பில் கொஞ்சம் அதிகப்படியான வார்த்தைகள் அவனிடமிருந்து வெளியாயின. மறு கணம் கண்ணாயிரம் வெறி பிடித்தவனாகவே மாறி அவனை நையப் புடைக்கத் தொடங்கி விட்டான். அக்கம் பக்கம் சென்றோர்

✓ளே வரும்

அவர்களைச் சமாதானப் படுத்த விரைந்தனர். எதேச்சையாகக் கோவிலின் வெளிப்புறம் வந்த வேலய்யாவும், மருமகனின் தகாத செய்கைகளைக் கண்ணாரக் கண்டதும், பதறிக் கூக்குரலிட்ட வண்ணம் ஓடி வந்தான்.

முடிவாக ஊர் இரண்டு பட்டு விட்டது.

ஆறுமுகம் தனக்கு நேர்ந்த அவமானங்களால், பண்ணையாரின் உதவியுடன் நகரத்து நீதி மன்றத்தில் வழக்குப் போட்டு விட்டான். வழக்கு விசாரணையின் போது வேலய்யா விசாரிக்கப்பட்டான். வேலய்யா நடந்தது நடந்தபடியே கூறவும், வழக்கு கண்ணாயிரத்துக்கு விரோதமாகி விட்டது. கண்ணாயிரம் தன் மடியில் மீதமாக வைத்திருந்த நூறு ரூபாயையும், நீதிபதியின் உத்தரவுப்படி, அபராதமாகச் செலுத்தி விட்டு வெளியே வந்தான்.

அன்றிரவே அவன், வேலய்யாவின் முகத்தைக் கூடத் திரும்பிப் பாராமல், கண்ணாத்தாளையும் அழைத்துக் கொண்டு மதுராந்தகம் வந்து சேர்ந்தான்.

கண்ணாயிரத்தின் கோப வேளையே, அவனுக்கு அதிர்ஷ்ட வேளையாகவும் இருந்தது போலும்! மதுராந்தகத்துக்கு வந்த சில மாதங்களுக்குள்ளாகவே நண்பர்களின் உதவியால் காய்கறிச் சந்தையின் வசூலைக் குத்தகைக்குப் பெறுமளவுக்கு அவன் நிலை உயர்ந்தது. நான்கு வருஷங்களுக்குள்ளாகவே, கண்ணாயிரம் — ரூபாய் எண்ணாயிரத்துக்கு அதிபதியாகி விட்டான்!

★

இரண்டு தினங்களாக, கண்ணாயிரத்துக்கு வெறிதான் பிடித்திருந்தது! இயற்கையிலேயே அவன் முரடன். அத்துடன், சந்தைக் குத்தகை விஷயம் அவன் மனத்தைப் பெரும் சஞ்சலங்களுக்குள்ளாக்கியிருந்தது. அந்த ஆண்டுக் குத்தகைக் காலம் முடிவடைந்து, புது ஏலம் வருவதற்குச் சில நாட்களேயிருந்தன. கடந்த மூன்று ஆண்டுகளாக அவனுக்குப் போட்டியில்லை. அவனது முரட்டுத்தன்மைக்கு அஞ்சியே ஒதுங்கி விட்டனர். இக்காலத்தில்தான், அவனும் கொஞ்சம் 'பசையுள்ள கையாக' மாறினான். இந்த வருஷம் சந்தைக் குத்தகைக்கு மற்றொரு போட்டியும் ஏற்பட்டிருந்தது. அவனுக்கு அலட்சியமாகத்தான் இருந்தது. ஆனால், 'பஞ்சாயத்து போர்டு' ஆபீஸில் ஏலப் பொறுப்புத் தொகை கட்டப்பட்டிருந்த நபரின் பெயரைக் கண்டதும், அவனது வேகம் உச்ச நிலைக்கு ஏறியது. அந்த ஏல நமூனாக் காகிதத்தில், பண்ருட்டி பெரியம்பலக்காரர் பெயர் இருந்தது.













கண்ணாயிரம், பழகியவர்கள், பழகாதவர்கள் எல்லோரிடமும் சர்ப்பமாகச் சீறினான். இந்த நிலையில்தான் அன்று காலை கண்ணாத்தாள் தன் பிறந்த ஊரையும், தகப்பனையும் காண வேண்டுமென்ற ஆவலை அடுத்த வீட்டுச் செட்டிச்சியிடம் கூறிக் கொண்டிருந்ததைக் கேட்டதும், அவன் மனத்தில் எரிந்து கொண்டிருந்த தீக்கு அதிர் பொடிகளைத் தூவியது போலாயிற்று. பழைய சம்பவங்களை மனத்தில் வைத்துக் கொண்டு அவளை அலைப் பிழிந்து விட்டான்.

இன்னும் பத்தே தினங்களுக்கு இந்தக் குத்தகை வாழ்வு! அதன் பின்னர் பரம்பரைப் பணக்காரரான பெரியம்பலக்காரர் காசை உதறி, அதை வலை போட்டுப் பிடித்து விடப் போகிறார். ஆறுமுகம் இங்கும் வந்து, இறுமாப்புடன் தன் காரியத்தைச் சாதித்து விடப் போகிறான். இவர்களுக்குப் போட்டியாக ஏலம் கோர வேண்டு



1936 தனது 20வது வயதில் கஸ்தூரன் பட்டணத்திலே மிகப் பெருமையுடன் ஒரு குறையுமின்றி வசித்து வருகிறான். அவன் விவேகமானவன், நல்ல உத்தியோகமும் கூட. அவனிடம் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிளும் இருக்கிறது.

**இன்று** உலகம் எவ்வளவு மாறிவிட்டது! முன்பு கஸ்தூரன் உபயோகித்து வந்த அதே நம்பகமான ஹெர்குலிஸ் சைக்கிள் இன்றும் அவன் மகன் கலாசாலைக்கு செல்ல உதவுகிறது!

**ஹெர்குலிஸ்** ஓர் சைக்கிள் மட்டும் அல்ல,

வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை



சுமார் 50 வருஷங்களாக உயர்தர சைக்கிள்களைத் தயாரித்துவரும் அனுபவ மிகுந்தவர்களால் இப்பொழுது, இந்த நுட்பவேலைப்பாடமைந்த ஹெர்குலிஸ் சைக்கிள் டி. ஐ. சைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. அதன் உயர்தர அமைப்பையும், அதிகப் பிரயாசையில்லாமல் ஓடும் தன்மையையும் கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். சைக்கிள்களில் மிகச்சிறந்தது ஹெர்குலிஸ். ஆயினும் மிதமான விலையில் கிடைக்கிறது.

உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலீடு. **ஹெர்குலிஸ்** உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்.

இந்தியாவில் தயாரிப்பவர்கள்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ்

மானால், அவனது நான்கு வருஷத்திய உழைப் பின் பலன்களையும் உதறினாலும் முடியாதே!

இத்தகைய ஏக்கங்கள் ஒருபுறமும், கண்ணாத்தாளின் பேறு கால சமயம் ஒருபுறமுமாகக் கண்ணாயிரத்தை வாட்டின.

அன்று குத்தகை ஏலத் தாள் கொடுப்பதற்குக் கடைசி நாள். சந்தைக் கட்டடத்தில் உட்கார்ந்திருந்த கண்ணாயிரம் மனம் குழம்பித் தவித்தான். ஏலத் தொகையை அதிகரிப்பதா, குறைப்பதா என்ற யோசனையை அவனால் முடிவு கட்ட முடியவில்லை. இருப்பது ஒரே போட்டியாளனாலும், அது மிக்க சோதனை கொண்டதல்லவா? ஏலம் மறு கைக்குப் போய் விட்டால், மூன்று வருஷங்களாகக் கிடைத்த பெரும் லாபத்தை இழப்பதுடன், அவ்வூரில் அவனுக்கு இருந்த மதிப்பும் போய் விடும். அதை யொட்டி, பெரியம் பலக்காரரின் பெயரில் ஆறுமுகத்தின் கொட்டம்தான் வலுக்கும். இல்லை, குத்தகையை வசப்படுத்தவேண்டுமானால் ஏலத்தொகையை உயர்த்திப் போட்டு, கைப் பொருள் முழுமையும் கொட்ட வேண்டும்!

நெடு நேரத்துக்குப் பின், கண்ணாயிரம் முடிவுக்கு வந்தான். செய்வதைச் செய்து விட்டால் பலனை யளிப்பதும், அளிக்காததும் அவனுடைய செயல். ஊரும் உலகமும் கூறி வரும் அந்த அமானுஷ்ய சக்தியைப் பற்றி அப்போது அவன் உள்ளமும் சிறிது சிந்தனை செய்தது! காகிதத்தைக் கையில் எடுத்து, நடைமுறை வருஷத்தின் தொகையையே எழுதிப் பூர்த்தி செய்தான். உறை மேல் முத்திரையிட்டுக் கணக்குப் பிள்ளையின் கையில் கொடுத்து விரட்டினான்.

காலைச் சந்தைகளை முடித்துக் கொண்டு, கண்ணாயிரம் வீட்டுக்குத் திரும்பும்போது, பதினொரு மணியாகியிருந்தது. அங்கே-வீட்டில் அவனுக்குப் பேரிடி போன்ற செய்திகள் காத்திருந்தன. அண்டை அயலிலிருந்த பெண்மணிகள் அவன் வீட்டுக்குள் போவதும் வருவதுமாக இருந்தனர். பரபரப்புடன் உள்ளே நுழைந்தான். அங்கிருந்த மருத்துவத் தாய்கள் அவன் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தனர். யாரெல்லாமோ, தங்களுக்குள்ளாகவே அனுதாபத்துடன் பேசிக் கொண்ட செய்திகள் அவன் இதயத்தையே சிதள் சிதளாகப் பிய்த்து விட்டன!

கூடத்துப் புறத்தில்-கண்ணாத்தாள் உணர் விழந்து கிடந்தாள். அவளது விழிகள் மேல் இமைகளுக்குள் செருகிக் கிடந்தன. ஆனால், கை கால்கள் மட்டிலும் முறுக்கிக் கொண்டு உதறின. அடுத்த கணம் கண்ணாயிரம் 'ஓ'வெனக் கதறியபடியே வெளியே வந்தான். அவன் மனத்தில் தோன்றுவதெல்லாம் தோன்றின. அரைக் கால் நாழிகைக்குள், அவனது முரட்டு இதயம், அறைக் குழந்தையாக மாறிவிட்டது. கால் வந்த வழியே ஓடத் தலைப்பட்டு விட்டான். இனி, எவ்வளவு பிறவியெடுத்தாலும், அவனுக்குக் கண்ணாத்தாள் கிடைக்கக் கூடியவளா? பத்து தினங்களாக அவளிடம் நடந்து கொண்ட விதங்கள் அவன் உள்ளத்தைச் சாட்டை கொண்டு அடித்தன.

கண்ணாயிரம் எங்கே போகிறோ மென்ற நோக்க மின்றியே, முடிவாகச் சந்தைக் கட்டடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கும், உடலுக்கு இருக்கை கொள்ளவில்லை. உள்ளம் தூரத்தியது. மேல் படிக்கட்டிலிருந்து இறங்க அடியெடுத்து வைத்தான். அப்போது, யாரோ இருவர் பேசிக் கொண்டு சென்ற செய்திகள் அவன் காதில் காய்ச்சிய ஈயக் குழம்பை ஊற்றுவது போன்றிருந்தன.

'ஐயோ, பாவி மகள் இப்படியா அநியாயமாகச் செத்துப் போகணும்!'

அடுத்த கணமே கண்ணாயிரம், ''ஐயோ! கண்ணாத்தாள்!'' எனக் கூறிக்கொண்டே, படிக்கட்டுத் தவறி, தலை கீழாகச் சாய்ந்து விட்டான். அக்கம்பக்கத்திலிருந்த கடைக் காரர்கள் அவனது மன நிலை புரியாது ஓடி வந்து அவனைத் தூக்கினர்.

கண்ணாயிரம் நினைவும், உணர்ச்சியுமின்றிப் பேச்சு மூச்சற்றிருந்தான்!



கண்ணாயிரம் மீண்டும் கண் திறந்தபோது, முதலில் விளக்கொளிகள் தெரிந்தன. தானிருப்பது-தன் வீட்டின் முன்புறத்து அறையென்பதையும், தான் கட்டிலில் படுத்திருப்பதையும் ஒருவாறாக அறிந்தான். தன்னருகே—அது யார்? நெற்றியில் விபூதியும்,



அதனிடையே குங்குமப் பொட்டும் துலங்க நிற்கும் இழ உருவம்!

கண்ணாயிரம் உறுத்து விழித்தான். ஒரு வாறுகப் புரிந்து விட்டது.

அம்மனிதன்-கண்ணாயிரத்துக்குப் பெண்ணையும் கொடுத்து எதிரியாகவும் மாறியிருந்த வேலய்யாவேதான்!

கண்ணாயிரத்துக்கு நினைவு திரும்பியது. உடல் சிலிர்க்க எழுந்தான். ''ஐயோ மாமா! நீங்களா? என் கண்ணாத்தாள் எங்கே?'' என்று கதறினான்.

''தம்பி, கவலைப்படாதே-எல்லாம் அந்த மாரியம்மன் செயல்தான். கண்ணாத்தாளுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து விட்டாள்! இனி மேலே கவலையில்லே. உனக்கு ஆம்பிள்ளைப் பயலையும் குடுத்திருக்கா'' என்றான் வேலய்யா பாசம் தொனிக்க.

அச் செய்திகளை மீண்டும் கேட்க அவனுள்ளம் பரபரப்புக் கொண்டு விட்டது! ''மாமா! நீங்க என்ன சொல்றீங்க? கண்ணாத்தாள் பிழைச்சுட்டாளா? கண்ணாத்தாளுக்கு உசிரு வந்துடிச்சா?'' என்று பைத்தியக்காரன் போல் கேட்டுக் கொண்டு, அவனை இறுகத் தழுவிக் கொண்டுவிட்டான்.

கண்ணாயிரத்தின் மாறுதலான மனமாற்றம் கண்டு வேலய்யாவின் விழிகளில் கண்ணீர் பெருகிவிட்டது. ''தம்பி, அவள் என் கொளந்தை! நானு யாருக்கும் திம்பு நினைக்கலே, மனசறிந்து உண்மை தவறினதில்லே—உன் தந்தி காலையிலே பத்து மணிக்குக் கிடைச்சதும் ஓடியாந்துட்டேன். அந்த ஆயிரங் கண்ணுடையாள் பேரைச் சொல்லி, விபூதியைக் கொடுத்துப் பூசச் சொன்னேன். கண்ணாத்தாள் தெய்வம், என் கொளந்தை கண்ணாத்தாளுக்கு உசிரைக் கொடுத்திட்டாள்!'' என்றான் ஆனந்த பாஷ்பம் பெருக.

கண்ணாயிரத்தின் அடிக் குடலிலிருந்து கிளம்பிய வெட்கை, பெருமூச்சின் மூலம் வெளியாகித் தணிந்தது. ''தந்தி நான் கொடுத்தேனா?'' என்றான்.

''ஆமாம் தம்பி, உன் பேருதானே அதுலே இருந்துச்சு!'' என்றான் வேலய்யா.

கண்ணாயிரத்தின் முகத்தில் வியப்பும், செய்யாத கடமைக்கான வெட்கமும் ஒன்றுகப் பிரதிபலித்தன. ''தந்தியிலே என் பேரா இருந்திச்சு?'' என்றான் மீண்டும்.

வேலய்யா பதிலளிப்பதற்கு முன், வெளிப்புறமிருந்து மற்றொரு குரல் கேட்டது. ''கண்ணாயிரத்தாரே! இந்த வருசமும் சந்தைக் குத்தகை உங்களுக்குத்தான். மனச்சாட்சியோட, நல்லபடியா நடத்துக்குங்க!'' இவ் வார்த்தைகளை விடுத்தபடியே, உள்ளே நுழைந்தவன்-பண்ருட்டி ஆறுமுகம்!

அடுத்தகணம் அவ்விருவருமே வியப்பும் திகைப்பும் கொண்டு அவனை நோக்கினர்.

ஆறுமுகம் கூறினான்: ''கண்ணாயிரத்தாரே! நீங்க நினைச்சபடி, இந்த ஆறுமுகம் குரோத புத்திக்காரனாயிருந்தால் இந்தக் குத்தகையை விட்டிருக்கமாட்டான்! பதினெஞ்சுநாளு முன்னடி யாரு பேச்சையோ கேட்டுக்கிட்டு, பெரியம்பலக்காரரு இந்த ஊருக்கு வந்து, ஏலப் பொறுப்புத் தொகையைக் கட்டிட்டுப் பூட்டாரு. இரண்டு நாளுக்குப் பிறபாடுதான், எனக்கும் விசயம் தெரிஞ்சிச்சு. நான் அவரு காலிலே விழுந்து ஏலம் எடுக்க வொட்டாமல் தடுத்து விட்டேன்.''

''என்ன? நீ தடுத்து விட்டாயா?'' கண்ணாயிரம் பிரமித்து விட்டான்.

ஆறுமுகம் தொடர்ந்தான்: ''இதோ பாரு அண்ணே, வருசம் அஞ்சாயிடுச்சி. அன்னைக்கி, உங்களுக்குப் பொண்ணைக் குடுத்த மாமனுரு சத்தியம் தவறுமே நடத்துக்கிட்டாரே, அன்னைக்கே, என் கோபதாபங்களும் பூடிச்சு! கண்ணாத்தாள் எனக்குக் கிடைக்கலியே என்கிற ஏக்கமும் மாறிடுச்சு! பதினெஞ்சு நாளு முன்னடி, நானு பெரியம்பலக்காரரு மனசை மாத்த முனைஞ்சதுக்குக் காரணம்—கண்ணாத்தாளுமில்லே, நீயுமில்லே—பூசாரி வேலய்யாச் சாமிதான்! இன்னைக்கி அவரை வரவழைக்கிறதுக்காகத் தந்தி குடுத்ததும் நான்தான்!''

''என்ன வென்ன? நீதான் தந்தி குடுத்தியா?'' என்ற துடிப்பு மிகுந்த கேள்விகள் அவ் விருவரிடமிருந்தும் வெளியாயின.

ஆறுமுகம் விஷயத்தைக் கூறினான்.

பெரியம்பலக்காரர் ஏலத்துக்காகக் கட்டியிருந்த பொறுப்புத் தொகையைத் திருப்பித் தரவேண்டுமென்பதற்காக, விண்ணப்பத்துடன் ஆறுமுகம் அன்று காலை மதுராந்தகத்துக்கு வந்திருந்தான். வரும் வழியில் கண்ணாயிரத்தின் வீட்டு வாசலில் கூடியிருந்த கூட்டத்தைக் கண்டு விசாரித்து, விஷயங்களைத் தெரிந்து கொண்டான். கண்ணாத்தாளின் பரிதாப நிலை அவன் இதயத்தையும் உலுப்பி விட்டது. இவ்வளவு காலமாக, உண்மை மாறாது பழகிவரும் பூசாரி ஐயாவுக்கு இவ் விஷயத்தைத் தெரிவிப்பது தன் கடமையாகவே உணர்ந்து விட்டான். தபால் ஆபீசுக்குச் சென்று கண்ணாயிரத்தின் பெயரை வைத்து, வேலய்யாவுக்குத் தந்தி கொடுத்த பிறகே, தன் அலுவல்களைக் கவனிக்கச் சென்றான். இவை யெல்லாம், காலையில் கண்ணாயிரம் வீட்டுக்குத் திரும்புவதற்கு முன்பு நிகழ்ந்தவை.

விஷயங்கள் யாவற்றையுமறிந்த கண்ணாயிரம் இதயம் நெகிழ்ந்து விட்டான். எழுந்து, ஆறுமுகத்தின் கரங்களைப் பிடித்துக்கொண்டு, ''உன் முயற்சியில்லா விட்டால், இந்த வருசத்துக் குத்தகையும் போயி, என் வாழ்வும் போயிருக்கும்!'' என்றான் கண்ணீர்மல்க.

''அண்ணே! அதெல்லாம் என் முயற்சியினுலே பெரியம்பலக்காரரு மாறிவிடலில்லே. அண்ணே. கடைசியிலே, அந்தப் பிடிவாதக் காரரை — அந்தக் கண்ணாத்தாள் தெய்வம் தான் தடுத்து வைச்சா!'' என்றான்.

அச் செய்தி கண்ணாயிரத்தை வியப்பாகத் திடுக்கிற வைத்து விட்டது. வேலய்யா அவன் அருகே நெருங்கினான்.

''பத்து நாளா — பெரியம்பலக்காரருக்கு நகரமுடியாமல் மகாமாயி வார்த்திருக்கா!''

அடுத்த கணம் கண்ணாயிரத்தின் உடல் சிலிர்த்தது. வேலய்யா இரு கரங்களையும் குவித்தவாறு, ''அம்மா, கண்ணாத்தாளே! நீதான் காப்பாத்தணும்'' என்றான் இதய உருக்கத்துடன்.

அப்போது கண்ணாத்தாள் தெய்வம் கொடுத்திருந்த பரிசு விரிவிட்டழும் இன்ப ஒலி உள்ளிருந்து வந்து கொண்டிருந்தது.



# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி

பதினைந்தாம் அத்தியாயம்

## அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சி

அதிக நேரம் படுக்கையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கக் கந்தசாமிக்கு நேரமில்லை. ஏழரை மணிக்கே எழுந்து அவசரம் அவசரமாகப் போலீஸ் உடைகளை உடுத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனை நோக்கி விரைந்தான். அவனது மனத்தில் விதம் விதமான கனவுக் கோட்டைகள் உருவாகிக் கொண்டிருந்தன. இரவு நடந்த மாபெரும் சம்பவத்தைக் கூறி அடையாறு பங்களா ஷெட்டில் அவன் அடைத்து வைத்திருக்கும் கொள்ளைக்காரர்களையும் பிடித்துக் கொடுத்து விட்டால் அளகிரிசாமி நாயுடு அப்படியே அசந்து போய் விடுவார்! ஒருகால் ''உடனே ஏன் வந்து சொல்லவில்லை?'' என்று கேட்பாரோ? . . . கேட்டால், ''இப்போதுதான் நேராக வீட்டுக்கு வந்து உடுப்பை மாட்டிக் கொண்டு வருகிறேன்'' என்று சொல்லி வைத்தால் போயிற்று! இரவெல்லாம் இத்தனை கஷ்டப்பட்ட மனிதனுக்கு ஒரு அரை மணி நேரமாவது ஓய்வு வேண்டாமாஎன்ன?... இது என்ன வீண் கவலை!...இன்ஸ்

பெக்டர் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க மாட்டார்! அவருடைய ஆயுளில் அவரே இவ்வளவு பெரிய கேஸைப் பிடித்திருக்கமாட்டார் என்பது நிச்சயம்! போலீஸ் ஸ்டேஷனில் இன்றைக்குச் சரியான பரபரப்பு ஏற்படப் போகிறது! கொள்ளைக் கூட்டம் பிடிபட்ட செய்தி, மாலைப் பத்திரிகைகளில் வெளிவந்துவிடும்! அவனது பெயர் - ஏன் புகைப் படம் கூட - வெளியாகலாம்! கமிஷனரிடமிருந்து பாராட்டு! அவனது தீரத்துக்கு "ரிவார்டு" நிச்சயம் கிடைத்து விடும்!

இவ்வாறு எண்ணிய போது அவனது மனத் திரையில் கமிஷனரிடம்



கைகுலுக்குவது போலும், இன்ஸ்பெக்டர் அனவிரி சாமி நாயுடுவும் ஏட்டு கோவிந்தப் பிள்ளையும் பொறுமையோடு அவனது முகத்தைப் 'பார்ப்பதுபோலவும் காட்சிகள் தோன்றின.

அவன் ஸ்டேஷனை அடைந்த சமயத்தில் அங்கு உண்மையிலேயே பரபரப்பாகத் தான் இருந்தது. கான்ஸ்டபிள்கள் கூடிக் கூடிரகசியம் பேசிக் கொண்டிருந்தனர்.

இந்தக் கான்ஸ்டபிள்களே; இப்படித்தான்! குடித்து விட்டுத்; தெருவில் 'கலாட்டா' செய்கிற எவனையாவது பிடித்து வந்துவிட்டால் கூட, ஏதோ பெரிய மலையைப் புரட்டி விட்டது போல் நினைத்துப் பிரமாதமாக வீண் பெருமை யடித்துக்கொண்டு கூடிக் கூடிப் பேசுவார்கள்! அவன் செய்த மகத்தானகாரியத்தை அவர்களிடம் சொன்னால்?... சேச்சே! போயும்போயும் இத்தனை பெரிய விஷயத்தை இவர்களிடமா சொல்வது!

நேராக உள்ளே நுழைந்தான். ஆனால் இன்ஸ்பெக்டரின் ஆசனம் காலியாக இருந்தது. கோவிந்தப் பிள்ளையையும் காணவில்லை. அங்கிருந்தவர்களில் யாருமே அவனது வரவை லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை! அற்பப் பயல்கள்! அவனது அசல் மதிப்பு அவர்களுக்கு எப்படிப் புரியப் போகிறது!

ஒரு பக்கத்தில் கான்ஸ்டபிள் முருகேசன், உஸ்மான், பார்த்தசாரதி, வேலப்பன் ஆகியோர் கூட்டமாக நின்றிருந்தனர். முருகேசனைக் கண்டதும் அவனது குதூகலம் அதிகரித்தது. அவ

னைத் தனியாகக் கூப்பிட்டான். விஷயத்தை அவனிடம் கூறலாமா, அல்லது இன்ஸ்பெக்டரிடம் கூறிய பிறகு தானாகத் தெரியட்டும் என்று விட்டுவிடலாமா என்று யோசித்துக் கொண்டே, ''என்ன முருகேசா, எங்கே நம்ப இன்ஸ்பெக்டரை இன்னும் காணோம்?'' என்று கேட்டான்.



முருகேசன் ரகசியமாகக் கூறினான்:

''உனக்கு விஷயம் தெரியாதா? இன்ஸ்பெக்டரும் ஏட்டுப் பிள்ளையும் ஆஸ்பத்திரியிலே இருக்காங்க!''

''ஆஸ்பத்திரியிலா?...ஏன்?''

''ராத்திரி ஒரு கொள்ளைக் கூட்டத்தைப் பிடிக்கிறதற்காகப் போன இடத்திலே திருடர்கள் இன்ஸ்பெக்டரை அடிச்சு மூட்டையாகக் கட்டிப் போட்டுட்டாங்களாம். கோவிந்தப் பிள்ளைக்கும் சரி 'உடம்பு பிடித்து'விட்டாங்க!''

கந்தசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது! மெதுவாக ''எந்த இடத்திலே?...'' என்று கேட்டான்.

''அடையாற்றிலே!'' என்றான் முருகேசன்.

கந்தசாமியின் மூளை கிர்ரென்று சுழல ஆரம்பித்தது. மனத்தில் பயம் பிடித்தது; உடல் ஒரேயடியாக வியர்த்துக் கொட்டியது.

''ஆமாம்...அடிச்சவங்க கொள்ளைக்காரங்கதானா, வேறே யாராவதா?...''

''அட, கொள்ளைக்காரங்கதானப்பா! வேறே யார்!'' கந்தசாமி சற்று நிம்மதி அடைந்தான். ஆனால் பின்னர் முருகேசன் கூறியது அவன் திகிலைக் கிளறியது.

அடையாறு பங்களாவில் கொள்ளைக் கூட்டம் தங்கியிருப்பதாகத் தகவல் கிடைத்ததன் பேரில் இன்ஸ்பெக்டர் அனகிரிசாமி நாயுடு தம்முடன் ஒரு பத்துப் பேர்களை அழைத்துக் கொண்டு 'ரெய்ட்' பண்ணுவதற்காகப் போனார். கான்ஸ்டபிள்களை வேலியோரமாக நிறுத்திவிட்டு, முதலில் அவர் மாத்திரம் பங்களா எல்லைக்குள் நுழைந்திருக்கிறார். இருளில் பதுங்கியிருந்த கொள்ளைக்காரன் ஒருவன் எதிர்பாராதவிதமாக அவரை மண்டைமேல் தாக்கியதும் அவர் மூர்ச்சித்து விழுந்து விட்டார். அவன் அவரைக் கட்டிப் போட்டு, ஷெட்டில் தள்ளி விட்டான். சிறிது நேரத்துக்குப் பிறகு அவரைத் தேடிக் கொண்டு போன மற்றக் கான்ஸ்டபிள்களையும் கொள்ளைக்காரர்கள் ஷெட்டில் அடைத்துப் பூட்டி விட்டனர்.

திருடர்கள் தப்பியோடுகையில் பங்களாவின் முன்புறத்

தில் காவலிருந்த ஏட்டுப் பிள்ளையை நையப் புடைத்து விட்டுப் போய்விட்டனர். அடிபட்ட கோவிந்தப் பிள்ளை எப்படியோ வந்து தகவல் கொடுத்த தன் பேரில் ஷெட்டில் சிறை வைக்கப்பட்டிருந்த இன்ஸ்பெக்டரும் போலீஸ்காரர்களும் மீட்கப்பட்டனர். கமிஷனர் இதைப் பற்றித் தீவிரமாக நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

கந்தசாமியின் பாடு வெலவெலத்து விட்டது. அவனது அடிவயிற்றில் நெருப்பை வாரிக் கொட்டியது போல் இருந்தது. கமிஷனரிடம் வெகுமதி கிடைக்கப் போகிறது என்று நினைத்த அவனுக்கு இப்போது, 'வெகுமதி வேண்டவே வேண்டாம், வீண் வம்பு வராமல் இருந்தால் போதும்' என்று தோன்றத் தொடங்கியது. பேச நா எழவில்லை. வார்த்தைகள் தொண்டையிலேயே சிக்கிக் கொண்டன. மிகுந்த பிரயாசையுடன், '' ஆமாம், திருடன்களைப் பற்றி அங்கே வேறு துப்பு கிடைச்சிருக்குதா?'' என்று கேட்டான்.

'' ஒரு துப்பும் கிடைக்கவில்லை. தோட்டத்திலே ஒரே ஒரு ஊதுகுழல் மாத்திரம் கிடந்ததாம். அதை ஊதிக் காண்பித்துத்தான் கொள்ளைக்காரரில் ஒருவன், போலீஸ் வந்திருந்த விஷயத்தை மற்றவர்களுக்கு எச்சரிக்கை செய்தானாம் !...''

அவன் மேலும் கூறினான்:

''பட்டணத்திலே பல இடங்களில் கொள்ளையடித்து லட்சக்கணக்கில் பெறுமானமுள்ள சொத்தை அங்கே பதுக்கி வைத்திருந்தார்களாம். ஆனால் திருடங்க போகிறபோது ஒரு துரும்புகூட விடாமல் எல்லாவற்றையும் வாரியிலே கொண்டு போயிட்டாங்களாம் !''

கந்தசாமியின் மனம் பீதியும், ஏமாற்றமும் விரக்தியும் ஒன்றுசேர்ந்த ஒருவித வேதனை உணர்ச்சியினால் துன்புறுத்தப்பட்டது. அவன் நினைத்தது என்ன? நடந்தது என்ன? அவன் பட்ட அத்தனை கஷ்டங்களும் காட்டில் காய்ந்த நிலவாக அல்லவா போய்விட்டன !....ராத்திரி யாராவது அவனுடைய முகத்தைப் பார்த்து விட்டிருந்தால் அவன் கதி ! இது என்ன போதாத காலம்? போதாத காலமல்ல, நல்ல காலம்தான் ! முதலிலேயே விஷயத்தை யாரிடமும் தம்பட்டம் அடித்து உளறி விடாமல் இருந்தோமே என்று எண்ணிப் பெருமூச்சுடன் திரும்பினான் அவன்.

* * *

கந்தசாமிக்கு இருந்த குழப்பத்தில் மாலையில் முத்துப் பிள்ளையைச் சந்திக்க வருவதாகக் கூறியிருந்ததையே மறந்து விட்டான். ஸ்டேஷனிலும் புதிதாக வந்து உட்கார்ந்திருந்த இன்ஸ்பெக்டர் பூவராகம் எடுத்ததற்கெல்லாம் சிடுசிடு வென்று விழுந்து கொண்டிருந்தார். மணி ஐந்தடித்தபோதுதான் கந்தசாமிக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது. உடனே ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிவிட்டு அவசரம் அவசரமாக டைமண்ட் பூங்காவை நோக்கி விரைவாக நடந்து சென்றான்.

ஆனால் புலவர் கூறிய விஷயங்களைப் பற்றி அதுவரையில் சிந்தித்துப் பார்க்கவே அவனுக்கு அவகாசம் கிடைக்கவில்லை. முதல்நாள் இரவு நடந்த அனர்த்தங்களை எண்ணிய போது புலவருடைய பேச்சைக் கேட்டால் புதுத் தொல்லை ஏதாவது முளைக்குமோ என்று அச்சமாக இருந்தது. ஆனாலும் சிங்காரியை நினைத்தபோது, அதுவும் அவன் தக்க சமயத்தில் முயற்சி செய்யாவிடில் அவள் அந்த முரடன் தங்கவேலுவுக்குச் சொந்தமாகி விடுவாள் என்பதை எண்ணியதும் அவன் மனம் எந்த ஆபத்தையும் வரவேற்கத் தயாராகியது.

முத்துப் புலவர் நாலரை மணி முதலே பூங்காவில் காத்திருந்தார். கந்தசாமியைக் கண்டதும், '' என்ன யோசனை பண்ணினாயா?'' என்றார்.

''வரவர என் உத்தியோக விஷயமாகப் பெரிய பெரிய தொல்லைகளெல்லாம் ஏற்படுதுங்க. இதனாலே வேறே ஏதாச்சும் கஷ்டம் ஏற்படுமோ என்றுதான் அஞ்சுகிறேன்'' என்றான் கந்தசாமி.

'' இது என்னப்பா, என்னைப்போல வயதானவர்கள் பயப்பட்டால் உன்னைப் போன்றவர்கள் தைரியம் சொல்ல வேண்டியதிருக்க நான் உனக்குச் சொல்லுவது! எதற்கும் மனம் சலித்துப் போகக் கூடாது. அவனவன் கடவுள் விட்ட வழியாகட்டும் என்று தன் கடமையை முறைப்படி செய்து கொண்டே போக வேண்டும். முடிவைப் பற்றியோ பலனைப் பற்றியோ சிந்திக்கவே கூடாது என்று கீதையில் கூடச் சொல்லியிருக்கிறது '' என்று கீதோபதேசம் செய்தார் கிழவர்.

வெகுவாகச் சமாதானப் படுத்தியதன் பேரில் கந்தசாமி கிழவரின் ஏற்பாட்டுக்கு இசைந்தான்.

''சரியாக ராத்திரி ஒரு மணிக்கு நீ தோட்டத்தில் என் அறைப் பக்கமாக வா. ஜன்னல் வழியாக அதைக் கொடுத்து விடுகிறேன். பிறகு காலையில் எட்டு மணிக்கெல்லாம் இதே இடத்தில் நாம் சந்தித்து மேற்கொண்டு நடக்க வேண்டியவற்றைப் பற்றி ஆலோசிக்கலாம் '' என்றார் கிழவர்.

நீடித்திருக்கும் புத்துணர்ச்சி!



# லக்மி

## டால்கம் பவுடர்

உங்களுடைய சருமத்திற்கு
மணிக்கணக்காய் பேரின்பத்
தையும், புத்துணர்ச்சியையும்,
மென்மையையும் அளிக்கும்
டால்கம். உன்னதமான
பிரஞ்சுக் கலையுடன் கூடிய
மலர் மணத்தை நாள் முழு
வதும் அனுபவிப்பீர்கள்.

**லக்மி** பிரைவேட் லிமிடெட் ஒரு டாடா தயாரிப்பு

பாம்பே ஹவுஸ், ப்ரூஸ் தெரு, பம்பாய்-1.

LKM-50 TM. EVEREST

# கால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

வீரிய குளோரோபிலின்

# பூரணநன்மைகளை




ஜயண்ட்
சைஸ்
லாபகரம்

## வீரிய குளோரோபில்தான் உங்களுக்கு நன்மைதரவல்லது!

வாயில் தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்குப் புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தையாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப்படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளை பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின் சேர்ந்தது.

---

## பார்வைக்கு தென்படுவதைக்காட்டிலும் அதிகம்



இந்த பளபளப்பான ரேடியோ செட்டுகளில் ரேடியோ தயாரிப்பில் பழுத்த அனுபவமும் நாடு முழுவதும் ஆங்காங்கு நம்பிக்கைக்கு உகந்த வியாபாரிகளின் சேவையாற்றலும் அடங்கியுள்ளது. பிலிப்ஸ் வியாபாரிகள் வாடிக்கைக்காரர்களிடத்தில் சிநேகபாவமும், அக்கறையும் கொண்டவர்கள். அவர்களிடம் பழகி வியாபாரம் செய்வதில் ஒரு தனிப்பட்ட குதூகலம் காண்பீர்கள். தாங்கள் விற்பனை செய்யும் பொருள்களைப்பற்றி அலாதியான பெருமை கொண்டவர்கள். மேலும் உங்கள் தேவைகளை உடனுக்குடன் பூர்த்திசெய்யவல்ல சேவை இலாகாவையும் வைத்திருக்கிறார்கள். பிலிப்ஸில் விற்பனையும், சேவையும் ஒன்றாகவே பிலிப்ஸில் இணைக்கப்பட்டுள்ளன. ரேடியோ பிரச்னைகள் எதுவாயிருந்தாலும் . . .

. . . அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் ஒப்படைத்துவிடுங்கள்






பிலிப்ஸ் இந்தியா
லிமிடெட்

நாதத்தில் ஒரு புதிய உலகம்

### பிலிப்ஸ்
### நோவோஸோனிக்
### ரேடியோ

சமீபத்திலுள்ள பிலிப்ஸ் வியாபாரியை பார்த்து விபரங்கள் கேட்பதுமன்னியில், பிலிப்ஸ் ரேடியோவின் ஒலியையும் நாதத்தையும் அனுபவித்தும் பாருங்கள்.

கந்தசாமி ஆகட்டும் என்று தலையை ஆட்டினன். ''மறக்காதே! ஒருமணி!'' என்று கூறி அவனிடம் விடைபெற்றுக் கொண்டார் முத்துப் புலவர்.

• • •

முத்துப் புலவர் தமது வீட்டை நெருங்கிய சமயத்தில் இருட்டத் தொடங்கி விட்டது. தோட்டத்துக் கதவைத் திறந்து கொண்டு நுழைந்த போது வீட்டின் இடது புறத்து மதில் சுவரின் இடது மூலையிலிருந்த அவரைப் பந்தலருகில் யாரோ நிற்பது போலிருந்தது. அவர் கண்களை இடுக்கிக் கொண்டு கவனித்தார். நிச்சயமாகக் கண்ணம்மாவோ சிங்காரியோ இல்லை. யாராக இருக்கலாம் என்று பார்ப்பதற்காக மெதுவாக அவ்விடத்தை நோக்கி அடி வைத்தார். அருகே சென்று பார்த்த போது எவரையும் காணவில்லை. வயதாகி விட்டதால் பார்வைக் கோளாருகத்தான் இருக்குமென்று எண்ணிக் கொண்டே புலவர் சந்தடியின்றித் தமது அறைக்குள் நுழைந்தார்.

## பதினுரும் அத்தியாயம்

# கொள்ளை போயிற்று

தன் மகளின் எதிர்காலத்தை உத்தேசித்துப் புலவர் சிறுபிள்ளைத்தனமான காரியத்தில் திடச் சித்தத்தோடு இறங்கியிருந்தார். ஆனல் சிங்காரியிடம் தமது ஏற்பாடுகளைப் பற்றி மூச்சுக்கூட விடவில்லை. கண்ணம்மாள் வீட்டிலில்லாத சமயம் பார்த்துச் சிங்காரியையும் ஏதோ வேலையாக வெளியில் அனுப்பி விட்டு, இருவரும் இல்லாத சமயத்தில் பூட்டுகளுக்கு மறு சாவி தயாரித்துத் தயாராக வைத்துக் கொண்டார்.

இரவு சுமார் ஒரு மணிக்கு இன்னும் பதினைந்து நிமிடங்கள் தானிருக்கும். கந்தசாமி மனத்தில் திகிலுடன் புலவரின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். அதே நேரத்தில் புலவர் மெதுவாக எழுந்து தம் அறையை விட்டு வெளியே வந்தார்.

அவரது அறைக்கு எதிர்ப்புறத்து அறையில் சிங்காரி உறங்கிக்கொண்டிருந்தாள். கண்ணம்மாள் கூடத்தில் போட்டிருந்த கட்டிலில் படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். கிழவர் சந்தடியின்றி இருட்டில் தடவிக் கொண்டே கூடத்தைத் தாண்டினுர். கண்ணம்மாள் விழித்துக் கொண்டு விடுவாளோ என்ற பயத்தில் அவரது மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது.

தைரியத்தை விடக் கூடாது என்று எவ்வளவுதான் முயன்றபோதிலும் கால்கள் வெடவெடவென்று நடுங்கத்தான் செய்தன. கூடத்தைத் தாண்டிப் பின்கட்டு இடைவழியில் நுழைந்தால் வலது பக்கத்திலிருந்த சிறிய அறையில் தான் பீரோ இருந்தது. கண்ணம்மாள் படுத்திருந்த இடத்தைத் தாண்டி நாலடி வைத்திருப்பார். திடீரென்று வழியில் போட்டிருந்த முக்காலிச் சனியன் புலவரின் காலில் இடறித் தடபுடவென்று உருண்டு விழுந்தது.

அவருக்கு உயிரே போய் விட்டது போலிருந்தது. 'சரிதான் போட்ட 'திட்டம்' பூராவும் தொலைந்தது! கண்ணம்மாளிடம் கையும் பிடியுமாக மாட்டிக் கொள்ளப் போகிறோம்' என்று நினைத்து மூச்சைப் பிடித்துக் கொண்டு சுவரோரமாகப் போடப்பட்டிருந்த பாத்திரச் சாமான் பெட்டிக்குப் பின்னுல் ஒண்டிக் கொண்டு உட்கார்ந்தார்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று விநாடிகள் பறந்தன. ஆனல் கண்ணம்மாள் விழித்துக் கொள்ளாதது புலவருக்கு ஆச்சரியமாக இருந்தது. அவளது குறட்டை இன்னும் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

ஓரிரண்டு நிமிடங்களுக்குப் பின் மீண்டும் எழுந்தார். குறி வைத்த இடத்தை அடைந்ததும் அறைக் கதவின் பூட்டைத் திறப்பதற்காகத் தொட்டுப் பார்த்தார். ஆனல் கதவு பூட்டப்படாமல் இருந்தது அவருக்கே வியப்பாக இருந்தது. பிறகு நடந்தவை வெகு எளிதாக முடிந்து விட்டன. சந்தடியின்றித் தம்மிடமிருந்த சாவியால் பீரோவைத் திறந்து இரண்டே இரண்டு கட்டுகளை மட்டும் எடுத்துக் கொண்டு அடி மேல் அடி வைத்துத் தமது அறைக்கு வந்து சேர்ந்தபிறகுதான் அவருக்குச் சரியாக மூச்சு வந்தது.

கார்ப்பொரேஷன் கடிகாரத்தில் மணி 'டங்' என்று ஒன்று அடித்தது. கந்தசாமி காளிங்கராயன் தெருவை அடைந்து விட்டான். வீதியில் ஜன நடமாட்டமே இல்லை. வானத்துச் சந்திரன் மேகக் குவியல்களில் ஒளிந்து கொள்ளுவதும் வெளியே வருவதுமாகக் கண்ணு மூச்சி விளையாடிக் கொண்டிருந்தது.

புலவரின் வீட்டை நெருங்கியதும் அவனது வேகம் குறைந்தது. அதிஜாக்கிரதையாக நாற்புறமும் பார்த்துவிட்

டுத் தோட்டத்துக் கதவை மெதுவாகத் திறக்கப் போகும் சமயத்தில் வலப் பக்கத்துக் காம்பவுண்டு சுவர் அருகில் ஒரு மனித உருவம் பதுங்குவதைக் கண்டான் கந்தசாமி.

உள்ளத்தில் வியப்பும் பீதியும் ஒருங்கே எழுந்தன. 'ஒருகால் மூத்துப் பிள்ளையாக இருக்குமோ? அவன் வரத் தாமதமாகிவிட்டதென்று தேடிப் பார்ப்பதற்காக வெளியே வந்தாரோ?....' என்று நினைத்தான். ஆனால் அந்த உருவம் அவரைப் போல் குட்டையாக இல்லை.

அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் அம்மனிதன் 'சடக்' என்று சுவரை ஒரே தாண்டாகத் தாண்டிப் பக்கத்துச் சந்தில் குதித்தான்.

அவ்வளவுதான்; கந்தசாமிக்குச் சந்தேகம் தட்டி விட்டது. அதற்குமேல் அவனால் யோசித்துக் கொண்டு நிற்க இயலவில்லை. 'திபு திபு' வென்று காம்பவுண்டைச் சுற்றிக் கொண்டு ஓடிப் பக்கத்துச் சந்துக்குள் நுழைந்தான். ஆனால் அவன் எண்ணியபடி அங்கே யாரையும் காணவில்லை. அந்தச் சந்து நேராக ஒரு பர்லாங் தூரம் சென்ற பின் ஐயாப்பிள்ளை வீதியில் கலக்கிறது. இடையில் திருப்பங்கள் ஏதுமில்லை என்பதை அவன் அறிவான். ஆகையால் இதற்குள் ஆசாமி ஓடி மறைந்திருக்க முடியாது. இங்கேதான் எங்கேயாவது இருட்டில் பதுங்கிக் கொண்டிருப்பான் என்ற அநுமானத்துடன் வலப் பக்கத்திலுள்ள ஒரு பெரிய குப்பைத் தொட்டியின் அருகில் வந்தான். அதே கணம் அவனது இடது கண்ணின்மீது ''திம்'' என்று ஒரு பலமான குத்து விழுந்தது.

எதிரே மின்மினிப் பூச்சிகள் பறந்தன. விழியே போய் விட்டதோ என்று எண்ணும்படி. கண்ணில் அசாத்தியமான வலி ஏற்பட்டது. கையினால் கண்ணைப் பொத்திய வண்ணம் அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டான்.

மூத்துப் புலவர் அறைக் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு ஜன்னல் அருகில் பதைபதைப்போடு இருட்டில் உட்கார்ந்திருந்தார். மணி ஒன்றடித்து விட்டது. கந்தசாமியைக் காணவில்லை. சிறுசிறு சத்தங்கள் கேட்கும்போதெல்லாம் அவன்தான் வந்து விட்டான் என்று எழுந்து எழுந்து உட்கார்ந்தார். நேரம் போய்க் கொண்டிருந்தது. முனிசிபல் கடிகாரம் ஒன்றரை, இரண்டு, மூன்று என்று ஒலித்துக் கொண்டே போயிற்று. அவன் வரவேயில்லை. புலவர் நம்பிக்கையை இழந்தார்.

கையில் வைத்திருந்த நோட்டுக் கட்டுகளை என்ன செய்வது என்று தெரியவில்லை. திருப்பிக் கொண்டு போய் வைக்க முயலுவது ஆபத்து. அறையினுள் வைத்திருப்பதற்கும் பந்தோபஸ்தான இடம் இல்லை.

கடைசியில் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. எதற்கும் காலை எட்டு மணிக்குக் கந்தசாமி பூங்காவுக்கு வருவான், அப்போது கொண்டுபோய் அவனிடம் கொடுத்துவிட வேண்டியது என்ற தீர்மானத்துடன், கட்டுகள் இரண்டையும் தமது புஸ்தகக் குவியலுக்கு அடியில் சொருகி வைத்து விட்டுப் படுத்துக் கொண்டார்.

விடியற்காலையில் அவருக்கு ஆழ்ந்த உறக்கம் வந்தது. தூக்கத்தில் போலீஸ்காரர்கள் வருவது போலவும் அவருக்கு விலங்குகள் மாட்டி இழுத்துச் செல்வது போலவும் சிங்காரி ''அப்பா! அப்பா!'' என்று கதறுவது போலவும் என்னென்னவோ கனவுகள் தோன்றின.

தாளிடப்பட்டிருந்த கதவு 'தட தட' வென்று தட்டப்பட்டது. சிங்காரி வாஸ்தவமாகவே 'அப்பா, அப்பா' என்று கூப்பிட்டாள். புலவர் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து கதவைக் கொஞ்சமாகத் திறந்து இடுக்கு வழியாக, கனவில் கண்டபடி யாராவது போலீஸ்காரர்கள் வந்திருக்கிறார்களா என்று எட்டிப் பார்த்தார். கூடத்தில் கண்ணம்மாள் 'லபோ திபோ' என்று கத்திக் கொண்டிருந்தாள்.

''அப்பா! சின்னம்மாவுடைய பணமெல்லாம் கொள்ளை போயிடுச்சாம்!''

''கொக்..கொக்...கொள்ளையா?'' என்று குளறினார் புலவர்.

''ஆமாம், அப்பா! பீரோ அறையை ராத்திரி பூட்டி வைத்துவிட்டுப் படுத்துக் கொண்டாளாம். காலையில் பார்த்தால் பூட்டு அங்கே இல்லையாம்! உள்ளே பீரோவும் திறந்து கிடந்ததாம். அதில் வைத்திருந்த நோட்டுக் கட்டுகளைக் காணவில்லையாம்.''

புலவருக்குக் குலை நடுக்கம் எடுத்தது.

''எல்லாக் கட்டையுமா காணவில்லை? அதெப்படி இருக்கும்?'' என்றார் அவர். ஏனெனில் அவர் எடுத்தது இரண்டே இரண்டு கட்டுகள் தாமே!

''ஆமப்பா! ஒன்றுகூட இல்லையாம்!''

கண்ணம்மாள் வெறி பிடித்தவள் போல் அங்கே வந்தாள். உள்ளே வந்து தன் அறையைச் சோதனை போட்டு விடுவாளோ என்று அவருக்கு உள்ளூற நடுக்கம். வாசற்படியை மறித்து நின்றார்.

''எல்லாம் போயிடிச்சே! குடி முழுகிப் போச்சு! போங்க போங்க! சீக்கிரமாய்ப் போலீஸை அழைச்சுக்கிட்டு வாங்க!'' என்றாள் அவள். (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

**பத்மினி** கூறுகிறார்: "எப்பொழுதும் நான் உபயோகிப்பது தூய, வெண்ணிற லக்ஸ் டாய்லெட் சோப்!"

பாரதக் கலைச் செல்வியான பத்மினி மிகவும் சுறுசுறுப்பான நட்சத்திரம். எனினும், மணம் கமழும், தூய, வெண்ணிற லக்ஸ் டாய்லெட் சோப்பை உபயோகித்து தமது மேனியை மென்மையுடனும் மழமழப்புடனும் வைத்திருக்க அவர் மறந்து விடுவதில்லை.

லக்ஸ் டாய்லெட் சோப்பை நீங்களே உபயோகித்துப் பாருங்கள். அதி விரைவிலேயே அதன் பேரில் உங்களுக்கும் பற்றுதல் ஏற்பட்டுவிடும்.

## லக்ஸ் டாய்லெட் சோப்




சினிமா
நட்சத்திரங்களின்
அழகுசாதன சோப்

LTS. 543-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு